இலவசம் Eelamurasu-Canada
# ஈழமுரசு
கனடா
முரசு:15 இதழ்:537 பெப்ரவரி 24 முதல் மார்ச் 03 - 2010 வரை



# வெளிநாட்டு வலையமைப்பை முறியடிக்க கோத்தபாயவுடன் கே.பி. இணைவு?



## சிறிலங்காவில் போரும் அமைதியும்

## ஈழத்தமிழர் மீதான இன அழிப்புத் திட்டத்தை நிறுத்துவது யார்? ஐ.நா.வா? மீண்டும் ஆயுதப் போராட்டமா?

ஈழமுரசு கனடா

EELAMURASU CANADA

நிர்வாகி
நிசாந்தன்

பிரதம ஆசிரியர்
ரஞ்சன்

ஆசிரியர் குழு
ஐ.சண்முகநாதன்
ஈசன், செல்வராஜா
சிவா பரஞ்சோதி

அலுவலக நிர்வாகம்
இ.கந்தசாமி

வரைகலை
அனு கிராபிக்ஸ்

அலுவலகம்
2625 EGLINTON AVE EAST #2
SCARBOROUGH ,ON.M1K 2S2
தொலைபேசி / Telephone
416-291-7474
Cell:416•857•3941
தொலைநகல்/ Fax
416•291•7472
மின் அஞ்சல்/ Email
Eelamurasucanada@yahoo.com

மொன்றியல்
514-944-9315

அனைத்துலக அலுவலகங்கள்

பிரான்ஸ்
00 31 140 05 95 15
பிரித்தானியா
078 8679 0198
சுவிஸ்
079 828 6871
ஜேர்மனி
0208 205 99 103
இத்தாலி
091 6824056
டென்மார்க்
75366279
நோர்வே
22 425 527
நெதர்லாந்து
076 5425804
அவுஸ்திரேலியா
61 3 8802 8368



"விடுதலை என்பது ஒரு தேசியக்கடமை. இதில் ஒவ்வொருவருக்கும் பங்களிப்பு உண்டு. ஒரு தேசிய நெருக்கடியால் பிறக்கும் துன்பத்தை முழுத் தேசிய இனமுமே பகிர்ந்து கொள்ள வேண்டும். இந்தத் தேசியச் சுமையைச் சமூகத்தின் அடிமட்டத்திலுள்ள ஏழைகள் மட்டும் தாங்கிக்கொள்ள அனுமதிப்பது, நாம் எமது தேசத்திற்குப் புரியும் துரோகம் என்றே சொல்லவேண்டும் "



தமிழீழத் தேசியத்தலைவர் மேதகு வே.பிரபாகரன்

# வெளிநாட்டு வலையமைப்பை முறியடிக்க கோத்தபாயாவுடன் கே.பி இணைவு?

(19.02.2009, வெள்ளிக்கிழமை)

விடுதலைப் புலிகளின் வெளிநாட்டு வலையமைப்பை முறியடிக்க சிறீலங்காவின் பாதுகாப்பு செயலரும், ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவின் சகோதரருமான கோத்தபாய ராஜபக்சவுடன் விடுதலைப் புலிகளால் கடந்த 2009 ஜனவரி இறுதியில் வெளிவிவகாரத்திற்கு பொறுப்பாக நியமிக்கப்பட்டு, முள்ளிவாய்க்கால் முடிவிற்குப் பின்னர் மலேசியாவில் வைத்து கைது செய்யப்பட்டதாக கூறப்படும் கே.பி என அழைக்கப்படும் குமரன் பத்மநாதனும் இணைந்து செயற்படுவதாக கொழும்பில் இருந்து கிடைக்கும் செய்திகளும், புலம்பெயர்ந்த நாடுகளில் உள்ள தமிழர்கள் சிலரிடம் இருந்து எமக்குக் கிடைத்த செய்திகளும் உறுதிப்படுத்துகின்றன.

விடுதலைப் புலிகள் வெளிநாடுகளில் மிகப்பெரும் வலையமைப்பை கொண்டுள்ளனர் என்றும் அவற்றில் பெருமளவானவற்றை தாங்கள் முறியடித்துள்ளதாகத் தெரிவித்துள்ள சிறீலங்காவின் பாதுகாப்புச் செயலர் கோத்தபாய ராஜபக்ச, எனினும் அதனை முறியடிக்கும் பணிகள் மேலும் தொடரப்பட வேண்டும் என்றும், அவை தொடரும் என்றும் தெரிவித்துள்ளார். பாதுகாப்பு செயலாளராக தான் இருக்கும் நிலையில் நாட்டில் உறுதித்தன்மையை ஏற்படுத்த வேண்டிய பொறுப்பில் உள்ளதாகவும், எனவே வெளிநாடுகளில் அதனை முறியடிக்கும் பணிகள் தொடரப்படும் என்றும் அவர் கூறியுள்ளார்.

இந்நிலையில், தற்போது இந்த முறியடிப்பிற்கு கோத்தபாய ராஜபக்சவினால் நேரடியாக இறக்கிவிடப்பட்டுள்ள குமரன் பத்மநாதன், இதுதொடர்பாக தனது ஆதரவாளர்கள் சிலருடன் சந்திப்புக்களை மேற்கொள்வதற்காக சில வெளிநாடுகளுக்கு அவர் பயணங்களையும் மேற்கொண்டிருந்தார் என்றும் தெரியவந்துள்ளது.

தற்போது கொழும்பில் தங்கியிருந்துகொண்டு புலம்பெயர்ந்த நாடுகள் எங்கும் இருக்கின்ற தனது ஆதரவாளர்கள் மூலம்,- விடுதலைப் புலிகளின் வலையமைப்பை தகர்க்கும் நடவடிக்கையில் இவர் இறங்கியுள்ளதாக தெரியவந்துள்ளது. இதில் குறிப்பாக ஐரோப்பிய நாடுகள் மற்றும் கனடா, அவுஸ்திரேலியா நாடுகளில் இந்த கட்டமைப்பு உடைப்பு நடவடிக்கை தற்போது துரிதகரமாக முன்னெடுக்கப்பட்டுள்ளதாக தெரியவருகின்றது.

தற்போது புலம்பெயர்ந்த தமிழர்கள் சிலருடன் தொலைபேசியூடாக தொடர்புகளை ஏற்படுத்தியுள்ள குமரன் பத்மநாதன், மகிந்தவிற்கு ஆதரவான செயற்பாடுகளில் ஈடுபடுமாறு தனது ஆதரவாளர்களுக்கு அறிவுரை கூறி வருவதாகவும், அத்துடன், விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக செயற்படுவர்கள் குறித்து ஆராய்ந்து தனக்கு தகவல்களை வழங்குமாறு வலியுறுத்தி வருவதுடன், மகிந்த ராஜபக்சவிற்கு எதிராக சர்வதேச ரீதியாக வலுப்பெற்றுவரும் எதிர்ப்பலைகளை தணித்து, புலம்பெயர்ந்த தமிழர்களின் மகிந்த அரசிற்கு எதிரான செயற்பாடுகளை தடுத்து நிறுத்தும் பணிகளையும் மேற்கொள்ளுமாறு இவர் தனது ஆதரவாளர்களிடம் கோரியுள்ளதாகவும் தெரியவருகின்றது.

தனக்கு நெருக்கமான சிலரது தொலைபேசி இலக்கம் கிடைக்காத நிலையில், பல்வேறு வழிகளினூடாக அவர்களின் தொலைபேசி இலக்கங்களை தேடிப் பெற்று இவர் தொடர்புகளை....

(தொடர்ச்சி 36ம் பக்கம்)




சிறீலங்கா தூதரகங்களின் முன்னால் தமிழ் மக்கள் போராடிய காலம்போய், இப்போது சிங்கள மக்கள் நீதி கேட்டுப் போராடும் காலமாக மாறியுள்ளது. ஜனநாயகத்தை நிலைநிறுத்து என தமது அரசுக்கு எதிராகவே போராடவேண்டிய நிர்ப்பந்தம் இன்று சிங்கள மக்களுக்கு எழுந்துள்ளது. இது பிரான்சின் சிறீலங்கா தூதரகம் முன் நடக்கும் ஒரு போராட்டம்.

ஈழமுரசு

## தேசியத்தை இழந்ததன் பின் தேசியக் கூட்டமைப்பு எதற்கு?

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு வரும் சிறீலங்காவின் நாடாளுமன்றத் தேர்தலில் மூன்று துண்டுகளாக சிதறுண்டு போட்டியிடவுள்ளதாக அறிய வருகின்றது. சம்பந்தர் தலைமையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு என்ற அணியும், சிவாஜிலிங்கம், சிறீகாந்தா போன்றவர்கள் இடதுசாரி முன்னணியுடன் இணைந்தும், எந்தக் கட்சிகளையும் சாராது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் இருந்த முன்னைய நாடாளுமன்ற உறுப்பினர்கள் இன்னொரு பிரிவாகவும் போட்டியிடவுள்ளதாக தெரியவருகின்றது.

தமிழ்த் தேசியம் சார்ந்த சிந்தனை கொண்டவர்களை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் இருந்து வெளியேற்றி விட்டு, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் ஒரு புதிய அணியை உருவாக்கி இந்தத் தேர்தலில் போட்டியிட விரும்பிய சம்பந்தன் தலைமையிலான அணியினரின் செயற்பாட்டினாலேயே இந்த நிலைமை ஏற்பட்டதாகவும் தெரியவருகின்றது.

விடுதலைப் புலிகள் சம இராணுவப் பலத்தோடு இருந்தபோது எதிரெதிர் கருத்து நிலைப்பாடுகளைக் கொண்டுள்ளபோதும் தமிழீழத் தேசியம் தொடர்பாக ஒருமித்த கருத்தைக் கொண்டிருக்கும் சக்திகளை ஒன்றிணைத்து, தமிழ் மக்களின் அரசியல் சக்தியாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை உருவாக்கினார்கள் என்பது யாவரும் அறிந்த ஒரு விடயம். விடுதலைப் புலிகளால் முன்னெடுக்கப்பட்ட தாயகம், தேசியம், தனியாட்சி உரிமை என்ற கோட்பாட்டை ஏற்றுக்கொண்ட தமிழரசுக் கட்சி உட்பட விடுதலைப் புலிகளால் தடை செய்யப்பட்டிருந்த இயக்கங்களின் தமிழீழ தேசியத்தை ஏற்றுக்கொண்ட கட்சி உறுப்பினர்களும் பகைமையை மறந்து இந்த கூட்டமைப்பிற்குள் உள்வாங்கப்பட்டார்கள். சம்பந்தன் அவர்களின் வயது, அரசியல் அனுபவத்தை கருத்தில்கொண்டு இந்தக் கூட்டமைப்பின் தலைமைப் பொறுப்பும் அவரிடம் வழங்கப்பட்டது.

மக்களால் விரும்பப்பட்ட, ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு கட்சியாக இது உருவாகியிருந்தமையினாலேயே, மக்கள் இந்தக் கூட்டமைப்பை தமது அரசியல் சக்தியாக உள்வாங்கிக்கொண்டு, கடந்த நாடாளுமன்றத் தேர்தலில் பெருவாரியான வாக்குகளை வழங்கி, போட்டியிட்ட பெரும்பான்மையான வேட்பாளர்களை வெற்றிபெறவும் வைத்தார்கள். இதனாலேயே முதல் தேர்தலிலேயே 22 ஆசனங்களை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினால் வடக்கு, கிழக்கில் இருந்து பெறமுடிந்தது.

இன்று பாரிய மாற்றங்களை தமிழினம் சந்தித்து விட்டது. தமது ஏக பிரதிநிதிகளான விடுதலைப் புலிகள் முள்ளிவாய்க்காலில் எடுத்த முடிவின் அடிப்படையில், மௌனமாகிப் போயுள்ள வெற்றிடத்தில், இப்போது தலைமைக்கான போட்டிகள் கடுமையாகியுள்ளன. இந்தப் போட்டியினால், தமிழ் மக்களின் எதிர்கால நலன்களைக் கருத்தில் கொள்ளாது, தங்கள் சுயநலன் சார்ந்த முடிவுகளை ஒவ்வொருவரும் தங்கள் விருப்பம் போன்று எடுக்கத் தொடங்கியுள்ளனர். இந்த நிலையில், தமிழ் மக்களின் ஒரே அரசியல் சக்தியாக இருந்து, பொறுப்பாக நடந்துகொள்ள வேண்டிய தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு அதனை மேலும் சிதைக்கின்ற வகையில் செயற்பாடுகளை முன்னெடுத்த வருவதானது, தமிழ் மக்களுக்கு பெரும் அதிர்ச்சியையும் கோபத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

எந்தக் குறிக்கோளுடன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உருவாக்கப்பட்டதோ, அந்தக் குறிக்கோளையும் மறந்து, வரும் தேர்தலில் தேசியக் கூட்டமைப்பின் உறுப்பினர்கள் துண்டாக உடைந்து வாக்குகளை சிதைத்து நாடாளுமன்றத்தில் தமிழ் மக்களின் அரசியல் பலத்தை மழுங்கடிக்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ளமையானது மிகவும் திட்டமிட்ட ஒரு நடவடிக்கையாகவே பார்க்க முடிகின்றது. ஏற்கனவே, தமிழ் மக்களின் ஆயுதப் போராட்டத்தை மிகவும் திட்டமிட்ட ரீதியில் அடக்கி தமிழர்களின் இராணுவ பலத்தை சிதைத்தவர்கள், தற்போது அரசியல் பலத்தையும் சிதைப்பதற்கு மிகவும் திட்டமிட்டு காய்களை நகர்த்தி வருகின்றார்கள் என்பது வெளிப்படையானது.

இந்தக் காய்நகர்த்தலுக்குள் அகப்பட்டு, தேசியத்தைப் பற்றி வாய் திறப்பவர்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் இருக்கமுடியாது என்று சொல்பவர்கள், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எதற்காக உருவாக்கப்பட்டது என்பதை மறந்தவர்களாகவே கருத இடமுண்டு. அவ்வாறான முடிவை கூட்டமைப்பின் தலைமைப் பொறுப்பை வகிக்கும் திரு.சம்பந்தன் அவர்கள் எடுப்பதானது, பல்வேறு கேள்விகளையே தமிழ் மக்கள் மத்தியில் ஏற்படுத்தியுள்ளது.

தமிழ் மக்களின் சொந்த விருப்புக்களுக்கு அப்பால், மற்றவர்களின் விருப்பிற்காக சம்பந்தன் அவர்கள் நடந்துகொள்வாரேயாக இருந்தால், தமிழ் மக்களால் நிச்சயமாக அவர் தூக்கியெறியப்படுவார் என்பது திண்ணம்.

**தேசியத்தை இழந்ததன் பின்,**
**தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எதற்கு?**
என்பதை சம்பந்தர்கள் சிந்திக்க வேண்டும்.

# தமிழினப் படுகொலையை மறைக்க, படாதபாடு

## உண்மையை அம்பலப்படுத்தும் ஐ.நாவின் முன்னாள் பேச்சாளர்

மிகவும் திட்டமிட்ட ரீதியிலேயே தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டுள்ளனர் என்பதை தற்போது வெளியாகும் செய்திகள் உறுதிப்படுத்திக் கொண்டிருக்கின்றன. பதவியை விட்டு விலகியதன் பின்னரே உண்மையை ஒத்துக்கொள்ளும் நிலையில் இன்று உலகின் பொறுப்பு வாய்ந்த அதிகாரிகள் இருக்கின்றார்கள். அந்த வரிசையில் தற்போது பதவி விலகியதன் பின் உண்மைகளை வெளியிட்டு ஐ.நாவிற்கும் சிறீலங்காவிற்கும் அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளார் இலங்கைக்கான ஐ.நா வின் முன்னாள் பேச்சாளர் கோர்டன் வைய்ஸ். சிறீலங்கா அரசிற்கும், விடுதலைப் புலிகளுக்கும் இடையிலான மோதலின் இறுதிக் கட்டத்தில் சுமார் 40 ஆயிரம் பொதுமக்கள் வரை கொல்லப்பட்டிருக்கலாம் எனவும், சிறீலங்கா அரசை சர்வதேச யுத்தக் குற்ற விசாரணைக்கு உட்படுத்த வேண்டும் எனவும் அவுஸ்திரேலியாவின் ஏ.பி.சி. செய்திச் சேவைக்கு அளித்துள்ள பேட்டியிலேயே அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

உக்கிரமான கடைசிக் கட்டப் போரின்போது பல உண்மைத் தகவல்களை வைய்ஸ் அப்போதே வெளியிட்டுக் கொண்டிருந்ததால் அவர் மீது சிறீலங்கா அரசு கடும் ஆத்திரத்துடன் இருந்தது. நாட்டை விட்டு வெளியேறுமாறும் சிறீலங்காவினால் பணிக்கப்பட்டார். இதன்போது ஐ.நா. பொதுச் செயலாளர் பான் கி மூன் கூட வைய்ஸைக் கட்டுப்படுத்த முயற்சித்தார் என்றும் செய்திகள் வெளியாகின என்பது நினைவிருக்கலாம்.

இவ்வாறு நெருக்கடிகளை எதிர்கொண்ட வைய்ஸ், ஐக்கிய நாடுகள் சபைக்கான தனது 14 வருட சேவையில் இருந்து அண்மையில் பதவி விலகியுள்ளார். தற்போது அவுஸ்திரேலியாவில் தங்கியுள்ள கோர்டன் வைய்ஸ் இலங்கை மோதல் குறித்து புத்தகமொன்றை எழுதி வருகிறார்.

சிறீலங்கா அரசு சர்வதேச சமூகத்தை ஏமாற்றியது எனத் தனது பேட்டியில் குறிப்பிட்டுள்ள அவர் மேலும் தெரிவித்துள்ளவை வருமாறு, சுமார் 10 ஆயிரம் முதல் 40 ஆயிரம் வரையிலான பொதுமக்கள் ஜனவரிக்கும் மே மாதத்திற்கும் இடையில் பலியாகினர் என நான் கேள்விப்பட்டேன்.

பாதுகாப்பு வலயத்திற்குள் இருந்த நம்பகத்தன்மை மிக்க வட்டாரங்களே இதனைத் தெரிவித்தன. பொதுமக்கள் பாதுகாக்கப்படுவார்கள் என ஐக்கிய நாடுகள் செயலாளர் நாயகத்திற்கு சிறீலங்கா அரசு தொடர்ச்சியாக இக் காலப் பகுதியில் உறுதியளித்து வந்தது. பொதுமக்களுக்கு எவ்வித உயிரிழப்பும் ஏற்படாது, இதுவே பல வருடங்களாக சிறீலங்கா இராணுவத்தின் பாரம்பரியமாகவும், வழிகாட்டும் கொள்கையாகவும் உள்ளது, பொதுமக்களின் உயிர்களைப் பாதுகாப்பதற்காக கனரக ஆயுதங்கள் பயன் படுத்தப்படமாட்டா என்றெல்லாம் சிறீலங்கா அரசு தெரிவித்து வந்தது.

எனினும், கொல்லப்பட்டவர்கள் என நான் கருதும் பொதுமக்களின் எண்ணிக்கையைக் கருத்தில் கொள்ளும்போது நிலைமை வேறு மாதிரியாக இருந்தது புலனாகின்றது. சகல விதமான ஆயுதங்களும் பயன் படுத்தப்பட்டன. துப்பாக்கிகள் போன்ற சிறிய ஆயுதங்கள் முதல் மோட்டார்கள், ஆட்டிலறிகள் முதலிய கனரக ஆயுதங்கள் வரை விடுதலைப் புலிகளின் நிலைகளைத் தகர்ப்பதற்குப் பயன்படுத்தப்பட்டன.

பொதுமக்கள் குறித்து போதிய கவனம் எடுக்கப்படவில்லை. சிறீலங்கா அரசு தெரிவித்த பல விடயங்கள் பொய்யானவை. சர்வதேச சமூகத்தை ஏமாற்றும் நோக்க முடையவையாகவும் அவை காணப்பட்டன.

அரசு தனது நடவடிக்கைகளை முன்னெடுப்பதற்காகப் போர் முனையில் சிக்கியிருந்த மக்களின் எண்ணிக்கையை வேண்டுமென்றே குறைத்துக் கூறியது என அரச அதிகாரியொருவரே ஏற்றுக்கொண்டிருந்தார். விடுதலைப் புலிகளும் மக்களைத் தமது கட்டுப்பாட்டு பகுதியிலிருந்து வெளி யேறுவதைத் தடுக்க முயன்றனர். இலங்கை அரசை சர்வதேச விசாரணைக்குட்படுத்த வேண்டும் என்றார் அவர்.

இதேவேளை, கோர்டன் வைய்ஸ் தெரிவித்த கருத்துக்கள் ஐ.நா. சபையை பிரதிநிதித்துவப்படுத்த மாட்டாது என்று சிறீலங்காவில் உள்ள ஐ.நா வதிவிட ஒருங்கமைப்பாளர் பணிமனை தெரிவித்துள்ளது. குறிப்பிட்ட எந்தவொரு விடயம் குறித்தும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் மொத்தமான கருத்துக்கள் செயலாளர் நாயகத்திடமிருந்து அல்லது ஏனைய சிரேஷ்ட ஐக்கிய நாடுகள் அதிகாரிகளிடமிருந்து அறிக்கை வடிவில் வெளியிடப்படும் என்று ஐக்கிய நாடுகள் வதிவிட ஒருங்



கமைப்பாளர் தெரிவித்தார். உயிரிழந்தவர்கள் பற்றிய உள்ளக மதிப்பீடுகளை நாம் பேணிய அதேவேளை களத்தில் சுயாதீனமாக அவற்றை சரிபார்ப்பதற்கு சந்தர்ப்ப சூழ்நிலைகள் எம்மை அனுமதிக்கவில்லை என்றும் இதனால் உயிரிழந்தோர் குறித்து சரியான தொகையை குறிப்பிட முடியாது என்றும் ஐக்கிய நாடுகள் பணிமனை தெரிவித்துள்ளது. சமுதாயங்களுக்கு புனர்வாழ்வளிக்கவும் சமாதான தீர்வுகளை கொண்டு வரவும் ஐக்கிய நாடுகள் சபை சிறீலங்கா அரசுக்கு உதவும் என்று ஐக்கிய நாடுகள் வதிவிட பிரதிநிதி மேலும் தெரிவித்தார்.

இதேவேளை, கோர்டன் வைய்ஸ் தங்களைப் பற்றிக் கூறியதைப் பொய்யான தகவல் என்று சிறீலங்கா வர்ணித்துள்ளது. கோர்டன் வைய்ஸ்சும் நாட்டில் இருந்து வெளியேற்றப்பட்டவர்களில் ஒருவராக இந்தக் கருத்தை வெளியிட்டுள்ளதாக சிறீலங்கா வெளியுறவுத் துறை அமைச்சர் ரோஹித்த போகல்லாகம தெரிவித்துள்ளார்.

நிலைமை இவ்வாறிருக்க, இலங்கையில் இழைக்கப்பட்டதாகக் கருதப்படும் போர்க்குற்றங்கள் குறித்து விசாரணைகளை நடத்துவதற்கு அந்நாட்டு அரசாங்கம் இதுவரை அக்கறை காட்டவில்லை என்றும் எமது அலுவலகத்துக்கு கிடைத்துள்ள தகவல்கள் அதனை மிகத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன என்றும் ஐ.நா. மனித உரிமைகள் ஆணையாளர் நவநீதம்பிள்ளை தெரிவித்துள்ளார்.

சிறீலங்கா அரசாங்கம் போர்க் குற்றங்கள் குறித்து மட்டுமன்றி தேர்தலுக்குப் பிந்திய உரிமை மீறல்கள் குறித்தும் விசாரணை நடத்த வேண்டும் என்பதனையும் அந்நாட்டின் மனித உரிமைகள் அமைச்சர் மகிந்த சமரசிங்கவிடம் நேரில் வலியுறுத்தி உள்ளேன் என்று அயர்லாந்தின் தலைநகர் டப்ளினில் நடைபெற்ற மனித உரிமைகள் தொடர்பான மூன்று நாள் மாநாட்டில் கலந்துகொண்டிருந்த ஐ.நா.மனித உரிமைகள் ஆணையாளர் நவநீதம்பிள்ளை தெரிவித்துள்ளார்.

(38ம் பக்கம் பார்க்க)

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

### கடற்படையினர் அழைத்துச் சென்றவர்களே காணாமல் போயுள்ளனர்

மன்னார் மாவட்டத்தில் காணாமல் போனவர்களில் அதிக எண்ணிக் கையானோர் கடற்படையினரால் விசாரணைக்கென அழைத்துச் செல்லப் பட்டவர்களே என உறவினர்கள் தெரிவிக்கின்றனர். மன்னார் மாவட்டத்தில் காணாமல் போனவர்கள் தொடர்பான விபரங்களைத் திரட்டும் நிகழ் வொன்று கடந்த வெள்ளிக்கிழமை மன்னார் பிரதேச செயலகத்தின் கேட்போர் கூடத்தில் இடம்பெற்றது. இந்த நிகழ்வினை வவுனியா வன் முறையற்ற சமாதான அமைப்பு ஏற்பாடு செய்திருந்தது. மன்னார் மாவட் டத்தில் காணாமல் போனவர்களில் அதிகமானோர் கடற்படையினரால் அழைத்துச் சென்றவர்களே என்றும் அவர்கள் குறித்து இதுவரை எவ்வித தகவலும் இல்லை எனவும் உறவினர்கள் இந்நிகழ்வின்போது தெரிவித் தனர். கடந்த 2 வருடங்களில் மன்னார் மாவட்டத்தில் 150க்கும் அதிகமா னோர் காணாமல் போயுள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

### சிறுமி மீது சிறிலங்காப் படையினரின் பாலியல் கொடூரம்

மட்டக்களப்பில் நான்காம் வகுப்பில் கல்வி கற்கும் சிறுமி மீது சிறி லங்கா இராணுவத்தினர் பாலியல் வன்முறை மேற்கொண்டுள்ளதாக தெரியவந்துள்ளது. மட்டக்களப்பு, சித்தாண்டிக்கு அருகில் உள்ள திகிலி வெட்டை பகுதியில் இந்த சம்பவம் இடம்பெற்றுள்ளது. கடந்த (12ம் திகதி) வெள்ளிக்கிழமை தனியார் வகுப்பிற்கு சென்று விட்டு வீடு திரும் பும் வழியில் குறிப்பிட்ட சிறுமியை வழிமறித்த சிறிலங்காப் படையினர் அந்த சிறுமியை பாலியல் ரீதியில் துன்புறுத்தியுள்ளனர். சிறிலங்காப் படை யினரின் இந்த நடவடிக்கையால் பாதிக்கப்பட்ட சிறுமி சித்தாண்டி வைத் தியசாலையில் அனுமதிக்கப்பட்டு பின்னர் மேலதிக சிகிச்சைக்காக கொழும்பிற்கு கொண்டு செல்லப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

### தமிழ் யுவதி கத்தியால் குத்தி படுகொலை

மட்டக்களப்பில் தமிழ் யுவதி ஒருவர் படுகொலை செய்யப்பட்டுள்ளார். நலிவுற்றவர்களுக்கான சமூக அமைப்பு என்படும் தொண்டர் நிறுவனத்தில் பணியாற்றி வந்த ஆரையம்பதி செலவநகரைச் சேர்ந்த 29 அகவையுடைய செல்வராச திலகவதி என்ற யுவதியே கத்தியால் குத்தப்பட்டு படுகொலை செய்யப்பட்டுள்ளார். இவருடைய சடலம் நாவலடி வீதியில் கடந்த 13ம் திகதி சனிக்கிழமை மீட்கப்பட்டுள்ளது.

### மன்னாரில் மூன்று சிங்களக் குடியேற்றங்கள்

மன்னார் மாவட்டத்திலுள்ள கொண்டச்சிசிலாவத்துறை, தலைமன்னார் மற்றும் மடு ஆகிய பகுதிகளை இலக்காக வைத்து சிங்கள-பௌத்த மற்றும் அனுராதபுர மாவட்ட மதவாச்சிய பகுதிகளிலிருந்து வில்பத்து ஊடாக மன்னார் நோக்கி வருவதாகவும், வரும்போதே தமக்குரிய குடி யிருப்புகளை அமைப்பதற்கான பொருட்களுடன் வருவதாகவும் தெரிய வந்துள்ளது. தமிழ் முஸ்லிம்களையும், கிறிஸ்தவர்களையும் படிப்படியாக பௌத்தர்களாக மாற்றுவதற்குமாக நன்கு திட்டமிட்டே இந்த சிங்கள மயமாக்கல் நடந்துவருவதாக அறியப்பட்டுள்ளது.

### முல்லைத்தீவு மருத்துவமனை கையளிப்பு

சிறிலங்காவின் தாக்குதலால் சேதமாக்கப்பட்ட முல்லைத்தீவு மருத்து வமனை இராணுவத்தினரால் அந்நாட்டு சுகாதாரத் திணைக்கள அதிகாரிக ளிடம் புதன்கிழமை கையளிக்கப்பட்டுள்ளதாகத் தெரியவருகிறது. இந்த மருத்துவமனையில் இருந்த மருந்துகள் மற்றும் கருவிகள், உபகரணங் கள் போன்றவை படையினரால் எடுத்துச் செல்லப்பட்டிருந்தன. தற்போது அவற்றை மீண்டும் சுகாதாரத் திணைக்கள அதிகாரிகளிடம் கையளிக்க வுள்ளனர் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### கருணாவிற்கு ஆப்பு

நடைபெறவிருக்கும் தேர்தலில் போட்டியிடாமல் தேசியபட்டியல் மூலம் தன்னை ஜனாதிபதி தேர்ந்தெடுப்பார் என்று கருணா கண்ட கனவில் மண் விழுந்துள்ளது. அவ்வாறு இம் முறை நடக்காது என்று மகிந்த கரு ணாவிடம் நேரடியாகத் தெரிவித்திருப்பதாக கொழும்பில் இருந்து செய் திகள் கசிந்துள்ளது. பொதுத் தேர்தலில் போட்டியிட்டு வெற்றிபெறுமாறு கருணாவிற்கு மகிந்த அறிவித்துள்ளதாகத் தெரியவருகிறது. இதனை யடுத்து வெற்றிக்காக எவ்வாறான திருகுதாளங்களை மேற்கொள்ளலாம் என்பது குறித்து தற்போது கருணா ஆராய்ந்து வருவதாகத் தெரியவரு கின்றது. ஏனெனில் தனியாகப் போட்டியிடும் பிள்ளையான் வெற்றி பெற்று விட்டால் தனது கௌரவத்திற்கு ஆபத்து என்பதால் எந்தவிதத்திலாவது வெல் வதே கருணாவின் இலக்கு என்று அவருடன் நெருங்கியிருப்பவர்கள் கூறுகின்றனர்.

### ஊடகவியலாளர் மீது நடவடிக்கை எடுக்க மகிந்த புதிய உத்தரவு

எந்த ஊடகவியலாளர் மீதும் சட்ட நடவடிக்கைகள் எடுக்கும் முன்னர் தமக்கு அறிவிக்குமாறு ஊடக அமைச்சரான ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச, காவல்துறை மா அதிபருக்கு உத்தரவிட்டுள்ளார். ராவய பத்திரிகை ஆசிரி யர் விக்டர் ஐவன் விடுத்த வேண்டுகோளை அடுத்தே இவ்வுத்தரவை ஜனா திபதி பிறப்பித்துள்ளதாக அரச தகவல் திணைக்களம் தெரிவித்துள்ளது. இதனையடுத்து கைது செய்யப்பட்டு தடுத்து வைக்கப்பட்டிருந்த லங்கா பத்திரிகையின் ஆசிரியர் சந்தன சிறிமல்வத்தவை பிணையில் செல்ல அனுமதிக்குமாறு காவல்துறை மா அதிபருக்கு அறிவுறுத்தியுள்ளதாக ஜனாதிபதி ஊடகப் பிரிவு தெரிவித்துள்ளது.

# பணப்பறிப்பில் ஈடுபட்ட ஈ.பி.டி.பி வீட்டின் மீது கைக்குண்டுத் தாக்குதல்

சிறிலங்கா இராணுவத்துடன் இணைந்து இயங்கும் ஆயுத ஒட்டுக்குழுவான ஈ.பி.டி.பி ூன்னர் கடத்தல், கொலைகள், அச்சுறுத்தல்கள் மூலம் பணப்பறிப்பில் ஈடுபட்டு வந்தது. அந்தப் பழியை விடுதலைப் புலிகள் மீதும் போட்டுவந்தது. தற்போது மீண்டும் அதே பாணியில் நேரடியாக ஈடுபடமுடியாத நிலையில் வசதி யான தங்கள் வாழ்க்கைகாக மீண்டும் பணப்பறிப்பில் புதுவழியில் இறங்கியுள்ளனர்.

தற்போது இந்த ஒட்டுண்ணிக் குழுவினர் வர்த்த கர்கள், வழக்கறிஞர்கள், பணம் படைத்தவர்களை இலக்கு வைத்து பப்பறிப்பில் இறங்கியுள்ளனர். இவ் வாறு இவர்கள் கேட்ட 2 மில்லியன் ரூபாவைக் கொடுக் காத நபரின் வீடு மீது கடந்த செவ்வாய்க்கிழமை இரவு கைக்குண்டுத் தாக்குதலை நடத்தியுள்ளனர்.

வலிகாமம், அராலி கிழக்குப் பகுதியிலுள்ள ஒரு வரிடம் ஒட்டுக்குழுவைச் சேர்ந்த நபர்கள் தமக்கு 2 மில்லியன் ரூபாவைத் தருமாறு கேட்டுள்ளனர். அப் பணத்தை அவரால் செலுத்தமுடியாமல் போனதை அடுத்தே அவர் வீட்டின் மீது இரு கைக்குண்டுகளை வீசிச் சென்றுள்ளனர்.



மேற்படி குண்டுகளில் ஒன்று வெடித்துள்ளது. மற் றையது வெடிக்காத நிலையில் மறுநாள் புதன்கிழமை காலையில் கண்டெடுத்துள்ளனர். இக்குண்டுத்தாக் குதலை அடுத்து தொலைபேசியில் அழைத்த அந் நபர்கள் பணத்தைச் செலுத்தாத பட்சத்தில் உயிருக்கு உத்தரவாதம் இல்லை என மிரட்டியுள்ளனர். சிறிலங்கா இராணுவமும் இவர்களுடன் சேர்ந்து இயங்குவதால் மக்கள் யாரிடம் முறையிடுவது என்று தெரியாமல் அச்சமடைந்துள்ளனர்.

# 'உலகம் விடுதலைப் புலிகளைப் பற்றி சரியாக அறிந்து கொள்ளவில்லை'

## பேராசிரியர் அடேல் பார்க்கர்

'விடுதலைப்புலிகள் அமைப்பினை முற்று முழுதாக அழித்து விட்டதாக சிறிலங்கா அரசாங்கம் கூறிக் கொள் கின்ற போதிலும், அரசாங்கத்திற்கும் அதன் பாதுகாப் புப் படைகளுக்கும், இதுவிடயத்தில் கலக்கம் இருப் பதை காணக்கூடியதாகவுள்ளது. தமிழர்களை ஆயுதப் போராட்டத்தில் குதிக்க வேண்டிய நிலைக்கு தள்ளிய அடிப்படை பிரச்சினைகளான, நாட்டின் வளங்களை சமமாகப் பங்கீடு செய்யாமை, கல்வி, வேலை வாய் ப்பில் காட்டப்படும் பாரபட்சம், போதிய நாடாளுமன்ற பிரதிநிதித்துவம் இல்லாமை போன்ற பிரச்சனைகள் இன்னமும் தீர்க்கப்படாமல் இருக்கின்றன. இப்பிரச்சி னைகள் தீர்க்கப்படாதவிடத்து, விடுதலைப் புலிகள் அமைப்பு மீளக்கட்டமைக்கப்படும் சாத்தியம் இருக்கி றது' என அமெரிக்கப் பேராசிரியர் அடேல் பார்க்கர் குறிப்பிட்டிருக்கிறார்.

2001-2002 ஆண்டுகளில் சிறிலங்காவில் தங்கியி ருந்து, போராதனை பல்கலைக்கழகத்தில் கற்பித்த அடேல் பார்க்கர், சிறிலங்காவின் நிலைமைகள் தொடர்பான தனது அனுபவங்களை 'Not Quite Paradise: An American Sojourn in Sri Lanka' என்ற தனது புத்தகத்தில் எழுதியிருக்கிறார்.

இப்புத்தகமானது பல விருதுகளை அவருக்கு பெற் றுக் கொடுத்ததுடன், தொடர்ந்து சிறிலங்காவில் கற்பித் தலுக்கும், அந்நாட்டினைப் பற்றி எழுதுவதற்குமான நிதி உதவியை அவருக்குப் பெற்றுக் கொடுத்துள்ளது. இந்திய இணையத்தளமான rediff.com அற்கு அவர் வழங்கிய செவ்வியில், 'விடுதலைப் புலிகள் இயக்கத் தின் உயர்மட்டத் தலைவர்கள் கொல்லப்பட்டாலும், அது அவ்வியக்கத்தின் முடிவாக கருதமுடியுமா? என்ற கேள்வி பல மட்டத்திலும் கேட்கப்படுகிறது.

ஆனால் எனது அண்மைய பயணத்தில் நான் கண்டவற்றிலிருந்து, இது தொடர்பில் ஒரு பதட்டம் நிலவுவதையே காணக்கூடியதாகவிருக்கிறது. போர் முடிவடைந்ததாகக் குறிப்பிடப்பட்டாலும் அங்கு முன்ன ரைவிட அதிகளவில் இராணுவத்தினர் குவிக்கப்பட்டுள் ளனர். விடுதலைப் புலிகள் இயக்க உறுப்பினர்கள் அல்லது அவ்வாறு சந்தேகிக்கப்படுபவர்கள் வெவ்வேறு முகாம்களில் அடைத்து வைக்கப்பட்டுள்ளனர். இவை யெல்லாம் அரசாங்கமும், படைகளும் விடுதலைப் புலிகளையிட்டு இன்னமும் பீதியுடன் இருப்பதையே காட்டுவதாக அமைந்துள்ளன என கருத்து வெளியிட்ட அவர், சிறிலங்காவின் பரப்புரையை நம்பியுள்ளார் என்பதை அடுத்த பதிலில் அறியமுடிந்தது. விடுதலைப் புலிகள் அமைப்பினை கட்டியமைத்து நெறிப்படுத்தி வந்த பிரபாகரன் இல்லாத நிலையில், அவ்வமைப் பினை அதன் இலட்சியத்தின் அடிப்படையில் முழுமை யாக ஒன்றுபடுத்த முடியுமா என்ற கேள்வி எழுவது தவிர்க்க முடியாதது' என்றும் அவர் கருத்து வெளி யிட்டார்.

விடுதலைப் புலிகள் பற்றி உலகம் அறிந்து கொள் ளாத அல்லது விளங்கிக் கொள்ளாத விடயங்கள் ஏதும் இருக்கிறதா என அவரிடம் கேட்கப்பட்டபோது, 'உண் மையில் உலகம் விடுதலைப் புலிகளைப் பற்றி சரி யாக அறிந்து கொள்ளவில்லை. அந்த இயக்கத்தின் இரகசியத்தன்மை அதற்கு காரணமாக இருக்கலாம். பிரபாகரன் அவர்களும் வெளி உலகத்தைச் சந்திப் பதை பெருமளவு தவிர்த்து வந்துள்ளார். அமெரிக்க ஊடகங்கள் இப்பிரச்சினை பற்றி அதிகம் அக்கறை கொள்ளாததால் அமெரிக்கர்கள் இவ்விடயம் பற்றி அதிகம் அறிந்திருக்கவில்லை. பிரித்தானிய ஊடகங்கள் அமெரிக்க ஊடகங்களைக் காட்டிலும் சிறப்பாகச் செயற் பட்டன. விடுதலைப் புலிகள் சுதந்திரமான தாயகம் ஒன்றை அமைத்துக் கொள்ள தமது நாட்டு அரசாங்கத் துக்கு எதிராக ஆயுதம் ஏந்திப் போராடினார்கள் என்ற விடயத்தைக்கூட பெரும்பாலான மக்கள் அறிந்திருக்க வில்லை' எனப் பதிலளித்துள்ளார்.

விடுதலைப் புலிகள் அமைப்பு பற்றி குறிப்பிடுகை யில், அது உறுதியான கொள்கைகளுடன் இறுக்கமாக ஒருங்கமைக்கப்பட்ட ஒரு குழு. இயக்கத்தினது இறுதி இலட்சியத்திலிருந்து விலகிச் செல்வதற்கு அதன் உறுப்பினர்கள் அனுமதிக்கப்படவில்லை. ஈழம் என்கிற தாயகக் கொள்கையை தான் கைவிட்டால், தன்னை சுட் டுக் கொல்வதற்கான அனுமதியை தனது சகாக்களுக்கு பிரபாகரன் வழங்கியிருக்கிறார் எனத் தெரிவித்த அவர், பெரும்பான்மையான தமிழர்கள் பிரபாகரனது இலட் சியத்தையே வரித்துக் கொண்டுள்ளனர் எனத் தெரிவித் துள்ளார்.

பௌத்த இந்து, கிறிஸ்தவ சமயங்கள் போரின் காயங்களை ஆற்றுவதற்கு உதவவில்லையா என்ற கேள்விக்கு பதிலளிக்கையில், நாங்கள் பௌத்த மதத் தினை அதன் தத்துவத்தின் அடிப்படையில், அகிம்சை, அன்பு, சமாதானம், தியானம் ஆகியவற்றை வலியுறுத் துவதாகவே அறிந்து வைத்திருக்கிறோம். ஆனால் சிறி லங்காவில் நிலைமை வேறுபட்டுக் காணப்படுகிறது. 'மகாவம்சம்' என்ற காப்பியத்தின்படி, புத்தர் இலங் கைத் தீவிற்கு வந்ததாகவும் அவரே பௌத்தமத தத்து வங்களை எடுத்து வந்ததாகவும் நம்பப்படுகிறது. ஆத லால் பௌத்த சமயத்தை பாதுகாக்க வேண்டிய பொறுப்பு தங்களுக்கு உள்ளதாக புத்த பிக்குகளும், பெரும்பா லான சிங்களவர்களும் நம்புகிறார்கள். பெரும்பான் மையான புத்த பிக்குகள் சிங்கள இனவாதிகளாக இருக்கிறார்கள். இருப்பினும் இம்மதங்கள் இனங்களுக் கிடையிலான சமரசத்திற்கு உதவ முடியும், உதவ வேண்டும் என்றே எதிர்பார்க்கிறேன் எனத் தனது நம் பிக்கையை வெளிட்டுள்ளார்.

## பந்துடன் விளையாடியவர் அரசியலில் விளையாட முடிவு

சிறீலங்கா கிரிக்கெட் அணியைச் சேர்ந்த சனத் ஜயசூரிய எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தலில் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் கீழ் மாத்தறை மாவட்டத்தில் போட்டியிடவுள்ளார். நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிடுவதற்கான விண்ணப்பப் பத்திரத்தை விரைவில் சனத் ஜயசூரிய கையளிக்கவிருப்பதாக ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணித் தகவல்கள் தெரிவிக்கின்றன. எனினும், நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிடுவது அல்லது கிரிக்கெட் விளையாடுவது தொடர்பில் சிறீலங்கா கிரிக்கெட் கட்டுப்பாட்டுச் சபையிடமிருந்து சனத் ஜயசூரிய அனுமதி பெற்றுக்கொள்ளவேண்டும் என சபைத் தகவல்கள் தெரிவிக்கின்றன.

## கொக்குவிலில் இளைஞன் பலி

வேகக்கட்டுப்பாட்டை இழந்த உந்துருளி மின்கம்பத்துடன் மோதுண்டதில் இளைஞன் ஒருவன் உயிரிழந்துள்ளார். மற்றொரு இளைஞன் படுகாயமடைந்த நிலையில் யாழ். போதனா வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டுள்ளார். இச்சம்பவம் கொக்குவில் பொற்பதி வீதியில் இடம்பெற்றுள்ளது. இதில் யாழ்ப்பாணம் பிறவுண் வீதியை சேர்ந்த சிவானந்தன் நதீஸ் (24) என்பவரே உயிரிழந்துள்ளார். கொக்குவில் கிழக்கு காளி கோவிலடியை சேர்ந்த உதயகுமார் ரவிசாந்த் (21) என்ற இளைஞனே படுகாயமடைந்துள்ளார்.

## இந்தியா அதிருப்தியாம்!

இலங்கையில் வாழும் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகள் குறித்து சிறீலங்கா அரசாங்கம் அக்கறை காட்டவில்லை என்று இந்தியா அதிருப்தி தெரிவித்துள்ளதாம். தமிழகத்திற்கு சென்றிருந்த இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம்.கிருஸ்ணா, ஊடகவியலாளர்கள் எழுப்பிய கேள்விக்கு பதிலளிக்கும் போதே இந்த அதிருப்தியை வெளியிட்டுள்ளார். இலங்கையில் வாழும் தமிழ் மக்களுக்கான அரசியல் தீர்வினை முன்வைத்து அவர்கள் வாழ்வினை மீளக் கட்டியெழுப்புவதற்கு மகிந்த ராஜபக்ச நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இந்தியா தொடர்ந்தும் வலியுறுத்தி வருவதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## தந்தையிடம் ஆசி பெற்று அரசியலில் குதித்த நமால்

சிறீலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவின் மூத்த மகனான நாமல் ராஜபக்ச தமது அரசியல் நடவடிக்கைகளை ஆரம்பிக்க முன்னர் தமது தந்தையிடம் ஆசி பெற்றார். நாமல் ராஜபக்ச வருகின்ற ஏப்ரல் 8ம் திகதி நடக்கவுள்ள நாடாளுமன்றத் தேர்தலில் அம்பாந்தோட்டை மாவட்டத்தில்



வேட்பாளராக நிற்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கான அவரது அரசியல் பிரவேச விழா ஹம்பாம்தோட்ட மாவட்டம் தாங்கெல்லி என்ற இடத்தில் பிரம்மாண்ட பொதுக்கூட்டத்துடன் தொடங்கியது. இதில் ராஜபக்ச மற்றும் அவரது குடும்பத்தினர் நாமலை பொது மக்கள் முன்னிலையில் அறிமுகப்படுத்திப் பேசினார்கள்.

## சிறீலங்காவுக்கு ஜி.எஸ்.பி வரிச்சலுகையை இரத்து

சிறீலங்காவுக்கு வழங்கப்பட்டு வந்த ஜி.எஸ்.பி வரிச்சலுகையை தற்காலிகமாக இரத்துச் செய்வதாக ஐரோப்பிய ஒன்றியம் உத்தியோக பூர்வமாக அறிவித்துள்ளது. சிறீலங்காவின் மனித உரிமைகள் தொடர்பான விடயங்களை நன்கு ஆராய்ந்த பின்னரே தாம் இந்த முடிவுக்கு வந்துள்ளதாகவும் இந்த விடயத்தில் சிறீலங்கா அரசாங்கம் எடுக்கும் நடவடிக்கைகள் போதுமானதாக இல்லை என்றும் ஐரோப்பிய ஒன்றியம் விடுத்துள்ள அறிக்கையில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளது.



# சிங்களவர்களின் உல்லாச புரியாக யாழ்ப்பாணத்தை மாற்ற முயற்சி

யாழ்ப்பாணத்தை சிங்கள மக்களின் உல்லாச புரியாக மாற்றுவதன் மூலம் அங்கு தமிழ் மக்களின் தனித்துவதைத்தை அழித்து, சமூகச் சீர்கேடுகளை அதிகரிக்க சிறீலங்கா அரசு திட்டமிட்டு அதற்கான செயற்பாடுகளில் இறங்கியுள்ளதாக தெரியவருகின்றது. தேர்தலின் பின்னர் மீண்டும் ஏ-9 பாதையை மூடுவதற்கு திட்டமிட்டிருந்தபோதும், சிங்கள மக்களின் பயணத்தை யாழ்குடாவிற்கு அதிகரிக்கச் செய்வதற்காக இந்த மூடு விழா தற்போது இடை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளதாகவும் தெரியவருகின்றது.

யாழ்ப்பாணத்தில் சிங்கள மக்களின் செயற்பாடுகளை அதிகரிப்பதன் மூலம் அங்கு தமிழ் மக்கள் கட்டிவைத்துள்ள தனித்துவம் அழிக்கப்பட்டு இரு இனங்களும் சரிசமமாகும் நிலையொன்றை ஏற்படுத்துவதே நோக்கம் எனத் தெரியவருகின்றது. ஏற்கனவே கிழக்கில் இவ்வாறான நகர்வுகள் மூலம் சிங்கள, தமிழ் மக்களின் விகிதாசாரம் மாற்றமடையத் தொடங்கியுள்ளது. இந்த நிலையை யாழ்ப்பாணத்திலும் ஏற்படுத்தும் முயற்சிகள் தீவிரமடைந்துள்ளன. ஏற்கனவே, 40 ஆயிரம் சிங்களப் படையினர் மற்றும் காவல்துறையினர் பாதுகாப்பு இருக்கும் நிலையில் சிங்கள மக்களின் குடியேற்றங்கள் நிகழ்வதற்கான வாய்ப்புக்களும் உருவாகி வருகின்றது. உயர் பாதுகாப்பு வலயங்களாக்கப்பட்ட பகுதிகளில் ஏற்கனவே சிங்கள மக்கள் குடியேற்றப்பட்டு விவசாயங்களிலும், மீன் பிடித்தலிலும் படையினருக்கு ஆதரவாக செயற்படுகின்றனர்.



இந்நிலையில் ஏனைய நகர் மற்றும் கிராமப் புறங்களை இலக்குவைத்து சிங்கள மக்களின் வருகையை யாழ்குடா நோக்கி அதிகரித்துள்ளனர்.

இவர்களை யாழ்குடா நோக்கி கவர்ந்து இழுப்பதற்காக தற்போது யாழ்ப்பாணத்தின் முக்கிய குளங்கள் சுற்றுலாப் பயணிகளை கவரும் விதத்தில் புனரமைக்கப்பட்டு வருகின்றன. குளத்திலுள்ள தாவரங்கள் மற்றும் சேறு என்பன இயந்திரங்கள் மூலம் அகற்றப்படுகின்றன. இதற்கான நடவடிக்கைகளை ஈ.பி.டி.பியின் ஒத்துழைப்புடன் பிரதேச சபைகள் மேற்கொண்டு வருகின்றன. குளங்கள் புனரமைக்கப்பட்டு, நீரும் சுத்திகரிக்கப்பட்டு குளங்கள் அருகில் அழகு நிறைந்த காட்சிகளை உருவாக்கி, நீச்சல் குளங்கள், நிழல் குடைகள், சாய்மனைகள் (பென்ச்) கட்டப்படவுள்ளதாக குளங்கள் சுத்திகரிக்கும் தொழில்நுட்ப அலுவலகர் தெரிவித்தார். அதேவேளை யாழ்ப்பாணம், மன்னார் மற்றும் முல்லைத்தீவு பகுதிகளில் தமிழ் மக்களிடம் பறிக்கப்பட்ட சுமார் 100 ஏக்கர் காணிகளில் சுற்றுலா அபிவிருத்தி வலயங்களை அமைக்கவும் சிறீலங்கா சுற்றுலாத்துறை அமைச்சு திட்டமிட்டுள்ளது. அத்துடன், யாழ்ப்பாணத்திற்கு வரும் சிங்கள சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வகையில் யாழ்ப்பாணத்தின் சுற்றுலா மையங்கள் புனரமைக்கப்பட்டு வருகின்றன.

நிலைமை இவ்வாறிருக்க, வரலாற்றில் என்றுமே காணமுடியாத அவலத்தை தற்போது யாழ்குடாவில் காணமுடிவதாக அங்குள்ள மக்கள் கவலை வெளியிட்டுள்ளனர். யாழ். நகரில் அண்மைக் காலத்தில் சிறுவர்கள் பிச்சை கேட்பது அதிகமாகி வருகிறது. இதில் அதிமாகப் பெண் பிள்ளைகள் ஈடுபடுவதைக் காண முடிகின்றது. இவ்வாறு பிச்சை கேட்கும் பெண் பிள்ளைகளின் வயது எல்லையாக 8 முதல் 14 வரை உள்ளதாகக் காணப்படுகிறது. பாடசாலைகளுக்குச் செல்லும் வயதில் இவர்கள் இவ்வாறான செயற்பாடுகளில் ஈடுபட்டுள்ளனர். அதேவேளை, கொப்பி, பேனா போன்றவற்றையும் இவர்கள் பிச்சையாகக் கேட்பதைக் காண முடிகிறது. யாழ். பேருந்து தரிப்பிடத்திலேயே இவர்கள் அதிகமாகக் காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது.

இதுஇவ்வாறிருக்க, கிளிநொச்சி மாவட்டம், ஸ்கந்தபுரம், அக்கராயன் பகுதிகளில் தமிழ் மக்களின் வீடுகளை உடைத்து அந்த ஓடுகள், கற்கள், மரங்களையே புதிய ஒப்பந்த கட்டடங்களுக்கு சிங்களத் தொழிலாளர்கள் பாவித்து வருவதாக தெரியவருகின்றது. இந்த பகுதிகளில் உள்ள ஒப்பந்த வேலைகளை சிங்களவர்கள், சிங்களப் படைகளின் உறவினர்களே மேற்கொண்டு வருகின்றனர். இவர்கள் புதிதாக பொருட்களை கொண்டுவராது அங்கு இருக்கின்ற பொது மக்களின் வீடுகளை உடைத்தே கட்டட வேலைகளை செய்து வருகின்றனர் என்று தெரியவந்துள்ளது.

## இராணுவ முகாமாக மாறியுள்ள வெற்றிலைக்கேணி மாதா கோயில்

தமிழர் பிரதேசங்களை சிங்கள மயமாக்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ள சிறீலங்கா அதன் ஒரு பகுதியாக வெற்றிலைக்கேணியில் அமைந்துள்ள வரலாற்றுப் புகழ்மிக்க ஆலயமான கப்பல் ஏந்திய மாதா கோவில் படையினரின் முகாமாக மாற்றப்பட்டுள்ளது. இதனை யாழ். ஆயர் தோமஸ் சௌந்தரநாயகம் உறுதிப்படுத்தியுள்ளார். அண்மையில் வன்னி மற்றும் வடமராட்சி ஆகிய பிரதேசங்களுக்கு பயணம் மேற்கொண்ட ஆயர், வடமராட்சி கிழக்கில் உள்ள வெற்றிலைக்கேணியில் அமைந்துள்ள வரலாற்றுப் புகழ்மிக்க கப்பல் ஏந்திய மாதா கோவில் இராணுவ முகாமாக மாற்றப்பட்டுள்ளதை கண்டு மிகுந்த அதிர்ச்சி அடைந்துள்ளார். தேவாலயம் மிகப்பெரும் இராணுவ முகாமாக மாற்றப்பட்டுள்ள விவகாரத்தை ஊடகங்களுக்கோ அல்லது வேறு அமைப்புக்களுக்கோ தெரிவிக்க வேண்டாம் என இராணுவம் ஆயருக்கு உத்தரவிட்டுள்ளது. வன்னிப் பகுதிக்கு சென்ற ஆயர் அங்கு உள்ள பெருமளவான தேவாலயங்கள் முற்றாக அழிக்கப்பட்டுள்ளதாக தெரிவித்துள்ளார். வெற்றிலைக்கேணி மாதா ஆலயம், மிகப் பெரும் இராணுவத் தளமாக மாற்றப்பட்டுள்ளதுடன், அதனை சுற்றி வேலிகளும், காவல் நிலைகளும் அமைக்கப்பட்டுள்ளன.

தேவாயலமும் சேதமடைந்துள்ளது. பெருமளவான மக்கள் வழிபடும் இந்தத் தேவாலயத்தை இராணுவம் முகாமாக பயன்படுத்தி வருவதால் மக்களின் மத உணர்வுகளை அது புறம்தள்ளியுள்ளதாக அவர் மேலும் தெரிவித்துள்ளார். இதனிடையே வடமராட்சி கிழக்கு கட்டைக் காட்டு பகுதியிலும் பெருமளவான ஆலயங்கள் சேதமாக்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது.

இதேவேளை, வன்னியில் தடுக்கி விழும் இடங்கள் எங்கும் புத்தர் சிலைகளும், பௌத்த வழிபாட்டுத் தலங்களும் சிறிதும் பெரிதுமாக அமைக்கப்பட்டு வருவதாக தெரிவிக்கப்படுகின்றது.

# சதிவலைப் பின்னல்-2

சேரமான்

[பகுதி 2]

தற்கால உலக ஒழுங்கை சரியாகப் புரிந்து கொள்ளத் தவறியதன் காரணமாகவும், ஆயுதப் போராட்டத்தின் மூலம் பெறப்பட்ட பலத்திற்கு அரசியல் வடிவம் கொடுக்கத் தவறியதன் காரணமாகவுமே நான்காம் கட்ட ஈழப்போரில் தமது நிழலரசை தமிழீழ விடுதலைப் புலிகள் இழந்ததாக, மே 18இற்குப் பின்னர் சில விமர்சனங்கள் முன்வைக்கப்படுகின்றன.

உண்மையில் தற்கால உலக ஒழுங்கு என்பது எவ்வகையான தன்மையைக் கொண்டுள்ளது? இதற்கு இசைவாக எதனைப் புரிந்திருந்தால் தமிழீழ நிழலரசு பாதுகாக்கப்பட்டிருக்கும்? இக்கால உலக ஒழுங்கில் ஆயுதப் போராட்டம் என்பது சாத்தியமற்ற விடயமா? போன்ற கேள்விகள் எம்மவர்களிடையே எழுவது இயல்பானதே. இவற்றை நுணுகி ஆராயும் களமாக இக்கட்டுரையின் இரண்டாவது பகுதி அமைகின்றது.

பனிப்போருக்கு முன்னரான உலக ஒழுங்கு என்பது சோவியத் – அமெரிக்கா என்ற இருதுருவ முகாம்களை அடிப்படையாகக் கொண்டு இயங்கி வந்தது. இதில் ஏகாதிபத்திய – முதலாளித்துவ அடக்குமுறைகளின் முகமாக அமெரிக்காவும், புரட்சிகர சமவுடமைத்துவப் போராட்ட வடிவங்களின் முகமாக சோவியத் ஒன்றியமும் அடக்கப்பட்ட சமூகங்களாலும், தேசிய இனங்களாலும் அக்காலகட்டத்தில் அடையாளம் காணப்பட்டிருந்தன. இதுவே சோசலிச (சமவுடமைத்துவ) சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு தேசிய விடுதலைப் போராட்ட சித்தாந்தங்கள் வனையப்பட்டமைக்கான அடிப்படையாகவும் விளங்கியது.

## 2001, செப்ரம்பர் 11 இற்குப் பின்னரான மேற்குலகின் மூலோபாயம்

இவ்வாறான பின்புலத்தில் சோவியத் ஒன்றியத்தின் வீழ்ச்சியுடன் பொதுவுடமைத்துவப் புரட்சியும், பனிப்போரும் முடிவுக்கு வந்த பொழுது, புரட்சிகர சிந்தனைகளின் அடிப்படையில் வனையப்பட்டிருந்த தேசிய விடுதலைப் போராட்டங்களின் எதிர்காலம் தொடர்பாக கேள்விகள் அக்காலகட்டத்தில் எழத்தவறவில்லை. அதாவது அமெரிக்காவின் தலைமையிலான மேற்குலக தாராண்மைத்துவ – முதலாளித்துவ முகாமின் கைமேலோங்கும் சூழலில், புரட்சிகர சிந்தனைகளின் அடிப்படையில் எவ்வாறு தமது இருப்பை தேசிய விடுதலை இயக்கங்களால் தக்கவைக்க முடியும்? என்ற வாதத்தை மையப்படுத்தியே இவ்வாறான கேள்விகள் எழுந்திருந்தன. மறுபுறத்தில் இவ்வாறான கேள்விகளுக்கு வலுவூட்டும் வகையில், பனிப்போர் முடிவுக்கு வந்த மறுகணமே தாராண்மைத்துவ உலக ஒழுங்கை ஏற்படுத்துவதற்கான நிகழ்ச்சித் திட்டத்துடன் உலக அரங்கில் அமெரிக்காவும், அதனை மையமாகக் கொண்ட மேற்குலகமும் களமிறங்கி உலக மயப்படுத்தலை வேகப்படுத்தத் தவறவில்லை.

இப்படியாகப் பனிப்போருக்குப் பின்னரான உலக ஒழுங்கு என்பது மேற்குலகின் தாராண்மைத்துவப் பொறிமுறையில் சுழலத் தொடங்கிய பொழுதும், தாராண்மைத்துவத்திற்கு சவால்விடுக்கக்கூடிய கருத்தியல் சக்திகளாக தேசியவாத எழுச்சிகளும், இஸ்லாமியத்தின் மறுமலர்ச்சியும் அக்காலகட்டத்தில் வீரியம்பெறத் தொடங்கியிருந்தன. இதனை நன்கு இனம்கண்டுகொண்ட மேற்குலகம், தேசியவாத அடிப்படையில் கிழக்கு ஐரோப்பாவில் தனியரசுகள் தோற்றம் பெறுவதற்கு இடமளித்த பொழுதும், மூன்றாம் உலகில் இவ்வாறான புதிய தேசிய அரசுகள் தோற்றம் பெறுவதற்கு இடமளிப்பதற்கான மனோநிலையைக் கொண்டிருக்கவில்லை.

சோவியத் ஒன்றியத்தின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த உப அரசுகள் பிரிந்து சென்று தனியரசை நிறுவுவது தமது நலன்களுக்கு அனுகூலமாக அமைந்தாலும், இவ்வாறான தேசிய அரசுகள் மூன்றாம் உலகிலோ அல்லது ஏனைய ஐரோப்பிய தேசங்களிலோ தோற்றம் பெறுவது உலக ஒழுங்கிலும், உலகின் இயல்புநிலையிலும் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதே தாராண்மைத்துவ மேற்குலகின் பார்வையாக விளங்கியது. இதனை உறுதிப்படுத்தும் வகையில் பிரித்தானியா, ஸ்பெய்ன், கனடா போன்ற நாடுகளில் எழுச்சிபெற்ற ஸ்கொட்டிஸ், பாஸ்க், கியூபெக் போன்ற தேசங்களின் தனியரசுக் கோரிக்கைகள் அமைந்திருந்தன. இவற்றைவிட மேற்குலகிற்கு எதிராக இஸ்லாமிய உலகில் வலுவடைந்த அடிப்படைவாத சிந்தனைகளும், அவற்றின் அடிப்படையிலான அனைத்துலகப் பயங்கரவாதமும் தாராண்மைத்துவ உலக ஒழுங்கை நிறுவும் தமது நிகழ்ச்சித் திட்டத்தை சீர்குலைக்கக்கூடும் என்ற அச்சமும் மேற்குலகிற்கு ஏற்படத் தவறவில்லை. இப்படியான பின்புலத்தில் நியூயோர்க் இரட்டைக் கோபுரங்களை பின்லாடனின் அல்கைடா பயங்கரவாதிகள் தகர்த்த பொழுது, ஆயுதவழி தழுவிய தேசிய விடுதலைப் போராட்டங்களை முடிவுக்கு கொண்டு வருவதை இலக்காகக் கொண்டு நோர்வே, பின்லாந்து போன்ற சமாதான முகவர்களை மூன்றாம் உலகில் அமெரிக்காவின் தலைமையிலான மேற்குலகம் வேகமாகக் களமிறக்கியது.

இதில் நகைமுரணான விடயம் என்னவென்றால், தேசிய விடுதலைப் போராட்டங்களுக்கு அடிப்படையாக விளங்கும் தேசிய இனப்பிரச்சினைகளுக்கு தீர்வு காண்பதை விட, ஆயுதப் புரட்சிகள் இடம்பெறும் நாடுகளில் தாராண்மைத்துவ ஆட்சியமைப்புக்களை வலுப்படுத்துவதே 2001, செப்ரம்பர் 11 இற்குப் பின்னரான மேற்குலகின் மூலோபாயமாக அமைந்திருந்தது. இதன் பின்னணி என்பது ஏறத்தாள இருநூறு ஆண்டுகால வரலாற்றைக் கொண்டுள்ளமை இங்கு கவனிக்கத்தக்கது.

பதினெட்டாம் நூற்றாண்டின் கடைக்கூறில் யுத்தத்தால் ஐரோப்பிய தேசங்களில் சின்னாபின்னமாகியிருந்த வேளையில் வாழ்ந்துவந்த இம்மானுவேல் கான்ற் என்ற ஜேர்மனிய தத்துஞானியால் சனநாயக சமாதானக் கோட்பாடு என்ற திட்டம் முன்மொழியப்பட்டிருந்தது. அதாவது உலகளாவிய ரீதியில் சனநாயக ஆட்சியமைப்புக்களை ஏற்படுத்தும் பொழுது யுத்தங்கள் முடிவுக்கு வந்துவிடும் என்பதே இம்மானுவேல் கான்ற் அவர்களின் அப்போதைய அசையாத நம்பிக்கையாக விளங்கியது. பிற்காலத்தில் இருபதாம் நூற்றாண்டின் முதற்கூறில் சனநாயக ஆட்சியமைப்பை ஓரளவுக்கு தழுவிக்கொண்ட மேற்குலக நாடுகள் தமக்கிடையே மோதிக் கொள்வதைத் தவிர்த்துகொண்டமை அவரது கோட்பாட்டிற்கு வலுச்சேர்த்ததோடு, இதனைத் தழுவி முதலாம் உலக மகாயுத்தத்தின் முடிவில் புதிய உலக ஒழுங்கை அப்போதைய அமெரிக்க அதிபர் ஹரோல்ட் வில்சன் அவர்களும் தரிசனம் செய்திருந்தார். இதுவே இரண்டாம் உலக மகாயுத்தத்தின் பின்னர் ஐரோப்பிய தேசங்களில் சமாதானம் ஏற்படுவதற்கும் வழிகோலியிருந்தது.

> **மேற்குலகின் தவறான அணுகுமுறைக்காக அதனைப் பகைத்துக் கொள்வதைவிட, அதனால் வகுக்கப்படும் பொறியை எதிர்கொண்டு, அதனூடாகத் தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் நியாயங்களை மேற்குலக சக்திகளுக்கு எடுத்துரைத்து, ஈற்றில் தமிழீழ தனியரசுக்கான இராசீக அங்கீகாரத்தைப் பெறுவதே தமிழீழ விடுதலைப் புலிகளின் எதிர்மூலோபாயமாக அமைந்திருந்தது. அதனை அடிப்படையாகக் கொண்டே சமாதானப் பேச்சுவார்த்தைகளில் தமிழீழ விடுதலைப் புலிகளின் பங்கேற்பும், ஒத்துழைப்பும் அமைந்திருந்தது.**

இந்த வகையில், சனநாயக ஆட்சியைத் தழுவிக் கொண்ட மேற்குலக தேசங்களில் தம்மிடையே மோதிக்கொள்வதைத் தவிர்த்து, சமரச அடிப்படையில் செயற்படத் தொடங்கிய பொழுதும், இம்மானுவேல் கான்ற் அவர்களால் தரிசனம் செய்யப்பட்ட சனநாயக சமாதானக் கோட்பாடு என்பது மேற்குலக தேசங்களில் மட்டும் பொருந்தக்கூடிய விடயமாகத் திகழ்வதும் இங்கு மறுப்பதற்கில்லை. அதாவது ஒருபுறம் தமக்கிடையே சமாதானத்தை மேற்குலக அரசுகள் பேணிக்கொண்டாலும், சனநாயக ஆட்சியமைப்பைக் கொண்டிராத மூன்றாம் உலக தேசங்கள் மீது போர் தொடுப்பதற்கு அவை ஒருபொழுதும் பின்னடித்ததில்லை. இதற்கு மிகச் சமீபத்திய உதாரணமாக 2003ஆம் ஆண்டில் ஈராக் மீது அமெரிக்கா நிகழ்த்திய படையெடுப்புத் திகழ்கின்றது. இங்கு ஒரு விடயத்தை நாம் மிகத் தெளிவாக உணர்ந்து கொள்ள வேண்டும். அதாவது உலகளாவிய ரீதியில் சனநாயக ஆட்சியமைப்புக்களை ஏற்படுத்துவதை விட, அவற்றின் ஊடாகத் தமது தேசிய நலன்களைப் பேணுவதிலேயே மேற்குலகம் அதீத அக்கறை கொண்டுள்ளது. இந்த வகையில் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இம்மானுவேல் கான்ற் தரிசனம் செய்த சனநாயக சமாதானக் கோட்பாடு என்பது மேற்குலக அரசுகளின் தேசிய நலன்களை உலக அரங்கில் முன்னிறுத்திச் செல்வதற்கான கருவியாகவே மாறியுள்ளது.

இதனை தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்துடன் நாம் பொருத்திக் கூர்மையாக ஆராயும் பொழுது ஒரு உண்மையைப் புரிந்து கொள்ள முடியும். அதாவது, தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை அங்கீகரித்து தமிழீழ மக்களுக்கு நீதி வழங்குவதை விட, ஒரு ஆயுதப் புரட்சியை முடிவுக்கு கொண்டுவருவதே ஈழப்பிரச்சினையில் மேற்குலகின் தலையீட்டுக்கான அடிப்படை மூலோபாயமாகத் திகழ்ந்திருப்பது புலனாகின்றது. இவ்வாறான மூலோபாயத்தின் அடிப்படையிலேயே ஈழப்பிரச்சினையில் 2001ஆம் ஆண்டின் கடைக்கூறில் சமாதான அனுசரணையாளராக ஈழப்பிரச்சினையில் நோர்வே களமிறங்கியதோடு, உதவி வழங்கும் கொடையாளி – இணைத்தலைமை நாடுகளாக வேடமிட்டு 2002 ஆம் ஆண்டின் இறுதியில் அமெரிக்காவின் தலைமையிலான மேற்குலக சக்திகளின் தலையீடும் அமைந்திருந்தது.

படைய – அரசியல் அமைப்பாக இயங்கி வந்த தமிழீழ விடுதலைப் புலிகளின் போர்வலிமையை மழுங்கடிக்கச் செய்து, ஆயுதக் களைவுக்கு இட்டுச்செல்வதற்கான புறச்சூழலைத் தோற்றுவித்து, இறுதியில் சிறீலங்காவின் இறையாண்மைக்கும், நில ஒருமைப்பாட்டிற்கும் கட்டுப்படக்கூடிய ஒரு அரசியல் கட்சியாகத் தமிழீழ விடுதலைப் புலிகளை மாற்றியமைப்பதே தாராண்மைத்துவ மேற்குலகின் அப்போதைய மூலோபாயமாக விளங்கியது. அதுவே சமாதானப் பேச்சுவார்த்தைகளுக்கான மேற்குலகின் வழிகாட்டியாகவும் அமைந்தது. இதில் குறிப்பிடத்தக்க விடயம் என்னவென்றால், மேற்குலகின் மூலோபாயத்தை ஆரம்பத்தில் இருந்தே தமிழீழ விடுதலைப் புலிகளும் நன்கு புரிந்துகொண்டிருந்தார்கள்.

மேற்குலகின் தவறான அணுகுமுறைக்காக அதனைப் பகைத்துக் கொள்வதைவிட, அதனால் வகுக்கப்படும் பொறியை எதிர்கொண்டு, அதனூடாகத் தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் நியாயங்களை மேற்குலக சக்திகளுக்கு எடுத்துரைத்து, ஈற்றில் தமிழீழ தனியரசுக்கான இராசீக அங்கீகாரத்தைப் பெறுவதே தமிழீழ விடுதலைப் புலிகளின் எதிர்மூலோபாயமாக அன்றைய காலகட்டத்தில் அமைந்திருந்தது. அதனை அடிப்படையாகக் கொண்டே சமாதானப் பேச்சுவார்த்தைகளில் தமிழீழ விடுதலைப் புலிகளின் பங்கேற்பும், ஒத்துழைப்பும் அமைந்திருந்தது. இவ்வாறாக, சமாதான காலத்தில் கிடைக்கப்பெற்ற சகல விதமான வாய்ப்புக்களையும் பயன்படுத்தி, தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு அனைத்துலக அங்கீகாரத்தைப் பெறுவதற்கான சகல முயற்சிகளையும் தமிழீழ விடுதலைப் புலிகள் எடுத்திருந்தார்கள் என்பதே மெய்யுண்மையாகும். இதுவே, தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டம் பின்னடைவுக்கு ஆளாகியமைக்கு எந்த வகையிலும் தமிழீழ விடுதலைப் புலிகள் காரணமாக இருக்கவில்லை என்பதை நாம் புரிந்து கொள்வதற்குப் போதுமானதாகும்.

(தொடரும்)

அரசியல் ஆய்வாளர் - க.வாமன்

# சிறீலங்காவில் போரும் அமைதியும்

உள்நாட்டுப் போர் முடிவுற்றாலும் எதிர்பார்த்த அமைதி சிறீலங்காவில் ஏற்படவில்லை. முதலாம் இரண்டாம் உலகப் போர்களில் கடும் போர் நடத்திய பிரான்சும் ஜேர்மனியும் இன்று உறுதியான நட்பு நாடுகளாகி விட்டன. இது போன்ற ஒரு நிகழ்வைச் சிறீலங்காவில் காணமுடியாது. தமிழ் – சிங்களப் பகைமை பல நூற்றாண்டுக்குப் பழமை வாய்ந்தது.

மனதிலே பகை உதட்டிலே நட்பு என்ற அடிப்படையில் இரு பக்க உறவுகள் இடம் பெறுகின்றன. சிறீலங்கா இனப்பிரச்சனை புற்று நோய் போன்றது. அது மறைவது போல் இருந்து மீண்டும் தோன்றி விடும். தமிழர்களைத் தோற்கடிக்கும் நோக்குடன் ஒன்றிணைந்த சிங்கள இனத்தவர்கள் மத்தியில் போர் முடிந்ததும் வெடிப்புக்கள் தோன்றிவிட்டன. சிங்கள ஒற்றுமைக்கு ஒரு பொது எதிரி தேவைப்படுகிறது.

அரசனைக் கவிழ்த்து அரியணையைக் கைப்பற்றும் சேனாதிபதி பற்றிப் புராண இதிகாசங்களில் படித்திருக்கிறோம். 21ஆம் நூற்றாண்டுச் சிறீலங்காவில் அது கிட்டத்தட்ட நடக்கும் வாய்ப்பு அண்மையில் தோன்றியது. தமிழர்களுக்கு எதிரான போருக்கு தலைமை தாங்கிய தரைப்படைத் தளபதியும் கூட்டுப் படைகளின் தலைமை அதிகாரியுமான ஜெனரல் சரத் பொன்சேகா கடற்படைத் தலைமைச் செயலகத்தில் நிறுவப்பட்ட சிறைக் கூடத்தில் அடைக்கப்பட்டுள்ளார். எதிர்க் கட்சிகளோடு இணைந்து அரசுக்கும் சனாதிபதிக்கும் எதிராகச் செயற்பட்டார் என்றும் தனக்கு நெருக்கமான 36 இராணுவ அதிகாரிகள், முப்படைகளில் இருந்து தப்பியோடிய 400 வரையிலான விசுவாசிகள், ஜே.வி.பி கட்சி உறுப்பினர்கள் ஆகியோர் உதவியுடன் அரசைக் கைப்பற்றச் சதி செய்தார் என்றும் அவர் மீது குற்றஞ் சுமத்தப்பட்டுள்ளது.

நடுநிலை நோக்கர்கள் பார்வையில் இவர் செய்த மிகப் பெரிய குற்றம் சனாதிபதி பதவிக்கான பொதுத் தேர்தலில் மகிந்த ராஜபக்சவை எதிர்த்துப் போட்டியிட்டதாகும். சிறீலங்கா பாரம்பரியத்தின்படி தமிழர்களுக்கு எதிரான போரில் சாதனை நிகழ்த்திய தளபதிக்கு வெளிநாட்டுத் தூதுவர் பதவி வழங்கப்படுவது வழமை. சரத் பொன்சேகா மரபுக்கு மாறாகத் தேர்தலில் போட்டியிட்டு வெகுமதி அளிக்கும் நிலையில் இருந்த சனாதிபதியின் மடியில் கை வைத்துவிட்டார். சனாதிபதி மகிந்தவின் இளவலான கோத்தபாய ராஜபக்ச அரசின் பாதுகாப்புச் செயலராகப் பதவி வகிக்கிறார். தமிழர்களுக்கு எதிரான போரில் ஈட்டிய வெற்றிக்குத் தானே முழுப் பொறுப்பு என்று பொன்சேகாவும் கோத்தபாயவும் மோதிக் கொண்டனர். மோதலில் இளவலின் கை ஓங்கியதாக நம்புவதற்கு இடமுண்டு.

சரத் பொன்சேகாவின் இக்கட்டான நிலைமைக்கு சர்வதேசப் பரிமாணமும் உண்டு. தமிழர்களுக்கு எதிரான போர் கருக்கட்டியவுடன் தளபதி சரத் பொன்சேகா இந்தியத் தலைநகர் புது டில்லிக்குத் திக் விஜயம் மேற்கொண்டார். அவருக்குச் செங்கம்பள வரவேற்பு உபசாரம் வழங்கப்பட்டது. 'இவர் தோற்பதை நாங்கள் விரும்பமாட்டோம்' என்று இந்தியத் தரைப்படைத் தளபதி வரவேற்பு உரையில் கூறினார். போருக்கான இரகசியத் திட்டங்கள் அச்சமயத்தில் தீட்டப்பட்டன. கொம்பு சீவி விடப்பட்ட பொன்சேகா இந்தியா வகுத்த திட்டத்தின் அடிச்சுவட்டில் போரை முன்னெடுத்தார். நேரம் தவறாமல் உறுதி மொழி வழங்கப்பட்ட உதவிகளும் வந்து சேர்ந்தன வெற்றியும் கிட்டியது.

ஜெனரல் பொன்சேகாவின் பிள்ளைகள் அமெரிக்கவில் குடியேறியுள்ளனர். குடியுரிமை வழங்கப்படாவிட்டாலும் பச்சை அட்டை எனப்படும் குடியுரிமைக்கான முதற்கட்ட அனுமதி சரத் பொன்சேகாவிற்கு வழங்கப்பட்டுள்ளது. அமெரிக்கா சென்று திரும்பும் உயர்ந்த சலுகையையும் அவர் பெற்றுள்ளார். கோத்தபாய ராஜபக்ச ஒரு முழு அளவு குடியுரிமை பெற்ற அமெரிக்கராவார். மகிந்தரின் இன்னுமோர் இளவலான பசில் ராஜபக்ச ஜெனரல் பொன்சேகா போல் பச்சை அட்டை அந்தஸ்துப் பெற்றிருக்கிறார். மகிந்தரின் முத்த ஆலோசகர் அரச தேவைகளுக்காக இந்தியாவிக்கு நியமனம் பெறாத தூதராகச் செல்பவர் என்ற பதவிகள் பசில் ராஜபக்சவுக்கு வழங்கப்பட்டுள்ளன.

தமிழர்களுக்கு எதிரான போரின் போது சிங்கள இராணுவம் புரிந்த பாரியளவு மனித உரிமை மீறல்கள் போர் குற்றங்கள் சிவிலியன் படுகொலைகள் போன்றவற்றிக்காக இராணுவப் பொறுப்பதிகாரிகள் மீதும் அரசுத் தலைமை மீதும் குற்றவியல் நடவடிக்கை மேற்கொள்ளப்பட வேண்டும் என்ற வலுவான குரல் அமெரிக்காவில் எழுந்தது சனாதிபதி ராஜபக்ச, கோத்தபாய ராஜபக்ச, சரத் பொன்சேகா ஆகியோர் சர்வதேச நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டுத் தண்டிக்கப்பட வேண்டும் என்ற குரலும் எழுந்தது. அமெரிக்கக் குடியுரிமை பெற்றவர்கள் பிற நாடுகளில் புரியும் மனித உரிய மீறல்களுக்கு விசாரணையின் பின் கடும் தண்டனை வழங்கப்பட வேண்டும் என்றும் அமெரிக்க அரசின் உயர்மட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

இந்தச் சூழலில் சரத் பொன்சேகா துணிவே துணை என்று அமெரிக்கா சென்றார். அவர் நிட்சயம் கைது செய்யப்படலாம் கடும் விசாரணைக்கு உட்படுத்தப்படலாம் என்று போரில் பாதிக்கப்பட்ட தமிழர்கள் எதிர்ப்பார்த்தனர். அவர் சிறீலங்கா திரும்புவதற்கு அனுமதிக்கப்படமாட்டார் என்ற எதிர்ப்பார்ப்பும் இருந்தது. ஆனால் நடந்தது வேறு விதமாக இருக்கிறது. அவர் அமெரிக்க அதிகாரிகளுடன் நட்புறவு அடிப்படையில் பேசி விட்டு மிகக் குறுகிய காலத்தில் நாடு திரும்பினார். அதன் பின்புதான் அவர் தேர்தலில் நிற்கப்போவதாகத் தகவல் வெளியிட்டார். மனித உரிமைகள் போர் குற்றங்கள் சிவிலியன் உயிரிழப்பு பற்றிப் பேசிய அமெரிக்க அரசு சரத் பொன்சேகாவை திரும்பிச் செல்ல அனுமதித்ததை ஒரு நிகழ்கால அரசியல் மர்மமாகக் கருத வேண்டும்.

இரண்டாவது தடவையாக சனாதிபதி பதவிக்குப் போட்டியிடும் மகிந்த ராஜபக்ச இந்தியாவின் ஆசியைப் பெற்றவர் என்றும் ஜெனரல் சரத் பொன்சேகா அமெரிக்காவின் ஆதரவைப் பெற்றவர் என்றும் தேர்தல் காலந்தொட்டு இன்று வரை பேசப்படுகிறது. அமெரிக்க அரசு சிறீலங்கா மீது தொடுக்கும் கண்டனக் கணைகள் இக் கூற்றை மெய்ப்பிக்கின்றன. பொன்சேகாவைக் கைது செய்வதற்கும் தடுத்து வைத்திருப்பதற்கும் பொருத்தமான குற்றத்தை அவர் செய்யவில்லை என்றும் அவருடைய உயிருக்கு உத்தரவாதம் அளிக்கப்பட வேண்டும் என்றும் அமெரிக்கா விடுக்கும் அறிக்கைகள் தெரிவிக்கின்றன. எனது கணவரின் உயிருக்கு ஆபத்து என்று பொன்சேகாவின் மனைவி அனோமா அலறியதின் எதிரொலியாகவும் இது இருக்கலாம்.

தமிழர்களின் தோல்விக்கு உதவியதற்கு நன்றிக் கடனாக மகிந்த ராஜபக்ச அரசு தமது சொற்படி நடக்கும் என்று புது டில்லி வெளிவிவகார அமைச்சகத்தின் தென் மாடித் தொடரில் பணியாற்றும் மலையாள இராசதந்திரிகள் போட்ட கணக்கு பொய்த்து விட்டது. சீனப் பிரசன்னம் உறுதியாக இருக்கிறது. மகிந்த ராஜபக்ச ரஷ்யா சென்று திரும்பியுள்ளார். கொத்துக் குண்டுகள், இரசாயன விசவாயுக் குண்டுகளைச் சலுகை விலை அடிப்படையில் வழங்கியதற்காக நன்றி கூறுவதற்கு மகிந்த ராசபக்ச இப் பயணத்தை மேற்கொண்டிருக்கலாம். இது வரை நடந்தவற்றைப் பார்க்கும் போது சிறீலங்காவின் கையோங்கியது போலவும் சிறீலங்காவின் போக்கிற்கு இந்தியா எல்லா வகையிலும் அனுசரணையாக இருப்பது போலவும் தோன்றுகிறது. தமிழர்களின் தோல்வியை உறுதிசெய்ய உழைத்த இந்திய பாதுகாப்புச் செயலர் எம்.கே.நாராயணன் மேற்கு வங்க ஆளுநராக நியமிக்கப்பட்டுள்ளார். அவருடைய இரட்டையரான சிவசங்கர் மேனன் நாராயணனின் பதவியில் அமர்த்தப்பட்டுள்ளார். இந்தியாவின் கையறு நிலையைக் காட்ட இது போதுமானதாக இருக்கிறது.

தமிழர்களுக்கு அவலத்தைக் கொடுத்த சரத் பொன்சேகாவிற்குத் தேர்தலின் போது வடகிழக்குத் தமிழர்கள் கணிசமானளவு சாதகமாக வாக்களித்துள்ளனர். நம்புவது கடினமாயினும் இது உண்மை. தமிழ்ப் போரா

(38ம் பக்கம் பார்க்க)



**புரிந்துணர்வு உடன்படிக்கையின் பின் இழந்த நிலத்தை மீளப் பெறலாம் என்ற நப்பாசை தமிழர்களுக்கு இருந்தது. ஒரு அங்குல நிலத்தையேனும் திருப்பித்தர முடியாது என்று அப்போது யாழ் குடாத் தளபதியாகப் பதவி வகித்த பொன்சேகா அடம் பிடித்தார். முதற் கோணல் முழுக் கோணலாக மாறியதோடு போரும் வந்தது.**

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

# இந்தியாவை அடிமைப்படுத்திய 'கிழக்கிந்தியக் கொம்பனி' இந்தியர் வசம்!

## அடிமைப்படித்தியதை அடிமைப்படுத்த கடினமாக உழைத்தவர்!

ஆங்கிலேயர்கள் இந்தியாவை அடிமைப்படுத்துவதற்கு நுழைவாயிலாக திகழ்ந்து, இந்தியாவை கிட்டத்தட்ட 400 ஆண்டுகள் ஆட்டிப்படைத்து வந்த கிழக்கிந்தியக் கொம்பனியை இந்தியர் ஒருவர் விலைக்கு வாங்கியுள்ளார். மும்பாயைச் சேர்ந்த இலண்டனில் வசிக்கும் கோடீஸ்வரரான சஞ்சீவ் மேத்தா 15 மில்லியன் டொலர் மதிப்பில் இந்த நிறுவனத்தின் பங்குகளை முழுமையாக தன்வசப்படுத்தியுள்ளார்.

கிழக்கிந்தியக் கொம்பெனியைக் கையகப்படுத்துவதற்காக அவர் கடந்த 6 ஆண்டுகளாக கடுமையாக பாடுபட்டுள்ளார். 2004ம் ஆண்டே நிறுவனத்தின் பெரும்பாலான பங்குகளை வாங்கும் நடவடிக்கையைத் தொடங்கிய மேத்தா, தற்போது அதனை முழுமையாக வாங்கியுள்ளார். இந்த நிறுவனத்தைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்வதற்காக உலகின் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று குறிப்பாக கண்காட்சியங்கள், தொல்பொருள் மையங்களுக்குச் சென்று விரிவான தகவல்களை சேகரித்துள்ளார் மேத்தா.

கிழக்கிந்தியக் கொம்பெனியின் வரலாறு 1600ம் ஆண்டு தொடங்குகிறது. அந்த ஆண்டில் டிசம்பர் 31ம் திகதிதான் கிழக்கிந்தியக் கம்பெனி தனது வர்த்தகத்தைத் தொடங்க இங்கிலாந்து ராணி முதலாம் எலிசபெத் அனுமதி அளித்தார். தற்போதைய தெற்காசிய நாடுகள், தென் கிழக்கு ஆசிய நாடுகள் ஆகியவற்றை உள்ளடக்கிய பகுதிகளில் வர்த்தகத்தை மேற்கொள்ள இந்த நிறுவனத்திற்கு அனுமதி அளிக்கப்பட்டது.

இந்தப் பகுதிகளை அந்த நிறுவனம் கிழக்கிந்தியா என்று அழைத்தது. இதன் காரணமாகவே கிழக்கிந்தியா என்ற பெயரையும் அந்த நிறுவனம் சூடிக் கொண்டது. அதுவரை அப்படி ஒரு வார்த்தையே கிடையாது என்பது முக்கியமானது. ஆனால் கிழக்கு இந்தியப் பகுதிகளில் வர்த்தகத்தைக் கவனிப்பதற்குப் பதில் இந்தியாவிலும், சீனாவிலும் கால் பதித்தது கிழக்கிந்தியக் கொம்பனி.

கிழக்கிந்தியக் கொம்பனி வர்த்தகம் செய்யும் நோக்கில் இந்தியாவுக்குள் நுழைந்த பின்னர் படிப்படியாக அந்த நிறுவனத்தின் மூலம் இந்தியப் பொருளாதாரத்தைக் கைப்பற்றி அப்படியே நாட்டையும் கைப்பற்றி விட்டது பிரித்தானிய அரசு. அதன் பின்னர் 1874ம் ஆண்டு ஜனவரி 1ம் திகதி கிழக்கிந்தியக் கொம்பெனியை கலைத்து விட்டது பிரித்தானிய அரசு. நிறுவனத்திடம் இருந்து வந்த அனைத்து அதிகாரங்களும் பிரித்தானிய ராணிக்கு மாற்றப்பட்டு விட்டன. அதன் பின்னர் அந்த நிறுவனம் செயல்படாமல் முடங்கிப் போனது. தற்போது அந்நிறுவனத்தை வாங்கியுள்ள மேத்தா அதன் விற்பனையகத்தை முதலில் மேபேர் பகுதியில் தொடங்கவுள்ளார். அடுத்து இலண்டனில் ஒரு கிளை பரப்புகிறார். இதுதவிர இந்தியா, மத்திய கிழக்கு நாடுகள், ஜப்பான், ரஷ்யா, அமெரிக்கா ஆகிய நாடுகளுக்கும் கிழக்கிந்தியக் கொம்பெனியின் கிளைகளைக் கொண்டு போகப் போகிறாராம். இந்த வர்த்தகக் கிளைகளில் கோப்பி, தேயிலை, நறுமணப் பொருட்கள், தோல்ப் பொருட்கள், மரச் சாமான்கள் ஆகியவற்றை விற்கத் திட்டமிட்டுள்ளார். தனது சாதனை குறித்து மேத்தா கூறுகையில், உண்மையில் இது மிகப் பெரிய சாதனையாகும். எனது நாட்டை அடிமைப்படுத்திய கம்பெனியை வாங்கி விட்ட பெருமை உள்ளது. நம்மை ஆட்டுவித்த நிறுவனத்தை இனி நான் கட்டுப்படுத்தப் போகிறேன் என்ற உணர்வே மிகப் பெரிய சந்தோசத்தைக் கொடுக்கிறது. இந்த நிறுவனத்தை வாங்கும் முன்பு அது குறித்து அறிவதற்காக பல நாடுகளுக்கும் நான் போனேன். அப்போது இந்த நிறுவனம் நடத்திய வர்த்தக முறைகள், அதன் தொழில் செயல்பாடுகள், அது தொடர்பான வரலாறுகளைத் தெரிந்து கொண்டேன் என்றார் மேத்தா. வாழ்க்கை என்பது சுழற்சியானது எனவே, கடந்த காலத் துன்பமயமான நினைவுகளை மீள்நினைப்பது தேவையற்றது? என பிரித்தானிய வர்தகத்துறை அமைச்சரான பற் மக்பாடன் தெரிவித்துள்ளார்.

## தமிழகத்தில் முத்துக்குமார் கரும்புலிப் பாசறைகள் - திருமாவளவன்

தமிழகம் முழுவதும் முத்துக்குமார் பாசறைகள் அமைக்கப்படும் என விடுதலைச் சிறுத்தைகள் தலைவர் தொல். திருமாவளவன் கூறியுள்ளார். முத்துக்குமாரின் குடும்பத்தினரை நேற்று சந்தித்தார் திருமாவளவன். பின்னர் முத்துக்குமாரின் சகோதரி தமிழரசியிடம் 2 இலட்சம் ரூபா குடும்பப் பாதுகாப்பு நிதியை அளித்தார். பிறகு செய்தியாளர்களிடம் பேசுகையில், ஆண்டுதோறும், முத்துக்குமாரின் நினைவு நாளான சனவரி 29ம் நாளை தமிழகக் கரும்புலிகள் நாளாக விடுதலைச் சிறுத்தைகள் கட்சி எழுச்சியுடன் கடைப்பிடிக்கும்.

அத்துடன் கரும்புலி முத்துக்குமாருடைய தமிழீழ விடுதலைக்கான அர்ப்பணிப்பை தமிழகத்தில் பரப்பும் வகையில் கரும்புலி முத்துக்குமார் பாசறை என்ற அமைப்பை விடுதலைச் சிறுத்தைகள் கட்சி சார்பில் தொடங்குகிறோம். இந்த அமைப்பு தமிழ்நாடு முழுக்க முத்துக்குமாருடைய கொள்கைகளைப் பரப்பும். கரும்புலி முத்துக்குமாரைத் தொடர்ந்து வீரச்சாவடைந்த தமிழகக் கரும்புலிகள் அனைவரின் குடும்பத்திற்கும் விடுதலைச் சிறுத்தைகள் கட்சி சார்பாக பாதுகாப்பு நிதி வழங்கப்படும் என்றார்.

# "வானத்தைக் கிழித்து வைகுண்டம் காட்ட வேண்டாம், முதலில் கூரையில் ஏறிக் கோழியைப் பிடியுங்கள்"

கடந்த வாரம் சென்னை ஞாபகார்த்த மண்டபத்தில், இலங்கைத் தமிழர்களுக்கு வாழ்வுரிமை அளிக்கக் கோரி திராவிடர் கழகத் தலைவர் வீரமணி தலைமையில் ஆர்பாட்டம் நடத்தப்பட்டது. ஆர்பாட்ட முடிவில் வீரமணி செய்தியாளர்களிடம் 'இலங்கையில் தமிழினம் அழிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. இரண்டு இலட்சத்திற்கும் மேற்பட்ட தமிழர்கள் இன்னும் முகாம்களில் இருந்து விடுவிக்கப்படவில்லை. ஆயிரக்கணக்கான இளஞர்களின் கதி என்ன ஆனது என்றே தெரியவில்லை' என்று அறியப் பெரிய உண்மைகளையெல்லாம் இப்போது தான் துப்பறிந்து வந்தது போல் அடுக்கியவர் இந்தப் பிரச்சனையில் மத்திய அரசு தலையிட்டு உடனடியாகத் தீர்வு காணவேண்டும் என்ற வேண்டுகோளையும் முன்வைத்திருக்கிறார்.

இலங்கையில் தமிழின அழிப்புப் போரை இயக்கிய சூத்திரதாரிகளே இந்தியாவை ஆள்பவர்கள்தான் என்பதும் சூத்திரர் சூத்திரர் என்று தங்களைச் சொல்லிக்கொண்டே அந்தச் சூத்திரதாரிகளுக்குத் துணைபோன துரோகக் கும்பலுக்குள் யார் யாரெல்லாம் அடக்கம் என்பதும் ஈழத் தமிழன் அறியாததா? வீரமணி அவர்களே! ஒரு காலத்தில் ஈழத்தமிழர் மீது நீங்கள் கொண்டிருந்த பற்று பாசத்தில் இன்று ஏதாவது மிச்சம் மீதம் இருக்குமாயின் ஒரு காரியம் செய்யுங்கள். இலங்கை வதை முகாம்களில் வாடும் ஈழத்தமிழர்களை காப்பாற்றுவது ஒரு புறம் இருக்கட்டும். இங்கே தாய்த் தமிழ்நாட்டில் அடைக்கலம் என்று வந்த ஈழத்தமிழர்கள் செங்கல்பட்டிலும், பூந்தமல்லியிலும் தமிழகக் காவல்துறையினரால் சித்திரவதைப் படுகிறார்களே! காவல்துறையைக் கையில் வைத்திருக்கும் உங்கள் நண்பர் கருணாநிதியிடம் சொல்லி முதலில் அவர்களை மீட்பதற்கு வழிசெய்யுங்கள்.

ராஜீவ் - சோனியா குடும்பத்தார் சம்மந்தப்பட்ட, இந்திய மக்களின் வரிப் பணம் கோடி கோடியாய் வஞ்சமாய்க் கொடுக்கப்பட்ட, இந்திய பாதுகாப்புக்கே ஊறு விளைவிக்கிற போஃபர்ஸ் பீரங்கி பேர ஊழல் வழக்கினை எந்தவித நியாயமான காரணமுமின்றி வாபஸ் வாங்கியதே கொங்கிரஸ் அரசு! அது எப்படிச் சாத்தியம் ஆனது? அது சாத்தியம் எனில், ஆண்டுக் கணக்கில் சிறப்பு முகாம்களில் வாடும் எம் சொந்தங்கள் மீதுள்ள அனாமத்து வழக்குகளை உங்கள் கருணாநிதியிடம் சொல்லி உங்களால் வாபஸ் வாங்க முடியாதா? அதை முதலில் செய்யுங்கள். நீங்கள் வானத்தைக் கிழித்து வைகுண்டம் காட்டுவது அப்புறம் ஆகட்டும். உங்கள் வீட்டுக் கூரையில் ஏறிக் கோழியைப் பிடிப்பது இப்போது நடக்கட்டும்.

சீதையின் மைந்தன்
ஆசிரியர், கரிகாலன்

# பாகிஸ்தான் - இந்தியா மீண்டும் பேச்சுவார்த்தை

இந்தியா-பாகிஸ்தான் வெளியுறவு செயலாளர்கள் மட்டத்தில் டில்லியில் 25ம் திகதி பேச்சுவார்த்தை நடத்தப்படும் என்று பாகிஸ்தான் அதிகாரப்பூர்வமாக அறிவித்துள்ளது. இந்தியா - பாகிஸ்தான் இடையே நடைபெற்று வந்த கூட்டுப் பேச்சுவார்த்தை, மும்பை தாக்குதலுக்கு பிறகு முறிந்தது. இதையடுத்து, அமெரிக்காவின் வற்புறுத்தலால், பாகிஸ்தானுடன் மீண்டும் பேச்சுவார்த்தை நடத்த இந்தியா ஒப்புக்கொண்டது.

டில்லியில், வெளியுறவு செயலாளர்கள் மட்ட பேச்சுவார்த்தை நடத்தலாம் என்று பாகிஸ்தான் வெளியுறவு செயலாளர் சல்மான் பஷிருக்கு இந்திய வெளியுறவு செயலாளர் நிருபமா ராவ் அழைப்பு விடுத்தார். அதை பாகிஸ்தான் ஏற்றுக்கொண்டது. இந்நிலையில், இது பற்றி விவாதிக்க பாகிஸ்தான் பிரதமர் யூசுப் கிலானியின் இல்லத்தில் ஆலோசனை கூட்டம் நடைபெற்றது. பாகிஸ்தான் வெளியுறவுத்துறை அமைச்சர் ஷா மெக்முத் குரேஷி, வெளியுறவு செயலாளர் சல்மான் பஷிர், காஷ்மீருக்கான நாடாளுமன்ற ஆணைக்குழுத் தலைவர் மவுலானா பஸ்லுர் ரகுமான் ஆகியோருடன் கிலானி ஆலோசனை நடத்தினார்.

இக்கூட்டத்தில், இந்தியா - பாகிஸ்தான் உறவு, காஷ்மீர் பிரச்சினை, நதிநீர்ப் பிரச்சினை ஆகியவை குறித்து விவாதிக்கப்பட்டு, இந்தியாவுடன் 25ம் திகதி பேச்சுவார்த்தை நடத்துவது என முடிவு செய்யப்பட்டது.

இதுகுறித்து, பாகிஸ்தான் பிரதமர் அலுவலகம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறப்பட்டு இருப்பதாவது, பாகிஸ்தான், திறந்த மனதுடன் இப்பேச்சுவார்த்தைக்கு செல்கிறது. காஷ்மீர் உள்பட அனைத்து பிரச்சினைகளுக்கும் தீர்வு காண இந்தியாவுடன் அர்த்தமுள்ள பேச்சுவார்த்தை நடத்த விரும்புகிறது. இந்த பேச்சுவார்த்தையில், மையப் பிரச்சினைகள் அனைத்தையும் பாகிஸ்தான் எழுப்பும். மீண்டும் கூட்டுப் பேச்சுவார்த்தை நடத்துவதன் மூலம் பிரச்சினைகளுக்கு விரைவாக தீர்வு காண்பதற்கான அவசியத்தை வற்புறுத்தும். இந்தியாவுடன் ஆக்கப்பூர்வமாகவும், அர்த்தமுள்ளதாகவும் பேச்சு நடத்துமாறு பாகிஸ்தான் வெளியுறவு செயலாளர் சல்மான் பஷிரை பிரதமர் கிலானி கேட்டுக்கொண்டார். இவ்வாறு அதில் கூறப்பட்டுள்ளது.

# 2016ல் அரசியல் புரட்சியை உருவாக்குவேன் - சீமான்

மே 18 ம் திகதி நாம் தமிழர் இயக்கத்தை அரசியல் இயக்கமாக அறிவிக்க இருக்கிறேன். அதன் பின்னர் 2016ல் மாபெரும் அரசியல் புரட்சியை ஏற்படுத்துவேன் என்று கூறியுள்ளார் சீமான். ஈழ தமிழர்களுக்காக உயிர் நீத்த முத்துக்குமாரின் முதலாம் ஆண்டு நினைவை போற்றும் வகையில் சேலம் போஸ் மைதானத்தில் நாம் தமிழர் இயக்கம் சார்பில் பொதுக்கூட்டம் நடந்தது. நிகழ்ச்சிக்கு நாம் தமிழர் இயக்க ஒருங்கிணைப்பாளரும்; இயக்குநருமான சீமான் தலைமை வகித்து சிறப்புரையாற்றினார்.

அப்போது சீமான் பேசுகையில், வரும் மே 18ம் திகதி நாம் தமிழர் இயக்கத்தை அரசியல் இயக்கமாக அறிவிக்க இருக்கிறேன். இதுதான் எனது இலக்கு. இதன் பின்னர் 2016ல் ஒரு பெரிய அரசியல் புரட்சி ஏற்படுத்தி காட்டுவேன். தமிழ் இனத்திற்காக முத்துக்குமார் போன்ற பலர் உயிர் நீத்துள்ளார்கள். நம் நாட்டில் காட்டில் எவ்வளவு புலிகள் உள்ளது என்பதை கணக்கிடுகிறார்கள். மிருகங்களை வதை செய்ய கூடாது என்று கூறுகிறார்கள். ஆனால் ஒரு இனமே அழிந்து கொண்டு இருக்கிறது. ஒன்றரை இலட்சம் பேரை ராஜபக்ச கொன்று குவித்துள்ளார். உலகம் முழுவதும் நாம் உள்ளோம். உலகம் பெருமைப்பட்டு பார்க்கும் இனமாக தமிழ் இனம் உள்ளது. நம் மொழி, இனம் காப்பதற்காக தமிழர்கள் அனைவரும் ஒன்றிணைந்து போராடுவோம் என்றார். கூட்டத்தில் சென்னையில் முத்துக்குமார் தீக்குளித்து உயிர்நீத்த சாஸ்திரி பவன் அமைந்துள்ள ஹாரிங்டன் சாலைக்கு முத்துக்குமாரின் பெயர் சூட்ட வேண்டும் என்பது உள்ளிட்ட பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இலங்கையின் 62வது சுதந்திர நாளில் சிங்களப் பௌத்த மேலாதிக்கத்தால், நடத்தப்பட்ட தமிழின அழிப்பின் சிகரமான இராஜபக்சேவின் ஜனாதிபதித்துவம் மீண்டும் நிலைநிறுத்தப்பட்ட நிலையில், தமிழர்கள் தமது எல்லா வேற்றுமைகளையும் மறந்து தமக்கு எதிராகத் தொடர்ந்து நடத்தப்படும் இன அழிப்பை நிறுத்துவதே தமது தலையாய கடமையெனக் கொண்டு செயல்படும் பொருட்டு, இக்கட்டுரை வரையப்படுகின்றது. தமிழ் மக்கள் தங்களை எதிர்நோக்கும் அபாயங்களை எண்ணாது வேறு சில அற்பமானப் பிரச்சனைகளால் திசை திருப்பப்படுவது வேதனை அளிக்கிறது. வட்டுக்கோட்டைத் தீர்மானம் வழியோ, மக்களவை வழியிலோ நாம் அடையப்போகும் தமிழீழத்திற்கு அடித்தளமாக எமது மக்களையும், இனத்தையும் அதை அடையும் வரை பாதுகாக்காவிட்டால் எமது இலக்கை ஒரு போதும் எய்தமுடியாது. 'சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும்' என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். தமிழ் இனத்தின் மீது தொடர்ந்து நடத்தப்படும் இனஅழிப்புத் திட்டத்தினை வரலாற்றுப் பூர்வமான ஆதாரங்களுடன் நிருபிப்பதற்கு இக்கட்டுரையில் முயற்சிக்கிறோம்.

# ஈழத்தமிழர் மீதான இனஅழிப்புத் திட்டத்தை நிறுத்துவது யார்?

# ஐ.நா.வா?

# மீண்டும் தமிழர்களின் ஆயுதப் போராட்டமா?

**இனப்படுகொலை என்பது:**

போலந்து நாட்டின் யூதரான வழக்கறிஞர், ரபேல் லெம்கின் (Raphael Lemkin) என்பவர்தான் இனப்படுகொலை (Genocide) என்பது பற்றி முதன்முதலாக வரைவிலக்கணம் வகுத்தவர் ஆவார். 1933-இல் நாசிகள் ஆட்சிக்கு வரும் முன்பே, தேசிய (national), இன (racial), மத (religious), வகை குழுவினர் (ethinic group), ஆகியோரின் அழிவிற்கு எதிராக சர்வதேசச் சட்டம் கொண்டுவர தனியே நின்று பாடுபட்டவர். இனப்படுகொலை பற்றிய ஆராய்ச்சியில், அவர் செய்த வேலை அடித்தளமாக அமைந்துள்ளது.

**ரபேல் லெம்கின் கருத்துப்படி:**

(U.N )Article 1:

சமாதானக் காலத்தில் ஆயினும் அல்லது போர் நடக்கும் காலங்களில் ஆயினும் இனப்படுகொலை நடைபெறும் வேலையில் சர்வதேசச் சட்ட விதி முறைப்படி தடுக்கப்பட வேண்டியதும், தண்டிக்கப்பட வேண்டியதுமான ஒரு குற்றமாகும்.

(U.N )Article 2:

இனப்படுகொலை என்பது, முழுமையாகவோ அல்லது ஒரு பகுதியாகவோ தேசியம் சார்ந்த (National), அல்லது இனம் சார்ந்த (Racial), அல்லது வகை சார்ந்த (Ethinical), அல்லது சமயம் சார்ந்த (Religious), குழுவினரை அழிக்கும் நோக்கத்துடன் செய்யப்படுகின்ற செயல்கள் ஆகும்.

**இனப்படுகொலையாவன:**

அ). அக்குழுவினரின் அங்கத்தினர்களைக் கொல்லுதல்

ஆ). அக்குழுவினரின் அங்கத்தினர்களுக்கு பாரதூரமாக உடலளவிலோ, மனதளவிலோ தீங்கிழைத்தல்

இ). அக்குழுவினரின் முழுமையான அல்லது ஒரு பகுதியான அழிவை முன்னிட்டு வாழ்க்கை நிலையைப் பாதிக்கும் நடவடிக்கைகளை நன்றாகக் கணக்கில் எடுத்துக் கொண்டு, வேண்டுமென்று நிறைவேற்றுதல்..

ஈ). அக்குழுவினர்க்கு எதிர்காலச் சந்ததியினர் பிறக்க முடியாதவாறு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்

உ). ஒரு குழுவினரின் பிள்ளைகளை இன்னொரு குழுவினராகப் பலவந்தமாக மாற்றுதல்

ரபேல் லெம்கின் கூற்றுப்படி தொடர்ந்து நடைபெற்றுவரும் இன அழிப்பு வேலைகள்:

அ). ஆதாரங்கள் நிரூபணம் செய்யப்பட்டால் தண்டனை வழங்கப்பட வேண்டும்.

ஆ) தடுக்காவிட்டால் இன அழிப்புத் தொடர வாய்ப்பு ஏற்படும்

**ஐ.நா. சாசனத்தின்படி:**

இனப்படுகொலை தடுக்கப்பட வேண்டியதும், தண்டிக்கப்பட வேண்டியதுமாகும். ரபேல் லெம்கின் வரைவிலக்கணத்தின்படி இனப்படுகொலை என்பது மனம் சார்ந்த செயல்களையும் உள்ளடக்குவதன் மூலம் விரிவடைகின்றது. பொதுவாக நோக்குமிடத்து, இனப்படுகொலை என்பது ஒரு இனத்தின் முற்றான அழிப்பு என்கிற கருத்தை உள்ளடக்கப்படவில்லை. அதன்படி, ஒரு இனத்தினுடைய வாழ்க்கை மூலாதாரச் சக்திகளை, அந்த இனத்தை முற்றாக அழிக்கக்கூடிய நோக்குடன், வெவ்வேறு செயல்களை, உள்ளடக்கும் ஒரு கோர்வையான திட்டத்தையே குறிப்பிடுகிறது.

அப்படிப்பட்ட ஒரு திட்டத்தின் குறிக்கோள்கள் ஆவன:

அ). தேசிய இனங்களின் கலாச்சார, மொழி, தேசிய உணர்வு, சமயம், பொருளாதார நிலை ஆகியவற்றின் அரசியல், சமூகக் கட்டுமானங்களைச் சிதைக்கும் திட்டமாகும்.

ஆ). அத்தகைய குழுக்களைச் சேர்ந்த மக்களின் தனித்த பாதுகாப்பு, சுதந்திரம், சுகாதாரம், தன்மானம், உயிர்களையும்கூட அழிப்பதை உள்ளடக்கியது ஆகும்.

இனப்படுகொலை என்பது ஒருவர் ஒரு குறிப்பிட்ட குழுவில் உள்ளடக்கப்பட்டவர் என்ற காரணத்தினால் அன்றி, ஒருவரை தனிப்பட்ட முறையில் தாக்க முடியாது.

(எ-டு): ஒரு பேருந்தில் செல்பவர் அனைவரையும் கொல்லுதல் இனப்படுகொலை ஆகும். ஆனால் அந்தப் பேருந்தில் செல்பவருக்கும் கொன்றவருக்கும் தனிப்பட்ட பகை இருந்து கொன்றால் அது இனப்படுகொலை ஆகாது.

**இனப்படுகொலை இரண்டு வகைகளில் நடத்தப்படலாம்.**

1. பாதிக்கப்படுவரின் தேசிய இனத்தை அழித்தல்.

2. பாதிப்பை உண்டாக்குபவர் தனது தேசியக் கொள்கையை மற்றவரின் மீது திணிக்கும்போது

(எ-டு) தமிழர்களை ஒரு பிரதேசத்தில் இருந்து வெளியேற்றிவிட்டு, அப்பகுதியில் சிங்களர்களைக் குடியேற்றுதல் போன்றவை

ரபேல் லெம்கின் என்பவர் போலந்து யூத இனத்தில் பிறந்திருந்தும் நாசிசப் பேரினப் படுகொலையில் இருந்து தப்பியவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

நாசிசவாதிகள் (Nazi's) போலந்தில் நடத்திய யூத இன அழிப்பையும், இலங்கையில் சிங்களர்கள் (Sinhalese) நடத்திய தமிழின அழிப்புடன் ஒப்பிட்டுப் பார்த்தோமானால், தமிழர்களுக்கெதிரான இனஅழிப்பு கொடுமை நடந்தேறி வருகின்றது என்பதை இக்கட்டுரையை படிக்கும் ஒவ்வொரு வாசகர்களாலும் எளிதாகப் புரிந்துகொள்ள இயலும்.

1. ஐரோப்பாவில் யூதர்களது இனப்படுகொலைக்கு முன்னரே, முற்காலந்தொட்டு ஐரோப்பிய நாடுகள் அனைத்திலும் யூதர்களுக்கு எதிரான பாகுபாடுகள் வளர்ந்திருந்தன. அதைப்போலவே, இலங்கையில், தேசிய இனமான தமிழினத்திற்கெதிரான பாகுபாட்டுடன், சிங்கள இனத்தவரால், 5ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மகாவம்சம் நூல், 1870-ல் மொழி பெயர்க்கப்பட்டது. தமிழினத்திற்கு முற்றிலும் எதிரான அதுவே சிங்களப் பௌத்த இனத்தவரின் பிரதான வரலாற்று மத நூலாகும்.

நாசி இனக்கொள்கை யூத இனத்திற்கு எதிரான அடிப்படையில் உண்டாக்கப்பட்டது. அதுபோலவே, மகாவம்சக் கொள்கையின்படி சிங்களவர் மட்டுமே இலங்கையில் வாழத் தகுதியுற்றவர்கள். மேலும் தமிழ்ச் சோழ அரசனையும் அவன் படைகளையும் கொல்லுதல் என்பது, பாவிகளையும், காட்டு விலங்குகளையும் கொல்வதற்கு ஒப்பாகுமென்று கூறுகிறது. ஆயிரம் தமிழர் உயிர்கள்கூட ஒரு சிங்களர் உயிருக்குச் சமமானதல்ல என்று கூறுகிறது. அப்படிப்பட்ட தமிழினத்திற்கு முற்றிலும் எதிரான நோக்கு கொண்ட மகாவம்ச இனக்கொள்கையையே இன்று சிங்களப் பௌத்த சிங்கள அரசியல் கட்சியான ஜாதிக ஹெலஉருமய கட்சி போன்றவைகள் பின்பற்றுகின்றன. 2003 மார்ச் திங்களில் சிங்களப் பௌத்த பிக்குகள், இலங்கை பிரிக்க முடியாத சிங்களவரின் ஓற்றையாட்சி நாடு என்றும், அங்கிருக்கும் பிற இன மதப் பாகுபாடுகள் முற்றாக அழித்தொழிக்கப்பட வேண்டும் என்றும் உறுதி மேற்கொண்டதை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

2. 1933– இல் ஜேர்மனியில் நடைபெற்ற தேர்தலில் நாசிகள் வெற்றி பெற்று ஆட்சிக்கு வந்தனர். அன்றிலிருந்து யூதர்களுக்கெதிரான இனஅழிப்பு திட்டமிட்ட வகையில் அரங்கேற ஆரம்பித்தன. இங்கு இலங்கையில், 1948 –இல் இலங்கை சுதந்திரம் அடைந்தவுடன், பிரித்தானியரிடமிருந்து சிங்களரின் கைக்கு அதிகாரம் மாற்றம் செய்யப்பட்டது. அதிகாரம் தங்களது கைகளில் வந்தவுடன் சிங்களர்கள் தமிழினத்திற்கெதிரான போக்கைப் பகிங்கரமாக நடைமுறைக்கு எடுத்துவந்தனர்.

3. 1935–ல் ஜொமானியாவின் நூரெம்பெர்க் (Nuremberg) சட்டங்கள் குறிப்பாக ரெய்ச் (Reich) குடியுரிமைச் சட்டம், ஜேர்மனிய யூதர்களின் குடியுரிமையை இழக்கச் செய்தது. இலங்கையில், தமிழர்களின் பலத்தைக் குறைக்கும் வகையில், 1948–ல் சிங்களர்களால் கொண்டுவரப்பட்ட குடியுரிமைச் சட்டத்தினால், 25 இலட்சம் இந்திய வம்சாவழித் தமிழர்களில், 10 இலட்சம் தமிழர்களின் குடியுரிமை பறிக்கப்பட்டது. (பலாத்காரமற்ற இனஅழிப்பு முறையாகும் இது)

4. 1933 முதல், யுத இன மக்களுக்கெதிராகக் கொலைகள் நாசிசவாதிகளின் அரசாங்க ஆதரவோடு, தொடர்ச்சியாகப் பெருமளவில் நடைபெற்றன. இலங்கையில் அதைப்போன்றே, 1956, 1958, 1977–ஆம் ஆண்டுகளில், அரசாங்கத்தின் ஆதரவோடும், ஒத்துழைப்போடும் தமிழினத்திற்கெதிராக இனக் கலவரங்கள் மூட்டப்பட்டு எண்ணற்ற தமிழர்கள் சிங்களர்களால் கொல்லப்பட்டனர். அவர்களது சொத்துகள் சூறையாடப்பட்டன.

1983 முதல் 90 –வரை முதலாவது ஈழப் போரிலும் அதன் பின்னர் நடந்த போர்களிலும், அரசாங்கம் பலாத்காரமாக உள்நாட்டிற்குள் இடம்பெயர்ந்த மக்களைப் பொதுவான இடங்களுக்குத் தள்ளிப் பெரிய அளவில் கொலைகளை நடத்தியது. அத்துடன் மட்டுமன்றி, ஊரடங்குச் சட்டங்கள், கொலைகள், வீடு எரிப்புகள் முதலான அடக்குமுறைச் சூழ்நிலைகளை உருவாக்கி, சிங்களப் பௌத்த இராணுவம் இடம் பெயர்ந்த மக்களைப் பள்ளிக்கூடங்களிலும், தேவாலயங்களிலும், கோவில்களிலும், அகதி முகாம்களிலும் குழுமி இருக்கச் செய்தது. சில சமயங்களில், இலங்கை அரசாங்கம் தமிழ் மக்களைப் பாதுகாப்பான இடங்களென குறிப்பிட்ட சில இடங்களுக்குச் செல்லும்படி வான்வழி விமானம் மூலம் துண்டுப் பிரசுரங்கள் பரப்பி, மக்கள் அப்பகுதிகளில் சென்றடைந்த பின், அதே மக்கள்மீது, வான்படையும், தரைப்படையுமாக முறையே குண்டுகளையும், ஷெல்களையும் பொழிந்து மக்களைக் கொன்றனர். 1990–95 ஈழப்போராட்டம் 2–ல், கிராமங்களில் கொல்லப்பட்டோர்களின் தொகைகள் பல நூறுகளைத் தாண்டின. கிராமப் படுகொலைகள் முந்தைய ஈழப் போர்களிலும் வழக்கமான நிகழ்வாகவே இருந்தன. 4வது கட்ட ஈழப் போரில் முன்பு கூறியதுபோல, இலங்கை அரசாங்கம், பாதுகாப்புப் பிரதேசம் என பிரகடனம் செய்து மக்களை அங்கு வரவழைத்தபின், வானிலிருந்து குண்டுகளையும், தரையிலிருந்து எறிகணைகளையும் வீசி அப்பாவித் தமிழ் மக்களைக் கொன்று குவித்தனர்.

5. (1) 1941–ல் போலந்தில் லுப்ளின் (Lublin) என்னும் இடத்தில் இருந்த யூதர்களின் சமய நிலையத்தின் தல்முடிக் (Talmudic) எனும் பெரிய நூலகமொன்று எரிக்கப்பட்டன. அதற்கு இணையாக இங்கு இலங்கையில், 1974–ல், 4–வது சர்வதேசத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில், அரசாங்கம் நடத்திய கொலை வெறியினால் பார்வையாளர்களாக வந்திருந்த தமிழர்கள் பலர் கொல்லப்பட்டனர். 1981–ல் தமிழினத்தின் மிகப்பெரும் பழமைவாய்ந்த யாழ்ப்பாண பொதுநூலகம் எரிக்கப்பட்டது. (யுனெஸ்கோ வரைவிலக்

38ம் பக்கம் பார்க்க

- பேராசிரியர் தீரன் -

# போர்க்குற்றங்களையும் ஆவணப்படுத்த ஓர் அவசர வேண்டுகோள்

போரால் பாதிக்கப்பட்டோரை பாதுகாக்கவும் மனித உரிமைகளை பேணவும் எமது நடுவம் அண்மையில் ஆரம்பிக்கப்பட்டது. இந்நடுவம் அனைத்துலக நாடுகளின் நியமங்களுக்கு ஏற்ற முறையிலும், மனித உரிமை தகவல்களை ஆவணப்படுத்தும் அமைப்பு என அழைக்கப்படும் கூறிடொக்ஷ்ஸ் (HURIDOCS) அமைப்பினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தகவல் ஆவணப்படுத்தும் முறைகளை பின்பற்றி மனித உரிமை மீறல்களை பதிவு செய்கின்றது.

இப் பணியானது இலங்கை விடுதலை பெற்ற நாளிலிருந்து குறிப்பாக 1958 இலிருந்து அண்மைக் காலம் வரை இடம்பெற்ற போர்க்குற்றங்கள், மனித உரிமை மீறல்களால் தமது குடும்பத்தவர்கள், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோர்களை இழந்து தவிக்கின்ற குடும்பத்தினர்களிடமிருந்து தகவல்களைச் சேகரித்து ஆவணப்படுத்தி சர்வதேச மனித உரிமை அமைப்புகளிற்கு சாட்சிகளைத் தொகுத்து வழங்கும் வழிமுறைகளை பின்பற்றுகின்றது. இதன்மூலம் எமது நாட்டில் தமிழ் மக்களிற்கு ஏற்பட்டுள்ள மனித உரிமை மீறல்கள் தொடர்பான வலுவான தகவல்களை சர்வதேசத்திற்கு வழங்கமுடியும்.

உலகத்தில் காலத்திற்குகாலம் போர்க் குற்றங்களும் மனிததத்திற்கு எதிரான குற்றங்களும் இழைக்கப்பட்டு வந்துள்ளன என்பதற்கு, ஐரோப்பாவில் யூதர்கள், ரோமானியர்கள், யூகோஸ்லாவிய முஸ்லிம்கள், அல்பேனிய கொசோவோக்கள், குரோசியர்கள், ஆர்மேனியர்கள் ஆபிரிக்காவில் ருவாண்டா புறூண்டி மக்களும்., கம்போடியர்கள், கிழக்கு திமோனியர்கள், பாலஸ்தினியர்கள், அண்மையில் இலங்கைத் தமிழர்கள் ஆகியோர்களுக்கு எதிரான இன அழிப்பு நடவடிக்கைகளைக் குறிப்பிடலாம்.

எனவே அண்மையில் இலங்கையில் யுத்தத்தினால் ஏற்பட்ட மரணங்கள், மனித உரிமை மீறல்கள் ஆகியவற்றை நேரிலே பார்த்தவர்கள், அவற்றினால் பாதிக்கப்பட்டவர்கள் அவற்றை தெரிந்தவர்கள் அவர்கள் பாதிப்புகள் பற்றிய தகவல்களை தாமாக முன்வந்து தந்துதவுமாறு மனித உரிமைகள் நடுவம் மிகவும் பணிவுடன் வேண்டிக்கொள்கிறது. ரோரன்ரோவில் உள்ள எமது நடுவம் அவுஸ்திரேலியா, நியுசிலாந்து, பெல்சியம், ஒல்லாந்து, ஜேர்மனி, நோர்வே, சுவீடன், டென்மார்க் ஆகிய நாடுகளிலுள்ள மனித உரிமை நடுவகங்களுடன் இணைந்து பெப்ரவரி 15ம் நாள் தொடக்கம் எப்பிரல் 15 வரை இலங்கையில் போரால் பாதிக்கப்பட்டவர்களினதும் மனித உரிமை மீறல்களுக்கு உள்ளாக்கப்பட்டவர்களினதும் விபரங்களை ஆவணப்படுத்தும் நாட்களாக பிரகடனப்படுத்தியுள்ளோம்.

தேசிய, அனைத்துலக மனித உரிமை நிறுவனங்கள், ஐக்கிய நாடுகள் அமைப்புகள் இலங்கையில் நடைபெற்ற போர்க்குற்றங்களை விசாரணைக்குட்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டதை நாம் மனதில் இருத்தி, எமது முயற்சிகளை முனைப்பாக்க வேண்டும். உங்கள் உறவினர்கள், நண்பர்கள் தெரிந்தவர்கள் கொலை செய்யப்பட்டிருப்பின் காணாமால் போயிருப்பார்களாயின், சட்டத்துக்கு மாறாக கைது செய்யப்படடிருப்பின், காயப்பட்டிருப்பர்களாயின், அல்லது எதாவது மனித உரிமை மீறல்களுக்கு உள்ளாக்கப்பட்டிருப்பார்களேயானால் எம்மிடம் தொடர்பு கொண்டு விபரங்களை பதியுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

நீங்கள் தரும் விபரங்கள் அனைத்தும் இரகசியமாக பேணப்பட்டு நீதிமன்றத்தில் மட்டும் உங்கள் அனுமதியோடு சமர்ப்பிக்கப்படும். போர்க்குற்றங்கள், மனித இனத்துக்காக குற்றங்கள், இனப்படுகொலைகள் விசாரணைகள் வெற்றிபெற வேண்டுமாயின் எமது மக்களின் மேல் இழைக்கப்பட்ட அனைத்து நிகழ்வுகளும் முழுமையான, நம்பத்தகுந்த உண்மையான விபரங்களுடன் சமர்ப்பிக்கப்படவேணடும். எமது முயற்ச்சிக்கு உங்களது முழுமையான ஒத்துழைப்பை வேண்டி நிற்கின்றோம்.

மேலதிக தகவல்களுக்கு தொலைபேசி 00 1 416 628 1408

**Germany**
Sinnathurai Arunathas
tel : 017663603709

**France**
House of Tamil Eelam
Christa
Personal E-mail :
cricrialexander@hotmail.com
mte.humanitaire@gmail.com
Phone N°for reporters :
06.25.52.79.55
Personal N° :
06.15.04.20.54

**Italy** Palermo
Rishanthan
+393289669107

**Danemark**
+ 4552173671
forum@dansktamilskforum.dk

**Belgiam**
0032484263905
rangan73@gmail.com

**Netherland.**
Ramanan Kanagaratnam
TP: 0031684612190

**Swiss**
Premawathi accavin TP n°:
0041 32 968 36 59
/premawathi@hotmail.com

info@cwvhr.org
www.cwvhr.org

# நரசிம்மன் பதில்கள்

உங்கள் கேள்விகளை கேட்பதற்கு

narasimmanpathilkal@gmail.com

ஈழமுரசு தனது நடுநிலையிலிருந்து விலகி வருகின்றது என கூறுகிறார்கள். ஏன் நடுநிலையாக செய்திகளை வெளியிடுவதில்லை?

**ஆர்.குமாரசாமி – இலண்டன்**

நடுநிலைமை என்பது எப்போதும் போலியானது. இன்று உலகில் எந்தவொரு ஊடகமும் நடுநிலையாக செயற்படுவதாக கூறமுடியாது. எதோ ஒரு சார்பு அதன் வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ இருந்தே தீரும் என்பதை அந்தச் செய்திகளைப் படிப்பவர்கள் உணர்ந்துகொள்வார்கள். அதேபோன்றே ஈழமுரசும் ஒரு சார்பு நிலைப்பாடுள்ள ஊடகம்தான். தமிழருக்கு என்றொரு தேசம் தமிழீழமே என்பதும் அதற்காக தேசியத்தை ஒருங்கிணைப்பதுமே அதன் பணியாக் இருக்க முடியும் என்பதால் அது அது சார்ந்தே இருக்க முடியும். அத்துடன், ஈழமுரசு உண்மையின் முன்னால் நடுநிலை என்பது இல்லை என்பதை உள்வாங்கியே செய்திகளை வெளியிட்டு வருகின்றது. இதனை வலியுறுத்திச் சொல்வதை நீங்கள் அதன் ஒவ்வொரு பக்கங்களைப் புரட்டுப்போதும் மேலே காணலாம்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தேர்தல் வேட்பாளர் பட்டியலில் முன்பு இருந்தவர்களில் பலரை தேர்தலில் நிறுத்தாது என அறிவிக்கப்பட்டுள்ளதே?

**வி.சுகுமார் – பிரான்ஸ்**



**கற்றுத் தந்தவர் என்பதற்காக குருவின் காலைத் தொட்டு வணங்குவது இன்றைய காலத்திற்கு பொருத்தமாக இருக்குமா..?**

அவர்களது திட்டத்தைப் பார்த்தால் இந்தியாவின் விருப்பிற்கு ஏற்பவும், மகிந்தவின் பிரித்தாளும் சூழ்ச்சிக்கு ஏற்பவும் செயற்படுவதாக தெரிகின்றது. விடுதலைப் புலிகளால் தமிழரின் உரிமைக்கான அரசியல் சக்தியாக உருவாக்கப்பட்ட த.தே.கூட்டமைப்பு. இன்று அது பல கட்சிகளாக சிதறிவிடுமோ என்ற ஆதங்கம் தமிழர்கள் மத்தியில் எழுந்துள்ளது.

யாழில் திரைப்பட நடிகரின் பட விளம்பரத்திற்கு பாலபிசேகம் செய்யப்பட்டுள்ளது. பாலபிசேகம் யாழ்வரை பரவியுள்ளதே?

**எம்.செல்வன் – பிரான்ஸ்**

இப்படி ஒரு நிலையை உருவாக்குவதே சிறீலங்கா அரசின் நீண்டகாலத் திட்டமாக உள்ளது. இளைஞர்களை சுய சிந்தனையின்றி இவ்வாறான செயற்பாடுகளுக்குள் முடக்கி வைப்பதே அவர்களின் நீண்டகாலத் திட்டம். இதற்கு தனது ஒட்டுக் குழுக்கள் பல்வேறு வழிகளின் உதவி வருகின்றன. தமிழரின் விடுதலை வேட்கையை மழுங்கடிப்பதற்காக பார்கக்கூடாத திரைப்படங்களை கூட இளைஞர்களுக்கு சிறீலங்கா படையினரால் காண்பிக்கப்பட்டு வருகின்றன. திரையரங்குகள் தற்போது மிகமோசமான ஒரு களியாட்ட விடுதிபோன்று, குடும்பத்துடன் சென்று படம் பார்க்க முடியாத அளவிற்கு காணப்படுவதாக அண்மையில் அங்கிருந்து நண்பர் ஒருவர் கூறியது நினைவிற்கு வருகின்றது.

கற்றுத் தந்தவர் என்பதற்காக குருவின் காலைத் தொட்டு வணங்குவது இன்றைய காலத்திற்கு பொருத்தமாக இருக்குமா..?

**செல்வமதி குமரேசன் – பிரான்ஸ்**

ஒருகாலத்தில் தனது கலையை, அறிவை எந்தவித பிரதிபலனையும் எதிர்பாராமல் வழங்கிய குருவை சீடர்கள் காலைத்தொட்டு வணங்கி தங்கள் நன்றியைத் தெரிவித்தார்கள். ஆனால் இன்று அப்படியல்ல. எல்லாமே வியாபாரமாகிவிட்டது. அறிவையோ, கலையோ இன்று குருவிடம் இருந்து காசு கொடுத்துதான் வாங்க முடிகின்றது. ஒரு வியாபாரிக்கும், வாடிக்கையாளருக்கும் உள்ள உறவாக அது மாற்றம் அடைந்துவிட்டது. எனவே, வியாபாரியின் காலில் விழுந்து வணங்கவேண்டிய தேவை வாடிக்கையாளருக்கு இருக்கின்றதா என்பதை நீங்கள்தான் கூறவேண்டும். காலில் விழுவது என்பது ஒரு அடிமைக்குரிய குணமாகத்தான் உலகம் முழுவதும் பார்க்கப்படுகின்றது. அதுசரி, தமிழர்களைத் தவிர வேறு எந்த இனத்தவராவது மற்றவர்கள் காலில் விழுவதை நீங்கள் பார்த்திருக்கின்றார்களா..?

தமிழர்களுக்கு அதிகாரப்பகிர்வு என்ற அடிப்படையில் ராஜபக்ச அளித்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்ற தவறினாலோ, தாமதப்படுத்தினாலோ அதை தி.மு.க., வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்காது, என்று, தமிழக முதல்வர் கருணாநிதி கூறியுள்ளாரே?

**அராலியூர் கலைமகள் – பிரான்ஸ்**

இந்த வயதில் இதுக்குமேல் அவர் என்னதான் செய்ய (சொல்ல) முடியும் என்று நீங்கள் எதிர்பார்க்கின்றீர்கள்..? ஈழத்தில் பெரும் அவலம் நிகழ இருந்த வேளையில் தமிழகமே கிளர்ந்தெழுந்தது. கலைஞரும் தமிழக மக்களின் உணர்வுகளை உள்வாங்கி கொட்டும் மழையிலும் மனிதச் சங்கிலி போராட்டத்தை நடத்தி எல்லாவற்றையும் அடக்கினார். தமிழ்கள் படுகொலை செய்யப்பட்டுக்கொண்டிருந்த போது இந்திய மத்திய அரசு தி.மு.க எது கேட்டாலும் செய்யும் நிலையில் இருந்தது. இன்று தமிழக அரசு கொங்கிரசின் தயவில் அல்லவா இருக்கிறது. எதுவும் இல்லாமல் அவரால் இவ்வாறு குரல்விடுவதைத் தவிர வேறு என்னதான் செய்வது?

# ஈகைப்பேரொளியின் நினைவில்....



அப்பாவித் தமிழ் மக்களின் இனஅழிப்பைத் தடுக்க இயலாத ஐ.நா.சபைக்கு முன்பாக உயிர்க்கொடை கொடுத்த, ஈகைப் பேரொளி முருகதாசனின் நினைவு நிகழ்வுகள் கடந்த வாரம் தமிழர்கள் வாழும் நாடெங்கும் நடைபெற்றன. முத்துக்குமார் தொடங்கி முருகதாசன் வரை தமிழகம், மலேசியா மற்றும் பிரித்தானியா வரை வாழும் 19 வீரமிக்க தமிழர்கள் தமிழின படுகொலையை நிறுத்தக்கோரி தங்களது உயிரைக் காணிக்கையாக்கினார்கள். இலண்டனில், கடந்த வியாழக்கிமையன்று முருகதாசனின் கல்லறையில் கூடிய பிரித்தானியாவாழ் தமிழர்கள் அனைவரும், அந்த வீரப் புதல்வனுக்கு மலர்தூவி வீரவணக்கம் செலுத்தினார்கள். இதேவேளை, தன்னைத்தானே



தீக்கிரையாக்கிய ஈகைப்பேரொளி முருகதாசனுக்கு ஐ.நாசபை முன்றலிலே இளையோர்களாலும் தமிழ் மக்களாலும் மலர்வணக்கம் செலுத்தப்பட்டது.

# மாற்றம்

மிக மோசமான தமிழினப் படுகொலையில் சிறீலங்கா அரசு ஈடுபட்டிருந்தபோது புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் வெளிநாடுகளில் உள்ள அந்நாட்டின் தூதரங்களை முற்றுகையிட்டு, போராட்டம் நடத்தினார்கள். இந்தப் போராட்டங்கள் நடைபெறாதவாறு தடுத்து நிறுத்தும் நடவடிக்கைகள் முனைப்புடன் மேற்கொள்ளப்பட்டன. இப்போது தங்கள் நாட்டுத்தூதரகங்களை அந்நாட்டின் சிங்கள மக்களே முற்றுகையிடத் தொடங்கியுள்ளார்கள். இதனால், மகிந்த அரசு கதிகலங்கிப்போயுள்ளது. தமிழர்கள் போராடினால் பயங்கரவாதிகளின் ஆதரவாளர்கள் என்று முத்திரை குத்தியவர்களால் இப்போது சிங்களவர்கள் போராடும்போது அவ்வாறு முத்திரை குத்த முடியவில்லை. இந்நிலையில், சிறீலங்கா அரசு தனது வழமையான அச்சுறுத்தல் பாணியை கையிலெடுத்துள்ளது. வெளிநாடுகளில் நடக்கும் பொன்சேகாவுக்கு ஆதரவான ஆர்ப்பாட்டங்களில், தூதரங்கள் முன்பான ஆர்ப்பாட்டங்களில் கலந்து கொள்பவர்கள், சிறீலங்காவுக்குப் பயணம் மேற்கொள்ளும் போது கைது செய்யப்படுவர் என சிறீலங்கா தூதுவர்களால் எச்சரிக்கப்பட்டதாகச் செய்திகள் தெரிவிக்கின்றன. குறிப்பாக அமெரிக்கா மற்றும் இத்தாலியில் உள்ள சிறீலங்கா தூதுவர்களே புலம்பெயர்ந்த சிங்கள சமூகத்தை இவ்வாறு மிரட்டி உள்ளனர் என்று தெரியவருகின்றது. படத்தில் காண்பது பிரான்சில் உள்ள சிறீலங்கா தூதரகம் முன்பாக கடந்த வாரம் நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தில் கலந்துகொண்டுள்ள சிங்கள மக்கள்.






# மறக்க முடியுமா..?







சிறீலங்காவின் இனப்படுகொலைத் தாக்குதலில் 10.05.2009 அன்று புதுமாத்தளன் பகுதியில் படுகொலையானவர்கள்.சர்வதேச போர் விதிமுறைகளுக்கு முரணாக பொது மக்கள் மீது சர்வதேசத்தால் தடை விதிக்கப்பட்ட கிளெஸ்ர் மற்றும் பல்குழல் எறிகணைத் தாக்குதல் மூலம் 9ம், 10ம் திகதிகளில் 300ற்கும் மேற்பட்டவர்கள் கொல்லப்பட்டனர். அந்தப் படுகொலையில் சிக்குண்டு உயிரிழந்தவர்களில் இந்தச் சிறுவர்களும், பெண்களும் அடங்கியிருந்தனர்.

# இந்தியாவின் கைகள்

# கத்தியும், பூச்செண்டும்

இலங்கை அரசியல் மிகவும் கொந்தளிப்பான ஒரு நிலைக்கு மீண்டும் வந்துள்ளது. ஜனாதிபதித் தேர்தல், அதைத் தொடர்ந்து அந்தத் தேர்தல் பற்றிய குற்றச்சாட்டுகள், இப்போது ஜெனரல் சரத் பொன்சேகாவின் கைது, இந்தக் கைதுக்கு எதிரான ஆர்ப்பாட்டங்கள் என அடுத்தடுத்து பரபரப்பான நிகழ்ச்சிகள், பரபரப்பான செய்திகள்.

யுத்தம் முடிந்தாலும் நாடு அமைதிக்கோ வழமைக்கோ திரும்பவில்லை. ஜனநாயகத்தைச் சுற்றி ஆயிரக்கணக்கான கேள்விக்குறிகளே நிற்கின்றன. ஒரு மாதத்துக்குள் ஒரு ஊடகவியலாளர் கடத்தப்பட்டு தகவல் இல்லாத நிலை. இன்னொரு ஊடகவியலாளர் கைது செய்யப்பட்டிருக்கிறார். அரசாங்கத்துக்கெதிரான குற்றச்சாட்டுகள், கண்டனங்களோடு தெருவில் இறங்கியிருக்கிறார்கள் சனங்களும் ஊடகவியலாளர்களும்.

வடக்கு கிழக்கிலிருந்த கொந்தளிப்பான நிலைமையும் பரபரப்புகளும் இப்போது தெற்குக்கும் மேற்குக்குமாக நகர்ந்திருக்கிறது. இது இப்படி இன்னும் ஒரு பத்துப் பதினைந்து ஆண்டுகள் தெற்கிலும் மேற்கிலும் நீடிக்கக் கூடும். இந்தக் காலஎல்லை சிலவேளை கூடிக்குறையலாம். ஆனால், இந்த நிகழ்ச்சிப் போக்கில் மாற்றமிருக்காது. இதேவேளை இந்தக் கொந்தளிப்புப் பின்னர் மீண்டும் வடக்கு கிழக்குப் பகுதிக்கு மாறும். ஏனெனில் என்னதான் முயன்றாலும் தமிழர்களின் அடிப்படைப்பிரச்சினைகள் இப்போதைக்குத் தீர்க்கப்படப் போவதில்லை. எனவே அங்கே பிரச்சினையின் தூண்கள் மேலும் பலமாகும். ஆகையால் வடக்குக் கிழக்கில் மீண்டும் கொந்தளிப்புகள் ஏற்படும். இதெல்லாம் இந்தப் பிராந்தியத்தினுடைய தொடர் நிகழ்ச்சியின் வெளிப்பாடாகும்.

சுதந்திரத்துக்குப் பின்னரான இலங்கையின் அரசியல் நிலைமையை அவதானிப்போருக்கு ஒரு அடிப்படையான விசயம் தெரியும். இலங்கையில் அமைதி ஏற்படுவதற்கு பிராந்திய நாடான இந்தியாவும் சர்வதேச சமூகமும் அனுமதிக்கப் போவதில்லை என்பது. சுதந்திரம் கிடைத்த பின்வந்த கடந்த அறுபது ஆண்டுகளும் இலங்கை அமைதியில்லாமலே இருந்திருக்கிறது. இனியும் அது அப்படித்தான் இருக்கப் போகிறது. இதுதான் உண்மை. இப்போது நடந்து கொண்டிருக்கும் கொந்தளிப்புகளும் இனிமேல் தொடரப்போகின்ற கொந்தளிப்புகளும் மேலே குறிப்பிட்டதைப் போல ஒரு தொடர் நிகழ்ச்சியின் வெளிப்பாடுகளே. அது இந்திய பிராந்திய ஆதிபத்தியத்தின் விருப்பு வெறுப்புகள், நலன்கள் சார்ந்த நிகழ்ச்சி நிரலின் வெளிப்பாடுகளாகும்.

**இலங்கையின் கொந்தளிப்பான நிலைமைகளுக்கு அதிகமான காரணம் இந்தியாதான். இந்தியாவைப் பொறுத்தளவில், அது இலங்கையில் ஒருபோதும் எந்தப் பிரச்சினையும் தீர அனுமதிக்கப் போவதில்லை. இதற்கான காரணங்கள் பலவுண்டு.**

இலங்கை சுதந்திரமடைந்த 1948லிருந்து முதல் பத்தாண்டுகளுக்குள்ளேயே மிக மோசமான இனவன்முறைக்குள் சிக்கியது. சிக்கியது என்பதைவிட சிக்க வைக்கப்பட்டது என்பதே சரியானது. அதாவது முதற்பத்தாண்டுகளுக்குள்ளேயே இலங்கையின் ஸ்திரத்தன்மை ஆடத் தொடங்கி விட்டது.

அன்றைய இருதுருவ அரசியலில் டி.எஸ்.சேனநாயக்காவின் ஐ.தே.க மேற்குக்குச் சார்பான நிலைப்பாட்டை எடுத்தபோது இந்தியா அதற்கெதிரான பொறிமுறையை உருவாக்கியது. அதன் விளைவு இனமுரண்பாட்டின் உச்ச வடிவமாகியது. பின்னர் இலங்கைத் தீவை இனமுரண்பாட்டின் அடிப்படையில் அது மிகத் தந்திரோபாயமாக இன்றுவரையில் கையாண்டு வருகிறது.

அதேவேளை இனமுரண்பாட்டரசியலில் ஒரு தணிவு நிலை, அல்லது ஓய்வு நிலை வரும்போது தெற்கில் கிளர்ச்சிகள், போராட்டங்கள், மாற்று அரசியல் என்றவாறாக இந்தியா தன்னுடைய கையை நீட்டிக்கொண்டேயிருக்கும். இங்கே தேவைக்கேற்ப களமும் திசையும் மாற்றப் படுகிறதே தவிர பிரச்சினைகள் தீர்க்கப்படாமல் அப்படியே இருக்கும். பிரச்சினைகளைப் பராமரிப்பதே இந்த அரசியலின் முக்கிய நோக்கமும் உபாயமுமாகும்.

ஜே.வி.பியின் அரசியலில் சில முக்கியமான சந்தர்ப்பங்களில் இந்தியா அதற்கு ஆதரவளித்தையும் (ஒரு சந்தர்ப்பத்தில் ஜே.வி.பியின் இன்றைய தலைவர் சோமவன்ச அமரசிங்கவை இந்தியாதான் காப்பாற்றியிருந்தது) அதைப்போன்று




தமிழ் அரசியலில் அது இன்னும் தன்னுடைய ஆதரவு - எதிர் என்ற இருவகை நிலைப்பாடுகளின் மூலம் தனக்கான சக்திகளையும் பொறிகளையும் வைத்திருப்பதையும் இங்கே மீட்டுப் பார்க்கலாம். (இன்னும் இந்திய ஆதரவுடன் தமிழ்ப் போராளி இயக்கத்தினரும் தமிழ் அரசியலாளர்களும் இந்தியாவின் ஆதரவில் இலங்கையிலும் இலங்கைக்கு வெளியிலும் இந்தியாவிலும் இருப்பதை அவதானிக்கலாம்).

எனவே இந்திய இராசதந்திரத்தின் விளைவாக, இந்த அறுபது ஆண்டுகளும் இலங்கைத் தீவு தொடர்ந்து வன்முறை, போராட்டங்கள், கிளர்ச்சிகள், இரத்தம் சிந்துதல்கள் என்ற கொந்தளிப்பான அரசியல் நிலைமைக்குள்தான் இருந்து வருகிறது. இலங்கை ஸ்திரத்தன்மையுடன் இருக்கும் போது அதனால் தனக்கேற்படும் அபாயங்கள் குறித்த எச்சரிக்கை உணர்வே இதற்குக் காரணம். இந்தியாவை விடவும் இலங்கை என்ன பெரிய சக்தி வாய்ந்த நாடா? என்று யாரும் கேட்கலாம். இங்கே இலங்கை பெரிய நாடா சிறிய நாடா என்பதல்லப் பிரச்சினை. இலங்கையின் கேந்திர முக்கியத்துவமே இங்கே கவனத்துக்குரியது. இந்தக் கேந்திர முக்கியத்துவமே எப்போதும் இலங்கைக்கு அபாயமாகவும் வாய்ப்பாகவும் இருக்கிறது. இந்தக் கேந்திர முக்கியத்துவம் ஏறக்குறைய மேற்காசியாவில் பலஸ்தீனத்துக்கு நிகரானது. எனவேதான் இரண்டு மையங்களிலும் பிராந்திய - சர்வதேச சக்திகளின் ஆதிக்கமும் நெருக்குவாரங்களும் அளவுக்கதிகமாக இருக்கின்றன.

இலங்கையின் கொந்தளிப்பான நிலைமைகளுக்கு அதிகமான காரணம் இந்தியாதான். இந்தியாவைப் பொறுத்தளவில், அது இலங்கையில் ஒருபோதும் எந்தப் பிரச்சினையும் தீர அனுமதிக்கப் போவதில்லை. இதற்கான காரணங்கள் பலவுண்டு. சந்தை வாய்ப்புத் தொடக்கம் புவியியல் நலன்வரையில் ஏராளம் அம்சங்கள் இதில் தங்கியிருக்கின்றன. இலங்கை பலமான ஒரு நிலைக்கு தன்னை ஸ்தாபித்துக் கொள்ளுமெனில், அது தன்னிச்சையாக, தனக்குப் பொருத்தமான - விருப்பத்துக்குரிய வெளிச் சக்திகளைத் தேர்ந்து கொள்ளும். இலங்கையின் கேந்தர முக்கியத்துவம் மேற்குக்கும் தேவையானது. சீனாவுக்கும் தேவையானது. என்பதால் இந்தப் போட்டியில் அது தன்னை விரைவாக பலமாக ஸ்தாபித்துக் கொள்ள அதிக வாய்ப்புண்டு. இது ஏறக்குறைய இஸ்ரேலுக்கு நிகரான ஒரு பாத்திரத்தை இலங்கை வகிப்பதாகி விடும்.

அரபுலகத்தின் மத்தியில் அடங்காத் திமிரோடு இஸ்ரேல் இருப்பதை இங்கே ஒரு தடவை நாம் நினைவிற்குக் கொண்டு வந்தால் இதன் தாற்பரியத்தைப் புரிந்து கொள்ளலாம். ஆகவேதான், இலங்கை விவகாரத்தில் எப்போதும் மிக விழிப்பாக இந்தியா இருக்கிறது. இலங்கைக்கான தூதுவர்களை இந்தியா நியமிக்கும் போதே மற்ற இடங்களுக்கான தூதுவர்களை விடவும் கூடிய ஆற்றலாளர்களையும் முக்கியமானவர்களையும் கவனத்திற்கொள்வது வழமை. ஜே.என்.டிக்ஸிற் தொடக்கம் அலோக் பிரசாத் வரையில் இதை அவதானிக்கலாம்.

இந்தியாவுக்கு சீனாவும் ஆபத்தான சக்தி. மேற்குலகமும் ஆபத்தானதே. இன்றைய அரசியல் பொருளாதார நிலைமைகளின் நிமித்தம் அது இந்த நாடுகளுடன் ஒரு சமரசத் தன்மையைக் கடைப்பிடித்தாலும் பிராந்தியத்தில் தன்னுடைய ஆதிக்கத்தை இழப்பதற்கோ பிற சக்திகளுக்கு விட்டுக் கொடுப்பதற்கோ அது ஒரு போதும் விரும்பமாட்டாது. எனவேதான், இந்தியாவை தமிழர்கள் கையாள்வதன் மூலம் தமிழ் மக்களின் நலனையும் பெறலாம். இந்திய நலனும் பாதுகாக்கப்படும் எனச் சில ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். (இது எவ்வளவுக்குச் சாத்தியமானது என்பது வேறு விசயம்).

இத்தகைய நிலைமைகளின் பின்னணியில், இலங்கையை கொந்தளிப்புக்குள்ளாக்கிப் பலவீனப்படுத்தித் தனது நிழலின் கீழ் வைத்திருக்க இந்தியா தொடர்ந்து முயல்கிறது. அது முடியாதபோது அது கொஞ்சம் கூடுதலான அழுத்தத்தைக் கொடுக்க முயற்சிக்கிறது. ராஜீவ் காலத்தில் இந்தியா அத்த

- கிருஷ்ணமூர்த்தி அரவிந்தன் -

(18ம் பக்கம் பார்க்க)

# வர்த்தகம் மூலதனம்

ஜே.ஜே

## மீட்சி பெறாத ஸ்பெயின்

ஐரோப்பாவின் ஐந்தாவது பெரிய பொருளாதார வளம் கொண்ட நாடான ஸ்பெயின். 2009ம் ஆண்டின் இறுதிக்காலாண்டில் 0.1 வீதம் பொருளாதாரச் சுருக்கம் அடைந்துள்ளது. இதன் மூலம் 2008ம் ஆண்டு ஆரம்பமான பொருளாதாரச் சிக்கலில் இருந்து விடுபடாத நாடுகள் பட்டியலில் ஸ்பெயின் தொடர்ந்தும் நீடிக்கின்றது. இதன் உள்நாட்டு மொத்த உற்பத்தியானது 2008ம் ஆண்டின் இறுதிக்காலாண்டினைப்போலவே, கடந்த ஆண்டும் வீழ்ச்சிகண்டுள்ளது. இம்முறை அதன் வீழ்ச்சி 3.1 வீதம் ஆக அமைந்துள்ளது. வேலையற்றோரின் வளர்ச்சி வீதம் சென்ற டிசெம்பர்மாதம் 19.5 வீதமாக மாற்றங்கண்டுள்ளது. யூரோ நாணய பாவனையில் உள்ள பதினாறு நாடுகளில் இங்குதான் வேலையற்றோர் எண்ணிக்கை அதிக அளவில் உள்ளது. ஸ்பெயினின் 2009ம் ஆண்டு பொருளாதாரச் சுருக்கம் 3.6 வீதமாக இருந்தது என்று தேசிய புள்ளி விபரம் தெரிவிக்கின்றது. இப்பொருளாதார நெருக்குதலானது ஸ்பெயின் ஐரோப்பிய நாணய ஒன்றியத்தின் உதவியை நாடிச்செல்வதற்கே வழிவகுக்கும் என்றும் இவ்வாண்டு காலாண்டிற்குக் காலாண்டு சிறிய சாதகநிலையை எட்டினாலும், தனது ஐரோப்பிய அயலவர்களின் ஒப்பிடுகையில் பின் நிற்கும் நிலையே காணப்படும் என்று வர்த்தக வங்கியின் ஆய்வாளர் றல்ப் சொல்வீன் தெரிவித்துள்ளார். வேலையற்றோரின் எண்ணிக்கை அதிகரித்துச் செல்கின்ற நிலையில், உள்நாட்டு தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையிலான புதிய அணுகுமுறைகளை கையாள்வதன் மூலம் அதனைக் கட்டுப்படுத்தலாம் என நம்பும் தற்போதைய சோசலிச அரசு இவ்வாண்டின் பிற்பகுதியில் வளர்ச்சி நிலை நோக்கி திரும்ப முடியுமென நம்பிக்கை கொண்டுள்ளது. ஆனால் சர்வதேச நாணய நிதியம் நேர்மாறாக ஸ்பெயின் பொருளாதாரம் 0.6 வீதத்தால் சுருங்கு நிலையை அடையும் என எதிர்வு கூறுகின்றது. தற்போதைய நெருக்கடிகளில் இருந்து விடுபடுவதற்கு 50 பில்லியன் யூரோக்களை நிதியூட்டலாக வழங்க ஸ்பெயின் முன்வந்துள்ளது. 2009 இல் 55.2 வீதம் ஆக மொத்த உள்நாட்டு உற்பத்தி கடனானது 2012 இல் 74.3 வீதமாக அதிகரிக்கும் நிலையே காணப்படுகின்றது.

## உறுதியளித்த உதவித்தொகை கிட்டுமா?

ஐந்து ஆண்டுகளிற்கு முன்னர் ஸ்கொட்லாந்தின், கினேன்ஈகிற்ஸ் இல் நடைபெற்ற கூட்டத்தொடரில் செல்வந்த நாடுகளால், வளர்ந்து வரும் நாடுகளிற்கான உதவி என உறுதி அளிக்கப்பட்ட தொகை, ஒரு சில நாடுகள் தவிர ஏனையவற்றால் முழுமையாக அளிக்கப்படவில்லை என அபிவிருத்தி, பொருளாதார கூட்டுறவு அமைப்பு தெரிவித்துள்ளது. அத்தோடு 2005ம் ஆண்டு 15 நாடுகளால் உறுதியளிக்கப்பட்ட



உதவித்தொகையான 128 பில்லியன் டொலரானது, இவ்வாண்டு 107 பில்லியனாக வீழ்ச்சி பெற்றுள்ளது. கிறீஸ், இத்தாலி என்பன உறுதியளித்த தொகையில் சிறிய அளிவினையே கொடுத்துள்ளன. இவ்வாறு கொடுத்த உறுதி மொழியை மீறுவது அவமானச் செயல் என உதவி நிறுவனமான ஒக்ஸ்பாம் சாடியுள்ளதுடன், 2005ம் ஆண்டு கூட்டத் தொடரில் உறுதியளிக்கப்பட்ட அதிகரிப்பு தொகையினை கொடுக்க மறுப்பதற்கு எந்த மன்னிப்பும் கிடையாது என்றும் விபரித்துள்ளது. அதிகரிக்கப்பட்ட உதவித் தொகையான 21 பில்லியன் டொலரானது உலகிலுள்ள ஏனைய குழந்தைகளை பாடசாலைக்கு அனுப்புவதற்கும், 2 மில்லியன் டொலரானது 12 பில்லியன் டொலராக மாற்றம் பெறும் நிலை ஏற்பட்டுள்ளது. ஏற்கனவே வறுமை, நிர்வாக துற்பிரயோகம் என்பவற்றால் வளர்ச்சி எனும் பாதையை எட்டிப்பார்க்க முடியாத பல ஆபிரிக்க நாடுகளிற்கு இது இன்னுமோர் பின்னடைவையே கொடுக்கும்.

# மரண அறிவித்தல்

## அமரர் சிவபாக்கியம் செல்லத்துரை

**தோற்றம் 09.07.1927**



**மறைவு: 15.02.2010**

அல்லைப்பிட்டி 3ம் வட்டாரத்தைப் பிறப்பிடமாகவும் பிரான்சை வசிப்பிடமாகவும் கொண்ட சிவபாக்கியம் செல்லத்துரை அவர்கள் 15.02.2010 திங்கள் அன்று இறைவன் அடி சேர்ந்தார் என்பதை அறியத்தருகின்றோம். இவர் காலம் சென்ற செல்லத்துரையின் அன்பு மனைவியும் காலம் சென்றவர்களான கனகசபை லெட்சுமி தம்பதியின் அன்பு மகளும், தனலட்சுமி (யாழ்) விஜயலட்சுமி (யாழ்), கோபாலகிருஷ்ணன் (சிங்கப்பூர் யுவலர்ஸ் (வெள்ளவத்தை-கொழும்பு), வசந்தமல்லிகா (பிரான்ஸ்), தயநாயகி (பிரான்ஸ்), இராஜரெட்ணம் (மண்கும்பான்), மாலினி (வண்ணார்பண்ணை), சிவநாதன் (பிரான்ஸ்), சந்திரகுமார். (குமார்ஸ் சொப்-பிரான்ஸ்) ஆகியோரின் அன்பு மாமியாரும் விஜயரூபன், காந்தரூபன், (பிரான்ஸ்) நாதகலோஜினி, லிங்கரூபன், கிருஷ்ணராதா, துவாரகன், கோபிதா, ராதாகிருஷ்ணன், ராகவந்தி, கிருஷாந்தன், சிவப்பிரகாஷ், வித்தியாபதி, கேதிஸ்வரன், சுமதி ஆகியோரின் அன்புப் பேத்தியாரும், கோகுல்நாத்தின் அன்பு பூட்டியுமாவார்.

அன்னரின் பூதவுடல் 7 Avenue de la Réunion - 93600 Aulnay Sous Boisவில் உள்ள அவரது இல்லத்தில் 22ம் திகதி வரை பார்வைக்கு வைக்கப்பட்டு பின்னர் அன்னாரது பூதவுடல் தகனக்கிரிகைகளுக்காக கொழும்புக்கு எடுத்துச் செல்லப்பட்டு 25.02.2010 வியாழக்கிழமை பொரளை கனத்தை மயானத்தில் தகனம் செய்யப்படவுள்ளது. இவ்வறிவித்தலை உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

தொடர்புகளுக்கு
பிரான்ஸ் – 033 14 86 65 493
கொழும்பு 0094 11 23 61 920
யாழ்ப்பாணம் 0094 21 45 90 509

தகவல் மக்கள், மருமக்கள்,
பேரப்பிள்ளைகள்

## இந்தியாவின் கைகள்....

கைய ஒரு நிலைப்பாட்டையே எடுத்திருந்தது. அப்போது ஜே.ஆர்.ஜெயவர்த்தனா முற்றுமுழுதாக மேற்குமயப்பட்ட அணுகுமுறையைக் கடைப்பிடித்தார். நவீன இலங்கையின் வரலாற்றில் அந்தச் சந்தர்ப்பமே ஆகக்கூடிய வெளிச் சக்தியின் அழுத்தத்தை இலங்கை பெற்றது. புலிகளுடனான இறுதிப்போரின் போது கூட அத்தகைய அழுத்தங்கள் இலங்கைக்கு நேரவில்லை. இந்தப் போரின்போது சிங்கள இராசதந்திரம் இந்தியாவைப் பகைமைக்குள்ளாக்காத ஒரு பொறியமைப்பைப் பின்பற்றியது. ராஜீவ் காலத்தில் பெற்றுக் கொண்ட அனுபவத்தை சிங்கள இராசதந்திரம் மறக்கவேயில்லை. (இதுபற்றி இன்னொரு சந்தர்ப்பத்தில் விரிவாகப் பார்க்கலாம்.)

அதிகம் ஏன், இலங்கை - இந்திய உடன்படிக்கையின் பின்னர், ஐ.தே.க இந்தியாவை ஆதரிக்கும் போக்கையே கடைப்பிடித்து வருகிறது. இதில் ரணில் இன்னும் இந்தியாவுடன் நெருக்கமானவராகவே தன்னைக் காட்டிக்கொள்கிறார். அப்படிக் காட்டாமல் அவரால் இலங்கையில் அரசியல் நடத்தமுடியாது. ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிட்ட ஜெனரல் சரத் பொன்சேகா கூட இந்தியாவை அனுசரித்தே பேசிவந்தார் என்பதையும் வாசகர்கள் நினைவிற் கொள்ளலாம்.

இதனால்தான், இலங்கைத் தேசியத்தை வலியுறுத்துவோர், மாற்று அரசியல் குறித்துச் சிந்திப்போர் எல்லாம் இந்திய ஆதிக்கத்தையும் இந்தியாவின் இத்தகைய தலையீட்டு முயற்சிகளையும் கண்டிக்கின்றனர். ஆனால், என்னதான் இருந்தாலும் இலங்கையின் ஆளும் வர்க்கத்தினரோ இப்போது இந்தியாவுடன் முரண்படாத ஒரு நெருக்க அரசியலைப் பின்பற்றுகின்றனர். இதனால், இந்தியாவை வேறு மார்க்கங்களில் திசை திருப்பவோ பதிலாக வேறு உபாயங்களைப் பற்றிச் சிந்திக்கவோ முடியாத நிலையிருக்கிறது.

தன்னுடைய திட்ட வரைபையும் மீறிப் புலிகளின் எழுச்சி அமைந்திருந்தபோது, இந்தியாவுடனான பகைமைச் சக்தியாக புலிகள் மாறியிருந்தபோது, அதை முறியடிப்பதற்காக நீண்டகாலம் பொறுத்திருந்தது இந்தியா. மிக நுட்பமாகக் காய்களை நகர்த்தி, இலங்கை அரசைப் பலப்படுத்தியே புலிகளைத் தோற்கடித்தது அது. தான் நேரடியாகக் களத்திலிறங்கும் போது அதன் விளைவுகள் தமிழகத்தில் எதிரொலித்து இந்திய மத்திய அரசுக்கு நெருக்கடியை ஏற்படுத்தலாம் என்ற உணர்ச்சிகரமான பகுதியைத் தீண்டாமல் இந்தக் காரியத்தை மிகக் கச்சிதமாக நடத்தி முடித்ததையும் இங்கே நாம் அவதானிக்கலாம்.

ஆக மொத்தத்தில், இந்தியாவின் ஆதிக்க நிலைப்பாட்டின் வெளிப்பாடாகவே இலங்கையின் நிகழ்ச்சிகள் அமைகின்றன. சரத் பொன்சேகா கைதின் பின்னணியிலும் இந்தியாவின் கரங்கள் இருக்கின்றன. அதை எதிர்க்கும் நடவடிக்கைகளிலும் இந்தியாவின் கைகளிருக்கின்றன. இதுதான் இந்த உண்மையின் சுவாரஷ்யமான பகுதி. 'பிள்ளையையும் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டி விடும்' ஒரு வித உத்தி இது. ஆனால் ஒன்று, என்னதானிருந்தாலும் ஒரு போதும் இலங்கையில் ஆட்சியிலிருக்கும் அரசுக்கெதிராக ஒரு கிளர்ச்சிச் சக்தி தலை தூக்குவதற்கு - ஆட்சியைக் கைப்பற்றுமளவுக்குப் பலம் பெறுவதற்கு இந்தியா அனுமதிக்கப் போவதில்லை. அது இந்தியாவுக்குப் பாதகமான நிலைமைகளை - தன்னால் கையாள முடியாத நிலைமையை - உருவாக்கிவிடும். அதாவது அப்படியான நிலை ஏற்படுமானால் அது தனது கையை மீறயதாகி விடும் என்று இந்தியாவுக்குத் தெரியும்.

எனவே, இலங்கையின் அரசைத் தோற்கடித்து விடாதவாறு ஒரு சமனிலையில் இந்தக் கிளர்ச்சிகளையும் போராட்டங்களையும் அரசியல் நெருக்கடிகளையும் அது ஏற்படுத்திக் கொண்டேயிருக்கும். அந்த வகையில்தான் இப்போது தெற்கில் தொடங்கியிருக்கிறது கொந்தளிப்பும் நெருக்கடியும். இது சற்றுக் காலத்தின் பின்னர் வடக்குக் கிழக்குக்கு திசை மாறும். அதுவரை வடக்குக் கிழக்கு மக்கள் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளலாம். இங்கே சற்று விவேகமாக நடந்து கொண்டால் வருகின்ற நெருக்கடியில் பாதியைக் குறைக்கலாம். அல்லது அவற்றிலிருந்து மீண்டு விடலாம். அல்லது அவற்றை விலக்கிவிடலாம். அவ்வளவுதான்.

இந்த அபாய அரசியலை, தீராத நெருக்கடி அரசியலை மாற்றவேண்டுமாயின் உள்ளரங்கில், இனங்களுக்கிடையிலான ஐக்கியத்துக்கான வழிகள் திறக்கப்படவேண்டும். ஆனால், இலங்கை அரசியலிலும் சமூகச் சூழலிலும் ஐக்கியத்துக்கான வழிகள் மூடப்பட்டேயிருக்கின்றன. இந்த ஐக்கியத்துக்கான வழிகள் திறக்கப்படாதவரையில் இலங்கையில் எந்தப் பெரும் பிரச்சினைகளையும் நம்மால் தீர்த்துக்கொள்ள முடியாது. ஆனால், நடைமுறையில், இனமுரணை வளர்க்கும் காரியங்கள்தானே நிகழ்கின்றன. இதில் எல்லாச் சமூகங்களின் அரசியல் தலைமைகளுக்கும் முக்கிய பங்குண்டு. அவற்றின் இருப்பே இந்த இனமுரண்பாட்டு அரசியலில்தான் இருக்கின்றன. எனவே கொந்தளிப்பும், நெருக்கடியும் நிம்மதியின்மையும் கண்டனங்களும் குற்றச்சாட்டுகளும் இருந்தே தீரும்.

அதுமட்டுமல்ல, இந்த இனமுரண்பாட்டு அரசியலின் விளைவாக - இந்தியத் தலையீட்டரசியலின் விளைவாக - தனியே பொதுமக்கள் மட்டும் பாதிக்கப்படுவதில்லை. இதில், அரசியல் தலைவர்கள் முதல் படைத்தளபதிகள், உயர்மட்ட அதிகாரிகள் வரையில் பலியாகி வருகின்றனர். பாதிக்கப்பட்டும் வருகின்றனர். புலிகளின் தோற்றத்துக்கு முன்னரே எஸ்.டபிள்யு.ஆர்.டி. பண்டாரநாயக்க கொல்லப்பட்டார். பின்னர் பல சிங்களத் தலைவர்கள், படைத்தளபதிகள் கொல்லப்பட்டனர். மட்டுமல்ல, அ.அமிர்தலிங்கம், அஷ்ரப் போன்ற சிறுபான்மைச் சமூகங்களின் தலைவர்கள் கொல்லப்பட்டமையையும் நாம் இந்தப் பின்புலத்தில்தான் விளங்கிக் கொள்ள வேண்டும்.




"என்றும் பசுமை நிறைந்த உ

12வது ஆண்டில் கால் பதிக்கும்

# நியூ ஸ்பை

நத்தார் புதுவருடத்தை முன்

FREE FREE
குடாஸ்
8 கிலோ
பார்பொயில் அரிசி
100 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

குடாஸ்
8 கிலோ
பார்பொயில் அரிசி
$4.99
50 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

Red Ruby
900g
மிளகாய்த்தூள்
$2.99
$20 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

Nestle
மைலோ (Milo)
$2.99
400g.

SPECIAL
குடாஸ்
பார்பொயில் அரிசி
$7.99 8Kg.
குடாஸ் வெள்ளை பச்சை அரிசி
$6.99

இராசவள்ளிக் கிழங்கு
99¢/Lb.
வெள்ளி, சனி, ஞாயிறு தினங்களில் மட்டும்

Special
Anchor / Lakspray / Nespray
$4.99 Each
400g.
No Limit

குடாஸ்
மரக்கறி எண்ணை
$3.99
2.5 Lit.
per Can

நண்டுப்பெட்டி
(சிறியது.)
$5.99
2 lb.

உ
கை

## வெகுவிரைவில் எமது 2வது கிளை மார்க்

## 5790 Sheppard Ave. E, Unit 4, 5 & 6 Scarborough,

ன் மரக்கறி மீன் இறைச்சி வகைகளில் ஓர் புரட்சி"

# சி லாண்ட் சுப்பர் மார்க்கட்

## ட்டு வழங்கும் மாபெரும் அதிரடி மலிவு விற்பனை

குறிஞ்சி
வறுத்த
அரிசி மா
8Lb.
$4.99
No Limit

ரவை
10Lb.
$4.99
No Limit

Maggi
தேங்காய்ப்
பால் பவுடர்
$2.49
350g.

FIVE ROSE
கோதுமை மாவு
$12.99
20Kg.
per Bag

பிரேமி
அவித்த மாவு
$3.99
per Bag

Dana
பசுமதி அரிசி
$9.99
10Lb.
per Bag

ந்திரா
வேரி
குத்தரிசி
.99
3 Lb.
er Bag

Nature Fresh
U-5
நண்டுப்பெட்டி
$7.99
per Box

M & M
சம்பா அரிசி
$4.99
3kg.
per Bag

Golden Temple
ஆட்டா மாவு
$9.99
per Bag
20Lb.

## கம் அன்ட் ஸ்ரீல்ஸ் சந்திப்பில் வரஉள்ளது.

n M1B 5J6 Tel: 416-292-9769 Fax: 416-292-9709

## டொக்டரானார் மம்முட்டி!



அப்பாவின் ஆசை நிறைவேறியது

கேரள பல்கலைக்கழகம் டொக்டர் பட்டம் (முனைவர்) வழங்கி நடிகர் மம்முட்டியைக் கௌரவித்துள்ளது. இந்தப் பட்டம் கிடைத்தது பற்றி டொக்டர் மம்முட்டி என்ன சொல்கிறார்?

"என்னை டொக்டராக்கிப் பார்க்க வேண்டும் என்பது தான் அப்பாவின் ஆசை. அதற்காகவே பிளஸ்–2வில் என்னை பயோலஜி எடுக்கச் சொன்னார். ஆனால் எனக்கும் பயோலஜிக்கும் ஏகப்பட்ட தூரம். எப்படி முயன்றும் பயோலஜி பாடம் என்னை ஓரங்கட்டிக் கொண்டே போய்விட, அப்போது முடிந்தது டொக்டர் கனவு. ஆனால் நடிக்க வந்தபிறகு படங்களில் எப்போதாவது கிடைக்கும் டொக்டர் வேடத்தில் என்னை நானே சமாதானம் செய்து கொள்வேன். இப்போது உண்மையிலேயே பல்கலைக்கழகம் எனது கலைப்பணிக்காக டொக்டர் பட்டம் வழங்கியிருப்பதில் நெகிழ்ந்து விட்டேன். இந்தப் பட்டத்தை என்னை டொக்டர் ஆக்கிப்பார்க்க ஆசைப்பட்ட என் அப்பாவுக்கே சமர்ப்பிக்கிறேன்." என்றார்.

## ஈழத்தமிழரின் திரைப்படத்துக்கு நோர்வேயில் விருது!

ஈழத்தமிழரான லெனின் எம். சிவம் இயக்கிய '1999' என்னும் திரைப்படத்துக்கு நோர்வேயில் நடந்த தமிழ்த் திரைப்பட விழா– 2010 இல் விருது கிடைத்துள்ளது. இத்திரைப்படமானது கடந்த ஆண்டு ஒக்ரோபர் மாதத்தில் வன்கூவர் சர்வதேச திரைப்பட விழாவில் முதன்முதலில் திரையிடப்பட்டமை குறிப்பிடத்தக்கது. இதை இயக்கிய லெனின் எம். சிவம் என்பவர் கனடாவில் வசிக்கும் ஒரு ஈழத்தமிழராவார். கடந்த புதன்கிழமை நோர்வே ஒஸ்லோ நகரில் தமிழ்த் திரைப்படங்கள் மாத்திரம் திரையிடப்படுவதற்கான விழா ஏற்பாடு செய்யப்பட்டது. இந்நிகழ்விலேயே '1999' க்கு 'மிட்நைட் சன்' (நள்ளிரவுச் சூரியன்) என்னும் விருது கிடைத்துள்ளது. இந்த விழாவில், ஈழத்தமிழர்கள் தயாரித்த



இன்னும் சில குறும்படங்களும் திரையிடப்பட்டன. இதில் நோர்வேயைச் சேர்ந்த தமிழியம் சுபாஸ் இயக்கிய 'வன்னி எலி' என்ற குறும்படத்துக்கு மிகச் சிறந்த குறும்படத்துக்கான விருது கிடைத்துள்ளது. இப்படம் எதிர்வரும் 7ம் திகதி ஞாயிற்றுக்கிழமை பிரான்சிலும் திரையிடப்படுகின்றது.

1999 திரைப்படமானது ஈழத்தமிழர்கள் எதிர்நோக்கும் வன்முறைகள் காரணமாக கனடாவுக்கு குடிபெயர்ந்து அங்கு அவர்கள் வாழ்க்கையைக் கொண்டுசெல்வதற்காக படும்பாட்டை எடுத்துரைக்கின்றது. மேற்படி திரைப்பட விழாவில் அண்மையில் வெளியான இந்திய திரைப்படங்களான சமுத்திரக்கனியின் 'நாடோடிகள்', மிஸ்கினின் 'நந்தலாலா', மற்றும் சசிகுமாரின் 'சுப்ரமணியபுரம்' ஆகியனவும் திரையிடப்பட்டன. எனவே மேற்படி இயக்குனர்களும் கூட விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்திருந்தனர்.

## சுவிஸ் திரையரங்குகளில் தமிழர்களின் கலாச்சாரம் – காதல்



Topic film AG இன் தயாரிப்பில் சுவிஸ்சர்லாந்தின் இயக்குநரான Anna Luif இன் இயக்கத்தில் வரும் மார்ச் 11 திகதி சுவிஸ் திரைகளில் Madly in Love திரைப்படம் வெளியாக இருக்கின்றது. கடுமையான கலாசாரக் கட்டுப்பாட்டுடன் வளர்க்கப்பட்ட இலங்கைத் தமிழரான நாயகன், சுவிஸ் பெண் ஒருத்தியுடன் காதல் வயப்படுவதும், நாயகனுக்கு இலங்கையில் பெண் நிச்சயிக்கப்படுவதுமாக கலாசாரம் – காதல் என்பவற்றிற்கிடையிலான





ஊடாட்டமாக படம் தயாரிக்கப்பட்டுள்ளது. சுவிஸ் வாழ் தமிழர்களின் பண்பாடு குறித்த ஒரு பார்வையை பார்வையாளர்களுக்கு இப்படம் ஏற்படுத்தும் என எதிர்பார்க்கப்படுகிறது. Anna Luif இற்கு இது இரண்டாவது படமாகும். சூரிச் நகரில் பிறந்து இந்தியாவில் பணியாற்றி, திரைப்படத்துறையைக் கற்றுக்கொண்ட இவர், ஏற்கனவே Little Girl Bleu என்ற படத்தினை இயக்கியிருந்தார்.

## தன்னை மணப்பவர் விடுதலைப் புலி ஆதரவாளரில்லை என ரம்பா அறிவிப்பு



நடிகை ரம்பாவை மணக்கும் கனடா வாழ் இலங்கைத் தமிழர் இந்திரன் விடுதலைப் புலி ஆதரவாளர் என்று வெளியான செய்திகளை ரம்பாவும் அவரது அண்ணன் வாசுவும். இந்தத் திருமணத்தை விரும்பாத சிலர் செய்யும் சதி இது என்று அவர்கள் தெரிவித்துள்ளனர். தமிழ் திரையுலகில் முன்னணி கதாநாயகியாக இருந்தவர் ரம்பா. ரம்பாவுக்கும் கனடா வர்த்தகரான இந்திரனுக்கும் சமீபத்தில் திருமணம் நிச்சயமானது.

இவரது நிறுவனம் ரம்பாவை சில மாதங்களுக்கு முன் விளம்பர தூதுவராக நியமித்தது. அப்போது இந்திரனுக்கும் ரம்பாவுக்கும் காதல் மலர்ந்தது. சமீபத்தில் இருவருக்கும் சென்னை அடையாறு பார்க் விடுதியில் நிச்சயதார்த்தம் நடந்தது. ஏப்ரல் 8ம் திகதி திருப்பதியில் திருமணத்தை நடத்த திட்டமிட்டுள்ளனர். இந் நிலையில் விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் இந்திரனை தொடர்புபடுத்தி செய்திகள் வெளிவந்தன. இந்திரன் விடுதலைப் புலிகள் ஆதரவாளர் இல்லை என்றும் அமெரிக்கா, கனடாவில் உள்ள இந்திய தூதரகங்கள் அவர் இந்தியா வருவதற்கு விசா அளிப்பதன் மூலம் இதை அறிய முடியும் என்றும் கூறியுள்ளனர். இதுபற்றி ரம்பாவின் அண்ணன் வாசு கூறுகையில், இந்திரன் பற்றி நல்லா விசாரிச்சுதான் இந்த கல்யாணத்துக்கு சம்மதிச்சோம். நாங்கள் இந்த திருமணத்தில் திருப்தியாக இருக்கிறோம். எந்த குழப்பமும் இல்லை. இந்திரனின் தந்தை பெயர் பத்மநாபன். இவரை விடுதலைப் புலிகளின் குமரன் பத்மநாபன் என்று தவறாக புரிந்து இப்படி பேசுகிறார்கள் போலிருக்கிறது என்றார். இதுபற்றி ரம்பா கூறுகையில், என் மீது பொறாமை கொண்ட சிலர்தான் இப்படியெல்லாம் வதந்தி பரப்புகிறார்கள். எங்கள் காதல் உண்மையானது. அதைவிட உண்மையானவர் எனக்கு கணவராக வரப்போகும் இந்திரன்? என்றார்.

## சினேகனின் இன்னொரு பாடல் கொலை



தரமான பாடல்களை மட்டுமல்ல சமூகச் சீர்கேடான பாடல்களை வடிப்பதிலும் பாடலாசிரியர் சினேகன் முன்னணிதான். ஏற்கனவே சாமி படத்தில் 'கல்யாணம் தான் கட்டிக்கிட்டு ஓடிப்போலாமா?' என்ற பாடலை எழுதி வாங்கிக்கட்டியவர், இப்போது 'கந்தா' படத்துக்கு சிநேகன் எழுதிய பாடல் அடுத்தகட்ட சர்ச்சையின் ஆரம்பம் என்கிறது, திரையுலக வட்டாரம். பாடல் இப்படி ஆரம்பிக்கிறது. 'பத்துலாரி கட்டில் வேணுமா? நான் தரேண்டி' என்று நாயகன் ஆரம்பிக்க, நாயகியோ பதிலுக்கு '8 லாரி தொட்டில் வேணுமா நான் தரேண்டா' என்று அதிரடி பதில் தருவதாக பாடல் போகிறது. இசையமைப்பாளர் சக்தி ஆர்.செல்வா இசையில் வெளிவரும் இப்பாடல் இவர் மீது இன்னொரு சர்ச்சையை ஏற்படுத்தும் என எதிர்பார்க்கப்படுகின்றது. சமூகம் எப்படிப் போனால் என்ன, பேசப்பட்டால் சரி.




**முள்ளிவாய்க்காலில் இறுதி வரை நின்று போராடிய போராளியின் அனுபவப் பதிவு இது. பாதுகாப்பான தளம் ஒன்றை இவர் சென்றடையும் வரை இவரது விபரங்களை தவிர்த்துக்கொள்கின்றோம்.**

# அனைவரையும் வேதனையில் ஆழ்த்திய பால்ராஜ் அண்ணையின் இழப்பு

தமிழ் மக்களை ஆழ்ந்த சேகத்தில் ஆழ்திய நிகழ்வாக விடுதலைப் புலிகளின் சிறப்புத் தளபதியான பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் வீரச்சாவு நிகழ்வு அன்று வன்னியில் நிகழ்ந்தது.

உண்மையில் போராளிகள், தமிழ் மக்கள் மனங்களில் மட்டுமல்ல, சிங்களப் படைகளினதும், படைத்தளபதிகளினதும், ஆட்சியாளர்கினதும் மனங்களில் எல்லாம் நிறைந்திருந்தவர் தளபதி பால்ராஜ்.

அதாவது எதிரிகளுக்கு எதிரியாகவும் மக்களுக்கு மக்களாகவும் போராளிகளுக்கு போராளியாகவும் பெறுப்பாளர்களுக்கு தளபதியாகவும் அண்ணனுக்கு தம்பியாகவும் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு வலது கரமாகவும் திகழ்ந்தவர் எங்கள் பால்ராஜ் அண்ணா.

எல்லாராலும் செல்லமாக லீமா என்று அன்போடு அழைக்கப்படும் பால்ராஜ் அண்ணாவின் இழப்பு செய்தி 20.05.2007 அன்று அலம்பில் பகுதியில் நடந்தேறுகின்றது. பால்ராஜ் அண்ணா அவர்களின் விடுதலைப் போராட்ட வரலாறு செல்லமுடியாது, எழுத முடியாது, வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதது. தமிழீழ விடுதலையின் முதுகெலும்பாக அவர் திகழ்ந்தவர்.

தமிழர்களின் வரலாற்றில் முதல் மரபுவழி படையணியாக திகழ்வதுதான் சாள்ஸ் அன்ரனி படையணி. விடுதலைப் போராட்டத்தின் தொடக்க காலத்தில் போராட்டம் பல்வேறு நெருக்கடி நெருக்குவாரங்களை சந்தித்தபோதெல்லம் அவற்றில் இருந்து விடுபட வழி எடுத்துக் கொடுத்தவரும் தமிழீழ தேசியத் தலைவர் அவர்களின் தோழருமான சாள்ஸ் அன்ரனி அவர்களின் நினைவினைத் தாங்கி தொடங்கப்பட்டதுதான் சாள்ஸ் அன்ரனி படையணி. இப்படையணியின் வரலாறு தமிழீழ மண் எங்கிலும் உண்டு. சாள்ஸ் அன்ரனி படை அணி களத்தில் என்றால், அதற்கு ஒரு பெருமை. காரணம் களம் வெற்றிக்களமாக மாறும் என்பதுதான்.

1983 யூலை 15ம் நாள் '*என்னை சுட்டுப்போட்டு துப்பாக்கியை எடுத்துக்கொண்டு போ*' என்று கட்டளை இட்ட வீரன்தான் லெப்.சீலன் என்று அழைக்கப்படும் சாள்ஸ் அன்ரனி. தலைவர் அவர்களுக்கு தோழனாக இருந்த சாள்ஸ் அன்ரனி அவரது நாமம் தரித்து 01.04.1994 அன்று உருவாக்கம் பெற்ற படையணியாக சாள்ஸ் அன்ரனி திகழ்கின்றது.

இந்தியாவின் 9வது பயிற்சிபாசறையில் பயிற்சி பெற்ற பால்ராஜ் அவர்களின் விடுதலைப் போராட்ட தொடக்ககாலமே போர்க்கலை வல்லவன் பசீலனுடன்தான் ஆரம்பிக்கின்றது. முன்னைய வன்னி மாவட்ட தளபதி மேஜர் பசீலனின் வலது கரமாக திகழ்ந்த லீமா அவர்கள், பசீலனின் பலத்திற்கு வலுச்சேர்கும் கரமாக அன்று திகழ்ந்தார். பசீலனின் தாக்குதல் ஒன்று என்றாலும் அல்லது பசீலனின் உணவிலிருந்து என்றாலும் அதில் லீமாவின் பங்கு இருக்கும்.

சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவின் முதல் தளபதியாகவும் விடுதலைப் புலிகளின் படைப்பிரிவின் துணைத் தளபதியாகவம் விளங்கியாவர் லீமா. களத்தில் தொலைத் தொடர்பு கருவிகளில் லீமாவின் கணீர் என்றகுரல் கேட்டால் போராளிகள் மத்தியில் உத்வேகம் பிறந்துவிடும். அதேவேளை, சிங்களப்படைக்கு அது பயப்பீதியைக் கொடுக்கும். களமுனைகளில் சண்டைகள் என்றால் லீமாவின் குரல்கள் தொலைத்தொடர்பில் ஓங்கி ஒலிக்கும். தனது கட்டளைகளால் ஏராளமான எதிரியின் படைமுகாம்களை தகர்த்து படைத்தளபாடங்களை அள்ளி வந்த சாதனைக்கு சொந்தக்காரர்.

விடுதலைப் புலிகளின் பலத்தை அதிகரிக்க பெருமளவு வெடிபொருள், படையப் பொருட்கள் தேவைப்பட்டன. தனிமனிதானாக செயற்பட்ட லீமா அவர்கள், பல்வேறு தாக்குதல்களில் விடுதலைப் புலிகளின் ஆயுத பலத்தினை அதிகரிக்கச் செய்தார். துணிவு – தந்திரம் – வேகம் இம்மூன்றின் உருவம்தான் பால்ராஜ் அவர்கள். எதிரி களம் திறப்பதற்கு முன்னர், எதிரிக்கு களம் திறப்பதில் வல்லவர். புதியபுதிய திட்டங்கள் மற்றும் போர்நுட்பங்களுடன் போராளிகளை வழிநடத்துவதில் வல்லவர் எங்கள் அண்ணா லீமா. இப்படிப்பட்ட லீமாதான் அன்று சாள்ஸ் அன்ரனி சிறப்பு படையணியின் தளபதியாக எதிரிக்கு சிம்மசெப்பனமாக திகழ்ந்தார்.

களமுனையில் எதிரியுடன் நேரடியாக சண்டையிட்டு உடலெங்கும் பல விழுப்புண்களை தாங்கிக்கொண்டும் களமுனைகளில் வீறுநடைபோடுவார் எங்கள் லீமா. விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாற்றில் என்றும் நிகழ்ந்திராத சாதனை நிகழ்த்திய வரலாற்று தாக்குதலாக ஓயாத அலைகள் தாக்குதல்கள் நிகழ்ந்தன. இதில் ஓயாத அலைகள் மூன்றில் இத்தாவில் தரை இறக்கத்திற்காக அனைத்து படையணிகளின் பகுதிகளுடனும் லீமா கடல் மார்கமாக இத்தாவில் பகுதியில் தரையிறங்கி 34 நாட்கள் தொடர் தாக்குதலினை தொடுக்கின்றார்.

லீமாவும் எங்களுடன் நிக்கின்றார் என்ற உறுதியுடன் போராளிகள் களமுனையில் தாக்குதலினை தொடுக்கின்றார்கள். இவ்வாறுதான் தீச்சுவாலை முறியடிப்பு சமர் என்றாலும் அதிலும் முழுமையா லீமா அவர்கள் தனது படையணியுடன் களம் இறங்கி எதிரிக்கு தகுந்த பாடம் புகட்டினார் அன்று.

இதன்பின்புதான் சமாதனம் என்ற மாயை உருப்பெறுகின்றது. இதிலும் லீமா தன் உடலினை பொருட்படுத்தாமல் பயிற்சி திட்டங்களில் ஈடுபடுகின்றார். ஏன் அவரது உடல்நோயினை சீர்செய்ய பன்னாடு ஒன்றிற்கு லீமா அனுப்பப்படுகின்றார். இதன்போது ஓர் அதிசயம் நிகழ்கின்றது. மருத்துவத்தினை முடித்து சிறீலங்காவின் கட்டுநாயக்கா விமானநிலையம் வந்திறங்குகின்றார் லீமா. அப்போது சிறீலங்காப் படையின் தளபதிகள் எல்லோருக்கும் பால்ராஜ் அவர்களை ஒரு அதிசயம் போல் பார்க்கின்றனர். அப்போதுதான், அப்போது மட்டும்தான் எதிரியால் லீமாவை நேரடியாக பார்க்க முடிந்தது. அந்தளவிற்கு எதிரிக்கு கலக்கம் கொடுக்கும் வல்லவனாக திகழ்ந்தவர் லீமா அவர்கள்.


பால்ராஜ் அண்ணைக்கு இறுதி விடைகொடுக்கும் தேசியத் தலைவரும், தளபதிகளும்.

**மருத்துவத்தினை முடித்து சிறீலங்காவின் கட்டுநாயக்கா விமானநிலையம் வந்திறங்குகின்றார் லீமா. அப்போது சிறீலங்காப் படையின் தளபதிகள் எல்லோருக்கும் பால்ராஜ் அவர்களை ஒரு அதிசயம் போல் பார்க்கின்றனர். அப்போதுதான், அப்போது மட்டும்தான் எதிரியால் லீமாவை நேரடியாக பார்க்க முடிந்தது.**

சிகிச்சை பெற்று திரும்பியபின் சமாதான காலத்திலும் அவர் சும்மாய் இருக்கவில்லை. தமிழீழ தேசியத் தலைவர் அவர்களின் கட்டளைக்கு அமைவாக கிழக்கு மாகாணம் செல்கின்றார். அங்கும் படை அணிகளை பயிற்சியில் ஈடுபடுத்துகின்றார். அடிப்படைப் பயிற்சி தொடக்கம் மோட்டார் படை அணி வரை லீமாவின் நெறிப்படுத்தலில் நடைபெறுகின்றது. இதன்போதுதான் 2004ம் ஆண்டு வாகரையில் ஆழிப்பேரலையிலும் லீமா அவர்களும் பாதிக்கப்படுகின்றார். எனினும் அதிலிருந்து மீண்டவர், பின்பு வன்னியில் படைக்கட்டுமானங்களின் மீள்பயிற்சி தொடக்கம் அதிகாரிகளின் பயிற்சி திட்டங்களில் முனைப்புடன் செயற்பட்டு பல மேல்நிலை அதிகாரிகளை உருவாக்குகின்றார். இங்கு படை அணிகளில் உள்ள லெப்.கேணல் நிலையுடைய கட்டளை அதிகாரிகளுக்கு படைத் தந்துரோபாயங்கள், யுத்திகள் என்பன லீமா அவர்களாலேயே நேராடியாக பயிற்றப்படுகின்றது. கனரக ஆயுதம் இயக்குதல், டாங்கி இயக்குதல், டாங்கிக்கு எதிர்தாக்குதல் செய்தல் போன்ற கனரக ஆயுதங்களை எல்லாம் அவர் திறம்பட கற்றுவைத்துள்ளார் என்பது அப்போதுதான் அந்த மேல்நிலை அதிகாரி பயிற்சியில் பங்கேற்றவர்களுக்கு கூடத் தெரியவருகின்றது. லீமா அவர்களால் உருவாக்கப்பட்ட போர்வீரர்கள் எத்தனையோ பேர் களத்தில் சாதனைகளைப் படைத்திருக்கின்றார்கள்.

பயிற்சித்தளங்களில் பயிற்சிகள் வழங்கிக்கொண்டிருந்த நிலையில்தான் லீமா அவர்களுக்கு களமுனை ஒன்றை சீர்படுத்தவேண்டிய உத்தரவு வருகின்றது. அது மன்னார் களமுனை. குறுகியகாலத்திற்குள் மன்னார் களமுனையினை சீர்செய்துவிட்டார். அப்போதுதான் லீமா அவர்களின் உடல்நிலை சற்று மோசமடைகின்றது. இதனால் ஓய்வுக்காக விடப்படுகின்றார். ஆனால், அவர் ஓய்வெடுக்கவில்லை. போராளிகளுக்கு வகுப்பெடுக்கின்றார். அங்கும் லீமா அவர்களின் திறமையான நுட்பங்கள் பயிற்றப்படுகின்றது. போர் உச்சமாகிக்கொண்டிருந்த நிலையில், தமிழீழ தேசிய துணைப்படை கட்டுமானத்தினை லீமா அவர்கள் மேற்கொள்கின்றார். விடுதலைப் போராட்டத்திற்கு ஆட்பலம் சேர்க்கும் பணிகளில் அவர் தன் உடல்நிலையையும் பொருட்படுத்தாமல் நேரடியாக களமிறங்குகின்றார். கிராமங்களில் வீட்டுடன் நிற்கும் முன்னாள் போராளிகளை ஒன்றுகூட்டி அமைப்பில் இணையுமாறு கதைக்கின்றார். இதில் போராளிகள் பலர் இணைகின்றார்கள். இணைந்தவர்களின் குடும்பப் பராமாரிப்புச் செலவுகள் தொடர்ச்சியாக லீமா அவர்களினால் கவனிக்கப்படுகின்றது. வீடு இல்லாதவர்களுக்கு வீடுகள் கூட கட்டுவித்துக்கொடுக்கின்றார். இவ்வாறு இயலுமான உதவிகளை மேற்கொண்டு போராட்டத்துள் முன்னைய போராளிகளை புதிய வடிவத்தில் இணைக்கும் பணிகளில் மக்களிடம் சென்று நேரடியாக கதைக்கின்றார்.

இவ்வாறு இருக்கையில்தான் அன்று அலம்பில் பகுதியில் இவரது சேகமான செய்தி வந்து சேருகின்றது.

*(தொடரும்...)*

# வட்டுக்கோட்டைத் தீர்மானத்தின் அவசியமும் நாடுகடந்த அரசின் பின்னணியும்



**பேராசிரியர் தீரன்.**

ஈழத் தமிழ் மக்கள் மத்தியில் இவர் அதிகளவில் பிரபலம் பொறாதபோதும், தமிழீழத் தேசியத்திற்காகவும், ஈழத் தமிழ் மக்களுக்காகவும் இன்றுவரை அயராது பாடுபடுபவர். 1989ம் ஆண்டளவில் பாட்டாளி மக்கள் கட்சியை (பா.ம.க) உருவாக்கி அதன் தலைமைப் பொறுப்பை வகித்த பெருமை இவரையே சாரும்.

தமிழக சட்டமன்ற உறுப்பினராக பதவி வகித்தவர். ராஜீவ் காந்தி கொலையின் பின்னர், தமிழகத்தில் ஈழத் தமிழ் மக்களுக்கு எதிரான நிலைப்பாடு அதாவது ஈழத் தமிழர்களுக்கு ஆதரவாகப் பேசுவதோ, விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாகப் பேசுவதோ குற்றம் என்பது போன்று மக்கள் அச்சப்பட்டுக்கொண்டிருக்கும் ஒரு சூழ்நிலை உருவாக்கப் பட்டுக்கொண்டிருந்த நிலையில், ஈழத் தமிழர்களுக்கு ஆதரவாக குரல் எழுப்புவது பயங்கரவாதமாக, துரோகமானதாக பார்க்கப்பட்ட நிலையில், 1992ம் ஆண்டளவில் ஈழத் தமிழர் வாழ்வுரிமை மாநாட்டை மூன்று நாட்கள் நடத்தி, மாநாட்டின் முடிவில் தமிழீழத் தேசியத் தலைவரின் உருவப்படங்களைப் பெருமளவில் தாங்கிய பிரமாண்டமான பேரணியை நடத்தி தமிழக மக்களின் உணர்வலைகளை ஈழத் தமிழ் மக்களுக்கு ஆதரவாக மீண்டும் திருப்புவதில் பெரும் வெற்றி கண்டவர். 1995ம், 1997ம் ஆண்டுகளிலும் இவ்வாறான மாநாடுகளை நடத்தி தமிழக மக்களின் உணர்வலைகளை ஈழத் தமிழர்கள் பக்கம் வைத்திருப்பதில் பெரும்பங்காற்றியவர்.

இதனாலேயே, 1998ல் பா.ம.கவின் தலைவர் பதவியில் இருந்து இவர் வெளியேற வேண்டிய நிர்ப்பந்த நிலையும் ஏற்பட்டது. ஆனாலும், ஈழத் தமிழர்களுக்கும், தனித் தமிழீழம் அமையவேண்டும் என்பதிலும் இன்னும் உறுதியோடு செயற்பட்டு வருகின்றார். அதற்காக பல நெருக்கடிகளைச் சந்தித்தபோதும், உறுதியோடு அதற்கான பணிகளை முன்னெடுக்கின்றார். தற்போது பசுமைத் தமிழகம் எனும் அமைப்பை உருவாக்கி விவசாயிகளுக்காக அரும்பணியாற்றி வருபவர். அண்மையில் ஐரோப்பிய நாடுகளுக்கு பயணம் மேற்கொண்ட இவரை ஈழமுரசு சந்தித்து கலந்துரையாடியது. இதன்போது தற்போது புலம்பெயர்ந்த நாடுகளில் நடைபெறும் வட்டுக்கோட்டைத் தீர்மானம் மீதான மீள் வாக்கெடுப்பும், அதற்கு முற்றிலும் முரணான வகையில் நகரும் நாடு கடந்த அரசின் செயற்பாடும் குறித்து தனது காரசாரமான கருத்துக்களை முன்வைத்தார். நாடு கடந்த அரசின் செயற்பாட்டுக்குப் பின்னால் பல வலிமையான கரங்கள் இருக்கின்றன என்று குற்றம்சாட்டினார். அவருடான சந்திப்பை ஒரு பேட்டி வடிவில் அல்லாமல், அதனை தொடர் கட்டுரை வடிவில் இங்கு தருகின்றோம். இவ்வாரம் பகுதி 4

## படுமோசமான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய ஊடகப்போர் இப்போது நடைபெறுகின்றது

பாலஸ்தீனர்களை மிக மிகக் கொடுமைப்படுத்தியதற்காக இன்று இஸ்ரேலியர்கள் போர்க் குற்றவாளிகளாக விசாரிக்கப்பட்டுக்கொண்டிருகின்றார்கள். போர் குற்றவாளிகளை விசாரிப்பதற்கு முன்னால் சர்வதேச நீதிமன்றத்தினுடைய தலைவர் தலைமையிலே விசாரணை இடம்பெறுகின்றது. இஸ்ரேலியர்கள் மீதான போர்க்குற்றங்களை விசாரிப்பதற்கு என்றைக்கும் இஸ்ரேலியர்களிற்கு ஆதரவாக இருக்கும் அமெரிக்கா போன்ற நாடுகள் கூட யார் தவறு செய்தாலும் அது தவறுதான். அவர்கள் தண்டிக்கபட வேண்டும் என்ற அடிப்படையில் போர்க்குற்ற விசாரணைக்கு அமெரிக்கா போன்ற நாடுகள்கூட இன்று ஆதரவைத் தெரிவிக்கின்றார்கள். யூக்கோசிலாவாக்கியாவிலே 6000 பேரைக் கொன்றதற்காக போர்க்குற்ற விசாரணை நடாத்தப்பட்டு தண்டனை வழங்கப்பட்டுள்ளது. இதெல்லாம் ஒருசில முன்னுதாரணங்கள்.

இதை எல்லாம் நாம் மனதிலேகொண்டு புலம்பெயர்ந்து வாழ்கின்ற நீங்கள் எல்லோரும் மீள்வாக்கெடுப்பின் மூலமாக ஒரு ஜனநாயக ரீதியான ஒரு அமைப்பை உருவாக்கி அதன் மூலமாக போர்க்குற்றவாளி யாராக இருந்தாலும் அதாவது ராஜபக்சவாக இருந்தாலும் சரி, சரத் பொன்சேக்காவாக இருந்தாலும் சரி அல்லது கோத்தபாய ராஜபக்சவாக இருந்தாலும் சரி, இவர்களிற்கெல்லாம் துணைபோனவர்களாக இருந்தாலும்சரி அது யாராக இருந்தாலும் அவர்கள்மீது விசாரணை நடாத்தப்பட்டு அவர்கள் செய்த தவறிற்கு போர் குற்றத் தண்டனை வழங்கப்படல் வேண்டும்.

சர்வதேச நீதிமன்றத்தினுடைய மனித உரிமைகளின் செயலர் நவனீதம்பிள்ளை அவர்களே அண்மையில் தெளிவாகச் சொல்லியிருக்கின்றார். அதோடு ஏறத்தாழ 18 மேற்குலக நாடுகள் இலங்கையின் மீது போர்க்குற்ற விசாரணை நடாத்தப்படல் வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளன. ஆனால் இந்தியா போன்ற நாடுகள் தலையிட்டதன் விளைவாக சீனா, இந்தியா, பாகிஸ்தான் இந்த நாடுகள் எல்லாம் முயற்சி செய்தததனுடைய விளைவாக இன்று என்ன நடந்ததென்றால், போர்க்குற்ற விசாரணை அங்கு நடாத்தப்பட வேண்டாம் என்று தற்காலிகமாக நிறுத்தப்பட்டிருக்கின்றது. ஆனாலும் கூட இன்று தொடர்ந்து 18 நாடுகள் ஆதரவு தெரிவித்திருக்கின்றன. போர்க்குற்ற விசாரணை நடாத்துவதற்காக நிச்சயமாக ஆவன செய்யும் என்ற நம்பிக்கை எமக்கிருக்கின்றது.

ஏனென்றால் இன்று பிரித்தானியாவில் புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழர்களின் அமைப்பானது இலண்டனிலே நடைபெற்ற மாவீரர் நாளன்று பல உள்ளூர் நாடாளுமன்ற உறுப்பினர்களை அழைத்திருந்தது. வந்திருந்த எல்லா நாடாளுமன்ற உறுப்பினர்களும் முள்ளிவாய்க்காலிலே நடைபெற்ற அந்தக் கொடுமையான சம்பவத்தை அனைவரும் பேசினார்கள். அங்கு நடைபெற்றிருப்பது பயங்கரமான படுகொலை என்பதையெல்லாம் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். போர் குற்ற விசாரணை நடத்தப்படவேண்டும் என்ற இந்த செயற்திட்டக்கோரிக்கை நியாயமானது என்று சொன்னார்கள். ஆக இன்றைக்கு மேற்குலக நாடுகள் முள்ளிவாய்க்கால் சம்பவத்திற்குப் பின்னாலே நம்மீது ஒரு பரிவு, ஒரு அக்கறை செலுத்தக்கூடிய அளவிற்கு மாபெரும் திருப்பம் பெற்றிருக்கின்றது.

எனவே நாம் என்ன செய்யவேண்டுமென்றால், பிரித்தானியா தமிழர்கள் செய்த முயற்சியினாலேதான் இன்று 133 நாடாளுமன்ற உறுப்பினர்களுடைய ஆதரவினைப் பெற்றுள்ளார்கள். அவர்கள் தொடர்ந்து முயற்சி செய்வார்களேயானால் இங்கிலாந்தினுடைய நாடாளுமன்ற உறுப்பினர்களுடைய பெருவாரியான ஆதரவை பெறலாம்.

கடந்த ஆண்டு பொதுநலவாய (காமென்வெல்த்) மாநாடு நடந்தது. அங்கு அடுத்த மாநாடு இலங்கையிலே நடாத்தப்படவேண்டுமென்று இந்தியா போன்ற நாடுகள் விரும்பின. ஆதற்காக 145 நாடுகளுடைய ஆதரவுகளை எல்லாம் அவர்கள் பெற்று இலங்கையில்தான் அந்த மாநாடு நடத்தப்படவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஆனால் இங்கிலாந்து, அவுஸ்திரேலியா, பிரான்ஸ் போன்ற சில நாடுகள் பெருவாரியாக முயற்சி எடுத்து அங்கு நடத்தக் கூடாது. அங்கு இன அழிப்புக்கள் நடைபெற்றிருக்கின்றது, கொடுமைகள் நடைபெற்றிருக்கின்றது. அங்கு மாநாட்டை நடத்தினால் அது அந்த நாட்டினுடைய செயற்பாட்டை நாம் அங்கீகரித்தது போலாகிவிடும். எனவே அதைச் செய்யக்கூடாது என்று எதிர்ப்புத் தெரிவித்து அந்த மாநாட்டை இலங்கையிலே நடைபெறுவதை மாற்றி, அவுஸ்திரேலியாவில் நடைபெறுவதற்குரிய ஏற்பாட்டை செய்திருக்கின்றார்கள். இது நமக்குக் கிடைத்திருக்கின்ற ஒரு வெற்றி என்றுதான் சொல்லவேண்டும். புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழர்களாலும் சாதிக்க முடியும் என்பதை இது காட்டியிருக்கின்றது.

இலங்கையிலே நடைபெற இருந்த பொதுநலவாய மாநாடானது மனித உரிமை மீறல்களிற்காக, போர்க்குற்றங்களிற்காக அது அவுஸ்திரேலியாவிற்குத் தள்ளிப்போய் இருக்கின்றது என்ற அந்த நியாயத்தை உலகநாடுகளிற்கு எடுத்துச்சொல்வதற்கு ஒரு முதற்கட்ட வெற்றியை புலம்பெயர்ந்து வாழ்கின்றவர்கள், குறிப்பாக இலண்டனிலே இருப்பவர்களின் முயற்சி செய்தார்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

இன்றைக்குக் களத்திலே ஏறத்தாழ அதாவது இளைஞர்களாக, இளம்பெண்களாக இருக்கக்கூடியவர்களையெல்லாம் தனித்துக்கொண்டு சென்று வதைமுகாம்களில் வைத்து அதாவது 20,000ற்கும் மேற்பட்ட இளைஞர்களையெல்லாம் அந்த வதைமுகாமிலே வைத்து கடுமையாக விசாரித்து வருகின்றார்கள். அவர்களை வைத்துக்கொண்டு, அவர்களிற்கு தீய பழக்கங்களுக்கெல்லாம் ஆட்படுத்தி புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழர்கள் எல்லோரும் அதாவது உற்றார், உறவினர்கள், அவர்களிற்குத் தெரிந்தவர்கள் யார் இருந்தாலும்சரி அவர்களுடன் தொடர்புகொள்ளச்செய்து அவர்கள் மூலமாக புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழீழ மக்கள் மீது ஒரு சதிவலையைப் பின்னுகின்றார்கள் என்ற செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன.

புலம்பெயர்ந்து வாழ்கின்ற தமிழர்களை நாம் கேட்டுக்கொள்ள விரும்புவது என்னவென்றால், படுமோசமான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய ஊடகப்போர் இப்போது நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது. முள்ளிவாய்காலை விட மிகமோசமான ஒரு அறிக்கைப்போரை இந்த ஊடகங்கள் நடத்திக்கொண்டிருக்கின்றன. இந்த ஊடகங்களிலே நமக்கு ஒரு பார்வை வேண்டும். நமக்கு ஒரு தனிப்பார்வை தேவையில்லை. ஏற்கனவே மேதகு வே.பிரபாகரன் அவர்களுடைய பார்வை எப்படித் தெளிவான, திட்டவட்டமாக இருந்ததோ அதே பார்வையோடு நாம் ஒவ்வொருவரும் யார் என்ன சொன்னாலும் அதற்கெல்லாம் கவலைப்படாமல், நமக்கென்று சில கடமைகள் இருக்கின்றது அவற்றை செய்வோம்.

**முள்ளிவாய்க்காலை விட மிகமோசமான ஒரு அறிக்கைப்போரை இந்த ஊடகங்கள் நடத்திக் கொண்டிருக்கின்றன. இந்த ஊடகங்களிலே நமக்கு ஒரு பார்வை வேண்டும். நமக்கு ஒரு தனிப்பார்வை தேவையில்லை. ஏற்கனவே மேதகு வே.பிரபாகரன் அவர்களுடைய பார்வை.....**

மீள்வாக்கெடுப்பு நடாத்துவதோடு அடுத்த கட்டமாக ஒரு பொதுத்தேர்தல் ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு அதற்கு பிரதிநிதிகளைத் தெரிவு செய்துகொண்டு, நீங்கள் வைத்திருக்கின்ற எந்தவொரு கோரிக்கையும் தமிழீழத்திற்கு ஆதரவாக இசைவளிக்கவேண்டும். போர்க்குற்றங்கள் விசாரிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்படவேண்டும். அத்துடன் பாதிக்கப்பட்ட அந்த மக்களுக்கு நிவாரண நடவடிக்கை சர்வதேச செஞ்சிலுவைச் சங்கங்களின் மூலமாகவோ அல்லது ஐ.நாவின் மூலமாகவோ சென்றடைய வழிவகுக்கவேண்டும். சிங்கள அரசாங்கத்தின் மேற்பார்வையில் எந்த உதவிகள் சென்றாலும் அது தடுக்கப்படும், அல்லது சிதைக்கப்படும், அல்லது அது வேறு மக்களுக்குப் பயன்படுத்தப்படும். ஆனால் பாதிக்கப்பட்ட அந்தத் தமிழ் மக்களிற்கு பயன்படவே பயன்படாது எனபதைப் புரிந்துகொண்டு செயற்படவேண்டும். அதற்கு நாடுகடந்து புலம்பெயர்ந்து வாழக்கூடிய நீங்கள்தான் முயற்சி செய்தல் வேண்டும்.

மீள்வாக்கெடுப்பு நடத்துவதென்பது தேவையற்றது. இது மாவீரர்களிற்குச் செய்கின்ற துரோகம். இதற்கு நாங்கள் தேவையில்லை. 50வது கிலோ மீற்றருக்கு சென்று விட்ட எங்களை மறுபடியும் 5வது கிலோ மீற்றருக்கு பின்நோக்கிப் போகச்சொல்கிறார்கள். இப்படியெல்லாம் சில பேர்கள் கதைத்துக்கொண்டு, நாடுகடந்த தமிழீழ அரசு என்கிறார்கள். இது ஒரு புதிய திட்டம் என்று சொல்கின்றார்கள். பிரித்தானியா இலண்டனிலே கடந்த மாதம் 6ம் திகதி நாடு கடந்த தமிழீழ அரசு சார்பாக நடைபெற்ற கூட்டத்திற்கு எனக்கும் அழைப்புக் கொடுத்திருந்தார்கள், நானும் சென்றிருந்தேன். அதிலே அவர்கள் 16 பக்கத்தில் தமிழிலும், 16 பக்கத்தில் ஆங்கிலத்திலும் கேள்வி பதிலாக டொக்டர் உருத்திரகுமாரன் அவர்கள் வேண்டுகோளாக விடுவதாக சொல்லி அறிக்கையொன்றை வழங்கினார்கள். நாடுகடந்த தமிழீழ அரசுபற்றிய ஒரு விளக்கமாக அதைக் கொடுத்திருந்தார்கள். அதோடு அந்தக் கூட்டத்திலே சொன்னார்கள், உங்களுக்கு யாருக்கு எந்தச் சந்தேகம் இருந்தாலும் நீங்கள் எங்களிடம் கேட்கலாம். அந்தச் சந்தேகங்களை நாங்கள் உள்வாங்கிக்கொண்டு, திருத்தங்களைச் செய்துகொண்டு யாப்புக்கு பின்னாடி இருக்கப்போகின்றோம். அதன்பிறகுதான் அவற்றை சரிசெய்யலாம். அதற்காக நீங்கள் மனம்திறந்து பேசுங்கள் என்று சொன்னார்கள். அவர்களுடைய கோரிக்கையின் அடிப்படையிலே நான் அந்தக் கூட்டத்திலே கலந்துகொண்டு அவர் கொடுத்திருக்கின்ற 16 பக்க நாடு கடந்த தமிழீழ அரசு என்ற கேள்விபதிலுக்கு ஒவ்வொன்றாக சில விளக்கங்களைக் கேட்டேன்.

அவர்களின் பதில்கள் விடுதலைப் போராட்டத்தை கொச்சைப்படுத்துவது மட்டுமல்ல, இனப்படுகொலையையும் மறைக்கின்ற வகையில் இருந்தது.

அதுபற்றி அடுத்த இதழில் பார்ப்போம்.

உ ண் மை யி ன் மு ன் னா ல் ந டு நி லை மை எ ன் ப து இ ல் லை

# வாழ்த்துக் கூறுவதற்குத் தடை



நைஜீரியாவின் தற்காலிக அதிபரான குட்லக் ஜொனதன் பத்திரிகைகளில் தனது புதிய பொறுப்பிற்காக வாழ்த்துக் கூறுவதற்கு தடைவிதித்துள்ளார். சில விளம்பரங்கள் முகஸ்துதி பாடுபவை போலவும், சில தற்காலிக அதிபரானதன் மூலம் மேற்கு ஆபிரிக்க நாடான நைஜீரியாவை பரவலாக நடைபெறும் ஊழலில் இருந்து விடுபட உதவும் தன்மைகொண்டவர் போலவும் விளம்பரப்படுத்தியுள்ளமையைச் சுட்டிக்காட்டுவதானது தனது தற்காலிக அதிபர் என்ற நிலைக்கு ஆபத்தை விளைவித்துவிடக்கூடாது என்பதும் உள்நோக்கமாகும். இஸ்லாமியர்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட நாட்டிற்கு கத்தோலிக்கர் ஒருவர் தலைமை தாங்குவதை மத அடிப்படைவாதிகள் சகித்துக்கொள்வார்கள் என்ற அச்சமும் அடிப்படையானது. அத்துடன் குழுக்களாக ஒன்றிணைந்து அதிபர் மாளிகைக்குச் சென்று வாழ்த்துக் கூறுவதையும் தடை செய்துள்ளார். கடந்த இரண்டு மாதங்களிற்கு மேலாக உடல்நலக்குறைவு எனத் தெரிவித்து சவுதி அரேபிய வைத்தியசாலையில் தெரிவு செய்யப்பட்ட அதிபர் உமர்வார் அடுவா அனுமதிக்கப்பட்டுள்ள நிலையில், உச்ச நீதிமன்ற பணிப்பிற்கு அமையவே வெற்றிடமாக நீடித்த இப் பொறுப்பிற்குத் தெரிவானார். ஆபிரிக்காவில் எண்ணெய் வளம்மிக்க முதன்மைநாடான நைஜீரியாவின் அரச நிர்வாகம் வெளிப்படையானதாகவும், மக்கள் நலன் சார்ந்ததாகவும் அமையும் என்பதுடன், உலகில் நைஜீரியாவிற்கான இடத்தை அதன் வழியில் சென்று பெற்றுக்கொடுப்பதற்கு முழுமையான தனது நிர்வாகம் உழைக்கும் என்றும், பொறுப்பேற்றதன் பின்னரான முதலாவது ஊடகவியலாளர் மாநாட்டில் தெரிவித்திருந்தார். கடந்த காலங்களில் இதுபோன்ற உறுதிமொழிகளை பலதலைவர்கள் தெரிவித்திருந்தபோதிலும் அவை நிறைவுபடுத்தப்படாது நாடு துஸ்பிரயோகவாதிகளினதும், மத அடிப்படைவாதிகளினதும் கரங்களிற்குள்ளேயே சிக்குண்டுள்ளதாக சாதரண மக்கள் கூறுகின்றனர்.

# மனம் போன போக்கில் கொல்ல திட்டம்



கங்கேரி நாட்டின் 22 வயது மாணவன் ஒருவன் தனது தேசத்தவர் 22 பேரை மனம் போன போக்கில் கொலை செய்வதற்கு திட்டமிட்டிருந்ததை ஒப்புக்கொண்டுள்ளார் ஏன்று 'டாபஸ்ற் காவல்துறையினர் தெரிவித்துள்ளனர். 22 வயது தனக்கு தீமையான வருடம் என்பதால் அதே எண்ணிக்கையிலானோரை கொல்வதற்கு 18 மாதங்களாகத் திட்டமிட்டு வந்ததாக அவெல் எஸ் கூறியுள்ளார். குறிபார்த்து சுடும் விளையாட்டு வீரரான இவரிடமிருந்து லுகர் பறவெலும் வகை கைத்துப்பாக்கி ஒன்றும் காவல் துறையினரால் கைப்பற்றப்பட்டுள்ளது. இவர் தனது கொலைத் திட்டத்திற்காக தனது பல்கலைக்கழகத்தையும், வாணிப கட்டடத்தொகுதி ஒன்றினையுமே தெரிவு செய்திருந்தார். ஏனைய நாடுகளின் பாடசாலைகளில் நடைபெற்ற படுகொலைகள் உளரீதியாக இவரைப் பாதித்திருக்கலாம் என்றும் நம்பப்படுகின்றது. இவரிடம் இருந்து கைப்பற்றப்பட்ட 1999ம் ஆண்டு பாடசாலை ஒன்றில் நடைபெற்ற படுகொலைப் படமே முற்பக்கமாகவுள்ளது. 2009ம் ஆண்டு பெக்ஸ் நகரிலுள்ள பாடசாலை வளாகத்தினுள் மாணவன் ஒருவன் கண்மூடித்தனமாக மேற்கொண்ட துப்பாக்கி பிரயோகத்தில் சகமாணவன் ஒருவன் கொல்லப்படு மூவர் படுகாயமடைந்திருந்தனர்.

# எழுத்துப்பிழையால் மேலாளர் பணிநீக்கம்



சிலி நாட்டின் நாணயத்தில் Chile என்பதற்குப் பதிலாக Chiie என இடம் பெற்றதால் நாணய உற்பத்திச் சாலையின் மேலாளரும், பொறுப்பாளரும் பணிநீக்கம் செய்யப்பட்டுள்ளனர். ஆறு சென்ரிம் யூரோ பெறுமதியான புதிய 50 பெசோவிலேயே இத்தவறு ஏற்பட்டுள்ளது. 2008ம் ஆண்டு பாவனைக்காக விடப்பட்ட இந்நாணயங்களில் உள்ள எழுத்துப்பிழையானது கடந்த ஆண்டு இறுதிவரை அவதானிக்கப்படாமலே இருந்து வந்துள்ளது. இந்த நாணயங்களை மக்கள் பாவனையில் இருந்து திரும்பப் பெறும் நோக்கம் எதுவும் தற்போது இல்லை என்று மத்திய வங்கி நிர்வாகம் தெரிவித்துள்ளது. எனினும் எதிர்காலத்தில் இவ்வகை நாணயத்திற்கு பெரும் விலை ஏற்படும் என எதிர்பார்த்து பதுக்குதல் மற்றும் இரட்டிப்பு விலைக்கு வாங்குதல் என்பன மிக வேகமாகவே சிலியில் நடைபெற்று வருகின்றது. சிலியின் சுதந்திர வீரர் பேர்னாடோ ஓ கிக்கின்ஸ் இன் முகத்துடன் கூடிய தவறான நாணயத்தின் எண்ணிக்கை எவ்வளவு என்பது இதுவரை வெளிவரவில்லை. 1990 இற்குப்பின்னர் லத்தீன் அமெரிக்காவில் பொருளாதார வளரச்சியடைந்துவரும் நாடான சிலியிற்கு இது பெரிய தாக்கம் எதனையும் ஏற்படுத்தப் போவதில்லை.

# Amour முதன்மைச் சொல்

உலகில் காதலினை வெளிப்படுத்துவதில் கவர்ச்சியான சொல் அமூர் (Amour) எனும் பிரெஞ்சு மொழிச் சொல்லே என்று பன்மொழி வித்தகர்களின் ஆய்வு வெளிப்படுத்தியுள்ளது. இவ் அமூர் என்ற சொல்லானது இத்தாலிய மொழிச் சொல்லான அமோர் (Amore) ஐ மிகக்குறுகிய வித்தியாசத்தில் இரண்டாம் நிலைக்கு பின்நகர்த்தி விட்டது. இத்தாலிய ஸ்பானிய பெலிசிமா எனும் சொல் மூன்றாவது இடத்தினையும், இதே இரு நாடுகளிலும் பிறிதொரு சொல்லான ரெசூர் (Treasure) எனும் சொல் நான்காவது இடத்தினையும் பெற்றுள்ளது. லண்டனை தளமாகக் கொண்ட 320 இற்கும் மேற்பட்ட பன்மொழியாளர்களால் இவ் ஆய்வு மேற்கொள்ளப்பட்டிருந்தது. காதலினை வெளிப்படுத்தும் அதிக சொற்கள் உள்ள மொழியாக இத்தாலிய மொழியும், இரண்டாவது இடத்தினை பிரெஞ்சு மொழியும் பெற, ஆங்கில-ஸ்பெயின் மொழிகள் இணைந்து மூன்றாவது இடத்தினையும் பெற்றுள்ளன.



பலதும் பத்தும்

~ விநோதன் ~

# திருடனை பிடித்த ஆளில்லாத உலங்குவானூர்தி



பிரித்தானியாவின் பூட்டில் நகரில் கடந்த 11ம் திகதி இரவு இரண்டு திருடர்கள் ஒரு காரை திருடிச் சென்றபோது காவல்துறையினர் அவர்களை கண்டு துரத்தியபோது அந்த காரை லிவர்பூல் கால்வாய் அருகே நிறுத்தி விட்டு இருவரும் தப்பியோடினார்கள். எனினும், அதில் ஒருவர் காவல்துறையிடம் சிக்கிக் கொண்டார். இன்னொருவரோ, இருட்டை பயன்படுத்தி கொண்டு அருகில் இருந்த அடர்ந்த காட்டுக்குள் ஓடிவிட்டார். இதனையடுத்து, இவரைக்கைது செய்வதற்கு தானியங்கி (ரிமோட் கொண்ட்ரோல்) மூலம் இயங்கும் மிகச் சிறிய ஆளில்லாத உலங்குவானூர்தியை அனுப்பி தேடுதல் நடத்தியுள்ளனர். அதில் பொருத்தப்பட்டிருந்த வெப்ப உணர்வு கருவி திருடனின் உடல்



வெப்பத்தை கண்டுபிடித்து இருக்குமிடத்தை காவல்துறையினருக்கு காட்டிக்கொடுத்தது. உடனடியாக அப்பகுதிக்கு விரைந்த காவல்துறையினர் தேடுதல் எதுவுமின்றி அத்திருடனைக் கைது செய்தனர். ஆளில்லாத உலங்குவானூர்தியின் உதவியுடன் திருடன் ஒருவர் கைது செய்யப்பட்டிருப்பது பிரித்தானியாவில் இதுவே முதல் தடவை என்பது குறிப்பிடத்தக்கது.

# மலேசியாவில் முதன் முறையாக பெண்களுக்கு கசையடி

மலேசியாவில், வழக்கமான சிவில் சட்டத்துடன் இஸ்லாமிய மத சட்ட விதிகளும் (ஷரியா) நடைமுறையில் உள்ளன. அதன்படி, பீர் அருந்திய குற்றத்துக்காக இரண்டு குழந்தைகளுக்கு தாயான கார்த்திகா என்ற பெண்ணுக்கு கசையடி வழங்க தீர்ப்பளிக்கப்பட்டது. சர்வதேச அளவில் கடுமையான விமர்சனம் எழுந்ததால் அந்த தண்டனை இன்னும் நிறை வேற்றப்படவில்லை. இந்த சூழ்நிலையில், முறைகேடாக உறவு வைத்திருந்த 3 பெண்களுக்கு கசையடி தண்டனை நிறைவேற்றப்பட்டிருக்கிறது. மலேசியாவில், இஸ்லாமிய சட்டப்படி பெண்களுக்கு கசையடி வழங்கப்பட்ட முதல் தண்டனை இது என்பது குறிப்பிடத்தக்கது. இஸ்லாமிய மத நீதிமன்றத்தில் நடந்த விசாரணையில், அந்த பெண்களின் மீதான குற்றம் நிரூபிக்கப்பட்டதால் கசையடி தண்டனை விதிக்கப்பட்டது. அந்த மூன்று பெண்களில் இரண்டு பேருக்கு தலா 6 கசையடி வழங்கப்பட்டது.

இந்நிலையில், தகாத உறவு கொண்ட குற்றத்துக்காக மூன்று பெண்கள் மற்றும் நான்கு ஆண்களுக்கு கசையடி வழங்கப்பட்டுள்ளதாக உள்துறை அமைச்சர் ஹிஷாமுதீன் ஹுசைன் கோலாலம்பூரில் செய்தியாளர்களிடம் தெரிவித்தார். இந்த கசையடி தண்டனை கடந்த 9ம் திகதியே வழங்கப்பட்டுவிட்டது. இத்தனை நாள் நிதானித்து இதனை அரசு அறிவித்துள்ளது.

திருமணமான மூன்று பெண்கள் முறை தவறி மற்ற வேற்று ஆண்களுடன் உறவு கொண்டதால் அந்த பெண்களுக்கும், அவர்களுடன் தொடர்புடைய நான்கு ஆண்களுக்கும் இந்த தண்டனையை கோலாலம்பூரில் உள்ள ஷரியா நீதிமன்றம் விதித்து தீர்ப்பளித்ததாக அமைச்சர் கூறினார். தண்டனை பெற்ற பெண்களின் விவரங்களை தெரிவிக்க அமைச்சர் மறுத்துவிட்டார். ஆண்களும், பெண்களும் தனித்தனியாக சிறைச்சாலைகளில் வைக்கப்பட்டு கசையடி கொடுக்கப்பட்டதாகவும், அப்போது மருத்துவர் ஒருவர் உடன் இருந்தார் என்றும் அமைச்சர் கூறினார்.

பெண்களுக்கு நான்கு கசையடியும், ஆண்களுக்கு ஆறு கசையடியும் தரப்பட்டதாகக் கூறிய அமைச்சர், இந்த தண்டனையால் அவர்களை காயப்படுத்த வேண்டும் என்பது நோக்கமல்ல. இதைப்பார்க்கும் மற்ற பெண்கள் இது போன்ற குற்றங்களில் ஈடுபடக் கூடாது என்பதற்காகவே இந்த தண்டனை நிறைவேற்றப்படுகிறது என்றார்.

இதேவேளை, ஒரே நேரத்தில் 6 பேரை கல்யாணம் செய்த 56 வயது சவூதி நாட்டவருக்கு 120 கசையடிகளை வழங்க அந்த நாட்டு நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது. சவூதி அரேபியாவின் ஜிஸான் பிராந்தியத்தில் உள்ள அல் மஷாஹ்ஹா பகுதியைச் சேர்ந்தவர் இவர். அரசு நிறுவனம் ஒன்றில் பணியாற்றி வந்தார். இவர் சமீபத்தில் ஒரே நேரத்தில் 6 பெண்களை மணந்து பரபரப்பை ஏற்படுத்தினார். இதையடுத்து அவர் கைது செய்யப்பட்டார். அல் மஷாஹ்ஹா நீதிமன்றம் இவர் மீதான வழக்கை விசாரித்து, ஒரே நேரத்தில் 6 கல்யாணம் செய்ததற்காக ஒரு மனைவிக்கு 20 கசையடிகள் வீதம் மொத்தம் 120 கசையடிகளை இவருக்குத் தண்டனையாக வழங்கி தீர்ப்பளித்தது. மேலும், திருக்குரானின் 2 அதிகாரங்களை இவர் மனப்பாடம் செய்து சொல்ல வேண்டும் என்பதும் தண்டனையின் ஒரு பகுதியாகும். இதுதவிர ஐந்து ஆண்டுகளுக்கு வெளிநாடு போகவும் இவருக்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. இது போக, மசூதிகளில் நடைபெறும் முக்கியத் தொழுகை நிகழ்ச்சிகளில் இவர் தவறாமல் கலந்து கொள்ள வேண்டும் என்றும் தண்டனையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# புலியை வேட்டையாடிய மாடு!



புலிதான் மாட்டை வேட்டையாடும். ஆனால், மாடு ஒன்று புலியை வேட்டையாடியுள்ளது. நடந்தது சீனாவில்.

சீனாவின் சாங்சோவ் நகரில் உள்ள மிருகக்காட்சிசாலையில் உள்ள 15 வயது தாங் பாய் ஹூ என்ற வெள்ளைப் புலிக்கு இரையாக கூண்டுக்குள் காளை மாடு ஒன்றை உயிருடன் விட்டனர். புலியின் வேட்டையாடும் தன்மையை மறக்காமல் இருப்பதற்காக உயிருடன் உணவு அனுப்பி வைக்கப்படுவது வழமை. மாட்டைக் கண்ட புலி அதனை வீழ்த்த வேகமாக நெருங்கியது. ஆனால் காளை முந்திக் கொண்டு புலியை தூக்கி வீசியது. 2வது தடவையாக புலி முயன்றபோதும், அதே கதைதான். ஒரு கட்டத்தில் புலியை கவிழ்த்த காளை அதன் முதுகையும் கடித்து குதற ஆரம்பித்தது. மிருக காட்சி சாலையை பார்க்க வந்தவர்கள் இந்த வினோத காட்சியைக் கண்டு அதிர்ச்சியடைந்தனர். சிலர் அந்த அரிய காட்சியை தமது கமெராவிற்குள் அடக்கிக்கொண்டனர். இதற்கிடையே புலியை மீட்க களத்தில் குதித்த மிருக காட்சிசாலை நிர்வாகிகள், மாட்டிடம் போராடி அதனை மீட்டனர். புலிக்கு எப்போதும் நாங்கள் மாட்டிறைச்சி அல்லது கோழிகளைத்தான் போடுவோம். இதனால் புலிக்கு வேட்டையாடும் திறனே மறந்து போய் விட்டது. எனினும் விரைவில் புலியிடம் வேட்டைத் திறனை கொண்டு வந்து விடுவோம் என்கிறார்கள், நம்பிக்கையுடன்!

# அமெரிக்க குண்டு நடிகரை விமானத்தில் ஏற்ற மறுப்பு



அண்மையில் குண்டானவர்கள் விமானத்தில் பயணிக்கும்போது இரண்டு பயணச் சீட்டுக்கள் எடுக்க வேண்டும் என்பது குறித்து தகவலை வழங்கியிருந்தோம். இரண்டு பயணச் சீட்டு எடுக்காத ஒருவர் விமானத்தில் பயணம் செய்ய தடை விதிக்கப்பட்ட நிகழ்வு அமெரிக்காவில் இடம்பெற்றுள்ளது. கலிபோர்னியா மாநிலத்தை சேர்ந்தவர் நடிகரும் இயக்குநருமான கெவின் ஸ்மித். இவர் பருத்த உடலை உடையவர். ஓக்லாந்தில் இருந்து பர்பாங்க் நகருக்கு செல்வதற்காக ஒரு விமானத்தில் ஒரு பயணச்சீட்டு எடுத்திருந்தார். மிகவும் குண்டாக இருப்பதால் நீங்கள் இரண்டு பயணச்சீட்டு எடுக்கவேண்டும் என்று விமான சிப்பந்திகள் வலியுறுத்தினார்கள். அதற்கு அவர் மறுத்துவிட்டார். ஆனால் ஒரு பயணச்சீட்டில் அவரை விமானத்தில் ஏற்ற விமானிகள் மறுத்து விட்டனர். ஒரு இருக்கையில் என்னால் உட்கார முடியும், எப்படியாவது சரி செய்து அமர்ந்துகொள்கிறேன் என கெவின் கூறியும் அதிகாரிகள் ஒப்புக்கொள்ளாமல் அவர் விமானத்தில் இருந்து வெளியேற்றிவிட்டனர். இதனால் வெறுப்படைந்த கெவின் விமான நிலையத்தில் பெரும் போராட்டமே நடத்தியிருக்கிறார். அதன் பின்னர் சம்மந்தப்பட்ட அதிகாரிகள் கெவினை வேறு விமானத்தின் மூலம் அனுப்பி வைத்துள்ளனர். பயணிக்கு அசௌகரியம் ஏற்படுத்தி விட்டதற்காக வருத்தம் தெரிவித்துள்ள விமான சேவை நிர்வாகம், குறிப்பிட்ட அளவுக்கு அதிகமாக உடல் எடை கொண்டவர்களுக்கு இரண்டு பணச்சீட்டு என்ற விதிமுறை 20 ஆண்டுகளாக எங்கள் நிறுவனத்தில் உள்ளது. மேலும், உடல் பருமனாக உள்ள பயணிகள், பொருந்தாத இருக்கையில் அமர்ந்து அவஸ்தை படக்கூடாது என்பதை கருத்தில் கொண்டு தான் கூடுதல் இருக்கை பெற்றுக்கொள்ள அறிவுறுத்துகிறோம் என்றும் சுட்டிக்காட்டியுள்ளது.

## 6,284 விதமான நோய்களால் பாதிக்கப்படும் மனிதன்!

சராசரி மனிதனுக்கு அவன் வாழ்நாளில் எத்தனை விதமான நோய்கள் ஏற்படும் என்பது குறித்து ஒரு ஆய்வு நடத்தப்பட்டது. இதில் அவனுக்கு சளி, தலைவலி, முதுகுவலி, சுளுக்கு என்று 6,284 விதமான நோய்கள் ஏற்படுகின்றன என்பது தெரியவந்தது. இதுதொடர்பாக ஆக்டிவ் கோட் இணையதளம் ஒரு ஆய்வு நடத்தியது. இந்த இணையதளம் பிரித்தானிய வாழ் 3 ஆயிரம் பேரிடம் ஆய்வு நடத்தியது. இதில் சராசரியாக ஒரு பிரித்தானியர் ஆண்டுக்கு 80 விதமான சிறு சிறு நோய்களால் பாதிக்கப்படுகிறார். ஆண்டுக்கு 21 நாட்கள் வலி நிவாரண மருந்து எடுத்துக்கொள்கிறார். அல்லது தன் வாழ்நாளில் 1,649 நாட்கள் எடுத்துக்கொள்கிறார். சுளுக்கு தான் அதிகமாக பாதிக்கிறது. இது ஆண்டுக்கு 19 முறை மனிதனை தாக்குகிறது. தலைவலி ஆண்டுக்கு 16 முறை தாக்குகிறது. 3வது அதிகமாக தாக்கும் நோய் முதுகுவலி. இது ஆண்டுக்கு 14 முறை தாக்குகிறது என்ற அந்த ஆய்வில் தெரிவிக்கப்பட்டுள்ளது.




# கனடா தமிழீழச் சங்கம்

## The Tamil Eelam Society of Canada

## பல்கலாச்சார குடியமர்வுச் சேவைகள்

## TESOC Multicultural Settlement Services

1160 Birchmount Road, Unit 1A, Scarborough, ON M1P 2B8
Tel: (416) 757 6043 Fax: (416) 757 6851

(இச்சேவைகள் அனைத்தும் இலவசம்)

***பின்வரும் மொழிகளில் குடியமர்வுச் சேவைகள் வழங்கப்படுகின்றன.***
***தமிழ், சிங்களம், பிரெஞ்சு, துருக்கி, அரபு, உருசியா, அயபையானி, தாரி, ஆப்கான்.***

(குடியமர்வுப் பணிகள்)

★ பொறுப்பேற்றல் விண்ணப்பம்.
★ நிரந்தர வதிவுரிமை அட்டைவிண்ணப்பம்.
★ குடியுரிமை விண்ணப்பம்.
★ வேலை ஒப்ப விண்ணப்பம்.
★ ஆங்கிலத்துக்கு மொழிபெயர்ப்பு (மூலப்பிரதிகள் மட்டும்)
★ குடியமர்வு அறிவுரை வழங்கல் வழிகாட்டல்
★ தொண்டர் பணிக்கு அமர்த்தல்
★ சமூகநலக் கொடுப்பனவுகள் பெறுவதில் உதவி செய்தல்
★ பரிந்துரை
★ வீட்டுவசதி

**நீங்கள் கனடாவுக்குப் புதியவரா? உங்கள் ஆங்கில அறிவையும் பேச்சுத் திறனையும் வளர்க்க விரும்புகிறீர்களா? கனடாவைப் பற்றிய அறிவைச் செலவின்றி வளர்க்க விரும்புகிறீர்களா?**

**LINC வகுப்புகள்**

★ புதிய குடிவரவாளருக்கான ஆங்கில வகுப்புகள தரம்1-2-3-4-5
★ தொடர்பு மொழித்திறன், கேட்டல், பேசுதல்- தரம் 3 - 4
★ உயர்நிலைத் தொடர்பு மொழித்திறன்- தரம் 5 - 6
★ முதியோார் - தரம் 1 - 2 - 3

**பிள்ளை பராமரிப்புச் சேவை உண்டு.**
***(6 மாதத்திலிருந்து 6 வயது வரையிலானோர் அனுமதிக்கப்படுவர்)***

### வேலை தேடல்

நீங்கள் கனடாவில் நிரந்தர வதிவுரிமையாளார் அகதிக்கோரிக்கை ஏற்றுக் கொள்ளப் பெற்றவர் அல்லது அமைச்சரின் அனுமதிச்சான்று வைத்திருப்பவராயின் எம்மோடு தொடர்பு கொள்ளலாம்.

**நாங்கள் எவ்வாறு உதவுகின்றோம்**

★ வேலை பெற்றுக் கொடுத்தல்.
★ வேலை வாய்ப்புத் தொடர்பான
★ அறிவுரை வழங்குதல்.
★ தன்விவரக்குறிப்புத் (Resume) தயாரித்துக் கொடுத்தல்.
★ நேர்முகத் தேர்வுக்கு (Interview) ஒழுங்கு செய்தல்.
★ வேலைபெறத் தொடர்ச்சியான ஆதரவு அளித்தல்

எம்மூலம் வேலை தேடும் பயிற்சியும் வேலையும் பெற்றோர் பலர் ஆவர். தொழிற்சாலை, அலுவலகம், தொழில்நுட்பம், நிருவாகம், கணக்கியல் சார்ந்த வேலை எதுவாயினும் எம்மை அழையுங்கள்.

**சேவை பெற வருவோர் தயவு செய்து தமது ஆவணங்களின் மூலப்படிகளை எடுத்து வருவதோடு, முன்நேரம் குறித்து வருமாறும் கேட்டுக் கொள்கிறோம்.**

### குடும்ப அறிவுரை

சேவை வேண்டுவோருக்குப் புதன்கிழமை முதல் வெள்ளிக்கிழமை வரை குடும்ப அறிவுரையாளர் சேவை புரிவார்.
***(தனிப்பட்ட விடயங்கள் பாதுகாக்கப்படும்.)***

**பெண்களுக்கு உதவும் பெண்கள் நிகழ்ச்சித் திட்டம்**




இந்த நிகழ்ச்சி திட்டத்தின் குறிக்கோள் தமிழ்ப் பெண்களை கனடியச் சமுதாயத்தில் இணையச் செய்ய உதவுதல் ஆகும். இக்குறிக்கோளை அடைய வழங்கப்படும் உதவிகள்:

★ பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
★ சமூக வளங்களை திறமையோடு பயன்படுத்துவதற்கான அறிவுரை வழங்கல்
★ பெண்களுக்கு ஒரு வலைப்பின்னல் தொடர்பை ஏற்படுத்தி உள ஆதரவு வழங்கல்

**கூடுதல் விவரங்களுக்கு:**
**(416) 757-6043**




1160 Birchmount Road – Unit 1A

*அவுஸ்திரேலியா*

## மகள் மீது வல்லுறவு கொண்டு 4 பிள்ளைகளுக்கு தந்தையானவருக்கு 22 ஆண்டு சிறை

ஆஸ்திரேலியாவின் விக்டோரியா மாநிலத்தை சேர்ந்த தந்தையொருவர் தனது மகள் மீது பாலியல் வல்லுறவு புரிந்து அதன் மூலம் நான்கு குழந்தைகளை பெற்றுக்கொள்ள காரணமான தந்தை ஒருவருக்கு 22 ஆண்டுகால சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

1977ம் ஆண்டு 12 வயதில் தன் மகள் பருவமடைந்ததில் இருந்து அவளிடம் தவறாக நடந்து கொண்ட இவர், அது முதல் அவளை தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்து 30 ஆண்டுகளாக தவறான உறவு வைத்துக்கொண்டிருந்துள்ளார். இதனால் அந்த பெண்ணுக்கு 4 குழந்தைகள் பிறந்துள்ளன. அவரிடம் இருந்து 2005ம் ஆண்டு தப்பித்து வந்த அந்த பெண், சமூக சேவையாளர்கள் மூலம் நீதிமன்றில் தந்தை மீது வழக்கு தொடர்ந்தார். 66 வயதான அவருக்கு நீதிமன்றம் கடந்த வாரம் குற்றச்சாட்டு நிருபிக்கப்பட்ட நிலையில் 22 ஆண்டுகளும் ஐந்து மாதங்களும் சிறைத் தண்டனை விதித்தது.

*பிரித்தானியா*

## வரிசையில் நிற்கத் தெரியாதவர்களுக்கு குடியுரிமை இல்லை

பிரித்தானியாவில் நிரந்தரமாக குடியேற விரும்பும் வெளிநாட்டவர்கள் முதலில் வரிசையில் நிற்க கற்றுக் கொள்ள வேண்டியது அவசியம் என பிரித்தானிய அரசு வலியுறுத்தியுள்ளது. இதுகுறித்த அம்சங்களை குடியுரிமை தேர்வில் சேர்க்க அந்நாட்டு அரசு முடிவு செய்துள்ளது.

பிரித்தானியாவில் நிரந்தரமாக தங்குவதற்கு திட்டமிட்டுள்ளவர்கள் அந்நாட்டு பழக்கவழக்கங்களை தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். குறிப்பாக, எந்த ஒரு சேவையைப் பெறுவதாக இருந்தாலும் முதலில் வரிசையில் நிற்க கற்றுக்கொள்ள வேண்டும். உணவகமாக இருந்தாலும், பேருந்தில் ஏறுவதாக இருந்தாலும் தமது நாட்டைப் போல முண்டியடித்துக் கொண்டு ஓடக்கூடாது. முன்னுரிமை அடிப்படையில் வரிசையாக செல்ல கற்றுக்கொள்ள வேண்டும் என பிரித்தானிய அரசு வலியுறுத்தியுள்ளது.



நிரந்தர குடியுரிமை கோரி விண்ணப்பிக்கும் வெளிநாட்டவர்களுக்கு அந்நாட்டு அரசு குடியுரிமை தேர்வை நடத்தி வருகிறது. இந்த முறை முன்னாள் உள்துறை செயலாளர் டேவிட் பிளங்கெட் என்பவரால் நடைமுறைப்படுத்தப்பட்டது. பிரித்தானியா வாழ்க்கை முறை, அரசியல், பொப் இசை என பல அம்சங்கள் இதில் இடம்பெறும். இந்தத்தேர்வில், எந்த ஒரு சேவையைப் பெறுவதற்கும் வரிசையில் நின்று செல்வது தொடர்பான கேள்விகளும் இனி சேர்க்கப்படும் என பிரித்தானியா அரசு அறிவித்துள்ளது. இந்த தேர்வு நாடு முழுவதும் 90 மையங்களில் 45 நிமிடங்கள் நடைபெறுகிறது.

வெளிநாட்டவர்களில் பெரும்பாலானவர்கள் ஒழுக்கத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இங்கு வந்து குடியேறிய பிறகும், அவர்கள் தங்கள் நாட்டு வழக்கப்படி எந்த ஒரு சேவையைப் பெறுவதற்கும் பொறுமை இல்லாமல் அடாவடித்தனமாக நடந்து கொள்கின்றனர். இதனால் தேவையற்ற உணர்ச்சிக் கொந்தளிப்பும், காத்திருப்பவர்களுக்கு மன உளைச்சலும் ஏற்படுகிறது. இதைக் குறைப்பதற்காகவே இந்த நடவடிக்கை என ஒரு முன்னணி பத்திரிகை செய்தி வெளியிட்டுள்ளது. எந்த ஒரு சேவையைப் பெறுவதற்கும் வரிசையில் நின்று செல்ல வேண்டும் என்பது சின்ன விடயமாக தோன்றலாம். ஆனால், அதுதான் ஒழுக்கத்தின் அடிப்படை. இதை ஒவ்வொருவரும் தாங்களாகவே உணர வேண்டும். இதன்மூலம் மற்றவர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்கப்படும்" என பிரித்தானியா குடியேற்றத் துறை அமைச்சர் பில் ஊலஸ் கூறியுள்ளார்.

*பங்களாதேஷ்*

## 411 பேருக்குத் தூக்குதண்டனை நிறைவேற்றம்

பாகிஸ்தானிடம் இருந்து 1971ம் ஆண்டு பங்களாதேஷ் சுதந்திரம் பெற்ற நாளில் இருந்து இதுவரை பல்வேறு குற்றங்களுக்காக அங்கு 411 பேருக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டுள்ளது. பல்வேறு குற்றங்களுக்காக 1000 பேருக்கு மேல் மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளபோதும், இதுவரை 411 பேருக்கு தண்டனை நிறைவேற்றப்பட்டதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

பங்களாதேசுக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த ஷேக்முஜிபுர் ரஹ்மானை கொலை செய்த குற்றச்சாட்டில் கடந்த மாதம் முன்னாள் இராணுவ அதிகாரிகள் 5 பேர் தூக்கிலிடப்பட்டனர். இந்தத் தகவலை பங்களாதேஷ் சிறைத்துறையின் தலைமை துணை அதிகாரி கோலம் ஹைதர் தெரிவித்துள்ளார். இவர்கள் தவிர, 36 பெண்களுக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டுள்ளது. ஆனால் அவர்கள் தூக்கிலிடப்படவில்லை. வேறு விதங்களில் தண்டனை நிறைவேற்றப்பட்டதாக சிறைச்சாலை வட்டாரங்கள் தெரிவித்தன.

இதுஇவ்வாறிருக்க, வங்காளதேசத்தின் முன்னாள் ஜனாதிபதி ஷேக்முஜிபுர் ரஹ்மான் பெயரில் உள்ள அனைத்து கட்டடங்களுக்கும் புதிய பெயர்கள் சூட்டுவது என்று அந்த நாட்டு அரசாங்கம் முடிவு செய்து உள்ளது. இப்போதைய எதிர்க்கட்சி தலைவரான கலீதா ஜியாவின் கணவர் தான் ஷேக்முஜிபுர் ரஹ்மான். இவர் தான் வங்காளதேச தேசியவாத கட்சியை தொடங்கினார். இப்போது அந்த கட்சிக்கு கலீதா ஜியா தான் தலைவராக இருக்கிறார். இராணுவத் தளபதியாக இருந்த ரகுமான் அரசியல்வாதியாக மாறினார். டாக்கா விமான நிலையத்துக்கு ரகுமான் பெயர்தான் சூட்டப்பட்டு இருந்தது. இதை அமைச்சரவை கூடி மாற்றுவது என்று முடிவு எடுத்தது. அதன்படி அவர் பெயருக்கு பதிலாக ஆன்மிக பெரியவர் ஹசரத் ஷாஜலால் பெயர் சூட்டப்பட்டது. சட்டத்துக்கு புறம்பாக ஆட்சியை பிடித்த சர்வாதிகாரி ஷேக் முஜிபுர் ரஹ்மான் பெயரில் எந்த கட்டடங்களும் இருக்கக் கூடாது என்று பிரதமர் ஷேக் ஹசீனா தெரிவித்தார். இதற்கு வங்காளதேச தேசியவாத கட்சி கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

*பிரேசில்*

## 7 வயது சிறுமி சம்பா நடனம் ஆட நீதிமன்றம் அனுமதி

பிரேசில் நாட்டின் பாரம்பரிய விழாவான ரியோ களியாட்ட நிகழ்ச்சியில் 7 வயதேயான ஜலியா லிரா என்ற சிறுமி கவர்ச்சிமிகு சம்பா நடனம் ஆட பிரேசில் நாட்டு நீதிமன்றம் அனுமதி அளித்தது. பிரேசில் நாட்டின் பாரம்பரிய கவர்ச்சிகரமான நடனம் சம்பா. பல மணி நேரம் கூட தொடர்ந்து இந்த நடனத்தை பெண்கள் ஆடுவர். ரியோ களியாட்ட நிகழ்ச்சியில்



சிறப்பாக நடனம் ஆடும் பெண்ணைத் தேர்வு செய்து அவருக்கு சம்பா ராணி என்ற பட்டம் சூட்டப்படும். இந்த ஆண்டு நிகழ்ச்சியில் 7 வயதேயான ஜலியாவும் ஆட முடிவு செய்தார். ஆனால் இதற்கு சிறுவர் உரிமை அமைப்பு ஒன்று எதிர்ப்பு தெரிவித்து வழக்குத் தொடர்ந்தது. சம்பா நடனம் ஆடும் அளவுக்கு இந்த சிறுமிக்கு வயது போதாது. மேலும் தொடர்ந்து பல மணி நேரம் ஆடினால் அவரது உடல் நலம் பாதிக்கப்படும். எனவே இதை அனுமதிக்கக் கூடாது என்று அந்த அமைப்பு கோரியது. இதை விசாரித்த நீதிபதி, அந்தக் கோரிக்கையை நிராகரித்தார். சிறுமி ஜலியா தாராளமாக சம்பா நடனம் ஆடலாம் என்று அறிவித்தார். இதுகுறித்து ஜலியாவின் தந்தை மார்கோ லிரா கூறுகையில், எனது மகளின் உடல் நலம் குறித்து தேவையில்லாமல் மிகைப் படுத்திப் பேசுகிறார்கள். அவள் ஒரு முழுமையான நடனக்காரி. அதில் எங்களுக்குச் சந்தேகம் இல்லை என்றார். அவரது கருத்துப் போலவே கடந்த ஞாயிறன்று நடந்த களியாட்ட நிகழ்வில் பெரும் பாராட்டைப் பெற்றார் ஜலியா லிரா.

*நியூசிலாந்து*

## மனிதர்களை விட அதிகமாக மாடுகள்

உலகின் பால் மா தேவையின் பெரும் பங்கை பூர்த்தி செய்யும் நாடான நியூசிலாந்தில் மனிதர்களை விட மாடுகளின் எண்ணிக்கை அதிகம் எனக் கணிப்பிடப்பட்டுள்ளது. 2009ம் ஆண்டு யூன் மாதம் எடுத்த கணக்கெடுப்பில் 58 இலட்சம் பசுமாடுகள் இருப்பது தெரியவந்துள்ளது. தற்போது அந்த நாட்டு மொத்த மக்கள் தொகை 43 இலட்சம் என்று கண்டறியப்பட்டுள்ளது. மாடுகளின் எண்ணிக்கை அதிகரித்து



இருப்பதற்கு மாட்டு பண்ணைகள் இலாபகரமாக இயங்குவது தான் காரணம் என்று கூறப்படுகின்றது. பால் சார்ந்த ஏராளமான பொருட்கள் உலகெங்கும் ஏற்றுமதி செய்யப்படுவதால் அது இலாபகரமாக இயங்குகின்றது. அதனால் ஆடு முதலிய மிருகங்களை வளர்த்தவர்கள் அதை கைவிட்டு விட்டு மாடு வளர்க்க தொடங்கி உள்ளமையாலும் இந்த அதிகரிப்பு ஏற்பட்டுள்ளதாக கூறப்படுகின்றது.

*அமெரிக்கா*

## பாகிஸ்தான் நிலைமை கவலை அளிப்பதாக தெரிவிப்பு

பாகிஸ்தான் நிலைமை கவலை அளிக்கிறது என்று அமெரிக்க துணை ஜனாதிபதி ஜோ பிடேன் தெரிவித்துள்ளார். ஜோ பிடேன் அமெரிக்க தொலைக்காட்சி ஒன்றுக்கு அளித்த பேட்டியில் கூறி இருப்பதாவது,

எங்களின் கவலை எல்லாம் ஆப்கானிஸ்தானை பற்றியோ அல்லது ஈராக்கை பற்றியோ அல்ல. பாகிஸ்தானை குறித்து தான். அந்த நாட்டு மக்களில் ஒரு பகுதியினர் தீவிரவாதத்துக்கு ஆதரவாளர்களாகவும், தீவிரவாதிகளாகவும் இருக்கிறார்கள். அங்கு ஜனநாயகம் என்பது பெயரளவுக்கு தான் இருக்கிறது. அது ஒரு அணுசக்தி நாடு ஆகும். அதன் அணுசக்தி ஆயுதங்களை எந்த நேரத்தில் வேண்டுமானாலும் பயன்படுத்த முடியும்.

ஈரானின் அணுஆயுத திட்டம், கவலை அளிக்கக்கூடியது. ஈரான் இந்த திட்டத்தில் வெற்றி பெற்றால், இதை பார்த்து விட்டு, சவுதி அரேபியா, எகிப்து, துருக்கி ஆகிய நாடுகளுக்கும் அணு ஆயுத ஆசை ஏற்படலாம். இவை உலக அமைதிக்கு ஊறுவிளைவிக்கக்கூடியவை. அல்-ஹைடா அமெரிக்கா மீது தாக்குதல் நடத்தலாம் என்று உளவுத்துறை எச்சரித்துள்ளது. தாக்குதல் நடத்தலாம். ஆனால் அது 2001ம் ஆண்டு செப்டம்பர் 11ம் திகதி நடத்தியது போன்ற பெரிய அளவிலான தாக்குதலாக இருக்காது என்பது என் கணிப்பு. இனிமேல் அது போன்ற தாக்குதல்களை நடத்துவதற்கான வாய்ப்புகள் அதிகம் இல்லை. எனவே அப்படி பெரிய அளவிலான தாக்குதலை அது நடத்தாது என்று நான் கருதுகிறேன். அது

சிறிய அளவில் தான் இனிமேல் தாக்குதல் நடத்தும். அந்த தாக்குதல் அழிவு ரீதியாக இருக்காது. மிரட்டல் அளவில் தான் இருக்கும். நத்தார் தினத்தன்று டெக்சஸ் நகருக்கு வந்த விமானத்தில் தாக்குதல் நடத்த அப்துல் முத்தலிப் என்ற தீவிரவாதி முயன்றது போன்றது மாதிரியான தாக்குதல்கள் தான் இனிமேல் நடக்கும்.

ஈராக்கில் போர் முடிவுக்கு வந்து விட்டது. அங்கு தீவிர வாதத்தை ஒழித்தது அமெரிக்க நிர்வாகத்தின் சாதனை ஆகும். ஈராக்கில் நிலையான ஆட்சி அமைந்துள்ளது. அங்கு முன்னேற்ற பணிகள் அதிவேக அளவில் நடக்கின்றன என்று ஜோ பிடேன் கூறினார்.

*தென்னாபிரிக்கா*

## நெல்சன் மண்டேலாவுக்கு உலகத் தலைவர்கள் வாழ்த்து

தென்னாபிரிக்க தலைவர் நெல்சன் மண்டேலாவை உலகத் தலைவர்கள் வாழ்த்தியுள்ளனர். நெல்சன் மண்டேலா (91 வயது) சிறையில் இருந்து விடுதலையான 20ம் ஆண்டு விழாவை கொண்டாடி வருகிறார்கள். இந்நிலையில் அவரை உலகத் தலைவர்கள் பலர் நேரிலும், தொலைபேசி ஊடாகவும் வாழ்த்தி வருகின்றார்கள்.



மண்டேலாவின் விடுதலை விழாவை முன்னிட்டு அமெரிக்க அதிபர் பராக் ஒபாமா கடந்த சனிக்கிழமை தொலைபேசியூடாகத் தொடர்புகொண்டு தனது வாழ்த்துக்களை தெரிவித்துள்ளார். இதுகுறித்து வெள்ளை மாளிகையின் ஊடகத்துறைச் செயலர் ரொபர்ட் கிப்ஸ் கூறுகையில், தென் ஆபிரிக்க நாட்டின் தலைவர் நெல்சன் மண்டேலாவின் விடுதலை தினத்தை அமெரிக்க மக்களும் மகிழ்ச்சியோடு கொண்டாடி வரவேற்பதாக ஒபாமா தெரிவித்தார் என்றார் ரொபர்ட் கிப்ஸ். தென் ஆப்பிரிக்காவில் நிலவிய இனவெறியை எதிர்த்து போராடிய நெல்சன் மண்டேலா, 27 ஆண்டுகள் சிறைதண்டனைக்கு பின்னர் 1990ம் ஆண்டில் விடுதலையாகி, தேர்தலில் நின்று வெற்றிபெற்று அந்நாட்டின் அதிபராகவும் பதவி வகித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

*பாகிஸ்தான்*

## அதிபர் தேர்தலில் மீண்டும் போட்டியிட முஷாரப் விருப்பம்



மீண்டும் அதிபர் தேர்தலில் போட்டியிட விரும்புகிறேன் என்று பாகிஸ்தான் முன்னாள் அதிபர் முஷாரப் தெரிவித்துள்ளார். பாகிஸ்தானைவிட்டு வெளியேறி கடந்த 10 மாதங்களாக இலண்டனில் தஞ்சம் அடைந்துள்ள முஷாரப், கடந்த திங்கள் கிழமை செய்தியாளர்களை சந்தித்த போது இதைத் தெரிவித்தார்.

முஷாரப், பாகிஸ்தானுக்கு திரும்ப விரும்புகிறார். அதைத்

(33ம் பக்கம் பார்க்க)

*ஈரான்*

# அணு ஆயுத வல்லரசாக மாறும் நிலை சர்வதேச நாடுகள் அதிர்ச்சி – தடைகளை விதிக்கவும் தீர்மானம்

மின்சாரத் தேவைக்காகத்தான் யூரேனியம் செறிவூட்டுவதாக கூறிவந்த ஈரான் தற்போது அணு ஆயுதம் தயாரிப்பதற்குத்தான் என்பதை ஒத்துக்கொண்டுள்ளது. செறிவூட்டப்பட்ட முதல் தொகுதி யுரேனியத்தை தயாரித்து விட்டோம். இனி நாங்களும் அணு ஆயுத நாடுதான் என்று ஈரான் அதிபர் மகமூத் அகமதிநிஜாத் அறிவித்துள்ளார். உயர் ரக செறிவூட்டப்பட்ட (highly enriched uranium) யுரேனியுத்தை 2 நாட்களிலேயே தயாரித்துள்ளதாகவும் அகமதிநிஜாத் அறிவித்துள்ளார். அத்துடன், இஸ்ரேல் எங்களிடம் வாலாட்ட முயன்றால் அதை ஒன்றும் இல்லாமல் செய்து விடுவோம் என்றும் எச்சரித்துள்ளார்.

ஈரான் இஸ்லாமியக் குடியரசு உருவான தினம் தலைநகர் டெஹ்ரானில் கோலாகலமாக கொண்டாடப்பட்டது. இதில் கலந்து கொண்ட ஆயிரக்கணக்கான மக்கள் முன்பு அகமதிநிஜாத் இந்த பிரகடனத்தை வெளியிட்டார். அவர் பேசுகையில், ஈரான் இப்போது ஒரு அணு ஆயுத நாடாகும். 20 சதவீத எரிபொருளில், முதல் தொகுதி செறிவூட்டப்பட்ட யுரேனியத்தை நாம் தயாரித்து விட்டோம். அதை தற்போது விஞ்ஞானிகளிடம் கொடுத்துள்ளோம் என்றார்.



செறிவூட்டப்பட்ட யுரேனியத்தை அணு உலைகளில் எரிபொருளாக பயன்படுத்துவார்கள். அதேசமயம், இதை வைத்து அணுகுண்டுகளையும் தயாரிக்க முடியும் என்பது குறிப்பிடத்தக்கது. யுரேனியம் செறிவூட்டும் பணியை நிறுத்துமாறும், அதைத் தொடரக் கூடாது என்றும் அமெரிக்கா உள்ளிட்ட நாடுகள் கடுமையாக எச்சரித்துள்ளன. ஆனால் அதை ஈரான் நிராகரித்து விட்டது. தடை விதிப்போம் என்று ஐ.நா. விடுத்த மிரட்டலையும் அது புறக்கணித்து விட்டது. எங்களிடம் உள்ள அனைத்து யுரேனியத்தையும் செறிவூட்டும் பணியை தொடருவோம் என்றும் ஈரான் கூறியுள்ளது.

செறிவூட்டப்பட்ட யுரேனியம் தயாரிக்கப்பட்ட செய்தியை நாட்டு மக்களுக்கு அறிவித்த கையோடு சிரிய அதிபர் பாஷர் அல் அஸாத்தைத் தொடர்பு கொண்டு பேசினார் அகமதிநிஜாத். அவரிடம் பேசுகையில், ஜியோனிஸ்ட் ஆக்கிரமிப்பாளர்கள், காஸா மக்களிடமும், லெபனானின் ஹிஸ்புல்லாவிடமும் பட்ட தோல்விக்குப் பழி வாங்க ஈரான் மீது இராணுவ நடவடிக்கையில் ஈடுபடத் திட்டமிட்டுள்ளதாக நம்பகமான தகவல்கள் கிடைத்துள்ளன.

அது ஒரு முட்டாள்தனமான நடவடிக்கையாகவே அமையும். அதுபோல ஒரு தாக்குதல் நடந்தால், அதை நாங்கள் கடுமையாக எதிர்ப்போம். நீங்களும் எதிர்க்க வேண்டும். அவர்கள் வைத்துள்ள இஸ்ரேல் என்ற பெயரிலான நாடே இல்லாத அளவுக்கு, அடையாளம் தெரியாத அளவுக்கு அதை அழித்து உருக்குலைத்து விடுவோம். அத்தோடு ஜியோனிஸ்டுகளின் பிரச்சினைக்கு நிரந்தர முடிவு கட்டி விடுவோம்.

சிரியா, லெபனான், பாலஸ்தீனம் ஆகியவற்றின் பக்கம் எப்போதும் ஈரான் துணை நிற்கும். விரைவில் ஜியோனிஸ்டுகள் அழிவது உறுதி என்றார் அகமதிநிஜாத். இஸ்ரேல் என்ற நாட்டை ஈரான் இதுவரை அங்கீகரிக்கவில்லை. அந்த நாட்டை ஜியோனிஸ்ட் ஆக்கிரமிப்பாளர்கள் என்றுதான் ஈரான் அழைத்து வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, ஈரான் நினைத்தால் 18 மாதங்களிலேயே ஒரு அணுகுண்டைத் தயாரிக்க முடியும். அத்தகைய திறமையை அது பெற்றுள்ளது என்று ஐரோப்பிய உளவு அமைப்புகள் தெரிவித்துள்ளன. யுரேனியத்தை சுத்தப்படுத்தி அதை ஆயுதத் தரத்துக்கு உருவாக்க 6 மாதம் தேவைப்படும். பிறகு அதை அணு ஆயுதமாக தயாரிக்க 12 மாதங்கள் தேவைப்படலாம் என்று அவர்கள் கணித்து இருக்கிறார்கள். ஏற்கனவே யுரேனியத்தை செறிவூட்டும் திறனை ஈரான் பெற்றுள்ளது. இந்தப் பணியை தொடர விடாமல் தடுத்தால்தான் ஈரானால் அணு ஆயுதங்களைத் தயாரிக்காமல் தடுக்க முடியும்.

இந்தப் பணியில் தற்போது அமெரிக்கா, பிரித்தானியா, பிரான்ஸ், ஜேர்மனி, ரஷ்யா, சீனா ஆகிய 6 நாடுகள் தீவிர முயற்சிகளில் ஈடுபட்டுள்ளன. ஈரானின் அணு ஆயுதத் தயாரிப்புத் திறன் என்ன என்பதைக் கண்டுபிடிக்க கடந்த சில ஆண்டுகளாகவே இந்த ஆறு நாடுகளின் உளவு அமைப்புகளும் தீவிர முயற்சியில் ஈடுபட்டுள்ளன. ஆனால் இதுவரை ஈரானின் திறன் என்ன என்பது குறித்து உறுதியான தகவல்கள் இவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஈரானிடம் அணு ஆயுதம் உள்ளதா, அதனால் தயாரிக்க முடியுமா என்பது குறித்து இந்த நாடுகளின் உளவு அமைப்புகளிடையே ஒருமித்த கருத்து இதுவரை இல்லை. இந்த நிலையில்தான் ஐரோப்பிய உளவு அமைப்புகள் சில, ஈரானால் 18 மாதங்களில் அணு குண்டு தயாரிக்க முடியும் என கிட்டத்தட்ட உறுதிபடச் சொல்லியுள்ளன.

அமெரிக்க தேசிய புலனாய்வு அமைப்பின் இயக்குநர் கூறுகையில், 2013ம் ஆண்டு வரை ஈரானால் அணு ஆயுதம் தயாரிக்க முடியாது. அதற்கான வாய்ப்பே இல்லை என்று கூறியிருந்தார். மொசாத் தலைவர் மெயர் டகான், 2014ம் ஆண்டு வரை ஈரானால் அணு ஆயுதம் தயாரிக்க முடியாது என உறுதியாக நம்புவதாக தெரிவித்திருந்தார். ஆனால் தற்போது வெளியாகியுள்ள 18 மாதத்தில் ஈரானால் அணு ஆயுதம் தயாரிக்க முடியும் என்ற புதிய வாதத்தை இஸ்ரேல் ஏற்றுக் கொண்டுள்ளதாக தெரிகிறது.

இதேவேளை, ஈரான் இராணுவ சர்வாதிகார நாடாக மாறிவருகிறது எனத் தான் நம்புவதாக அமெரிக்க அரசுத் துறைச் செயலர் ஹிலாரி கிளிண்டன் கூறியுள்ளார். ஈரானின் இதுபோன்ற செயல் ஒட்டுமொத்த சர்வதேச சமுதாயத்துக்கும் கோபத்தை ஏற்படுத்தியுள்ளது என்றும் அவர் கூறினார். வளைகுடா நாடுகளுக்கு சுற்றுப் பயணம் மேற்கொண்டுள்ள கிளிண்டன், 'அரசாங்க அதிகாரங்களை ஈரானின் புரட்சிப் படை அத்துமீறிக் கைப்பற்றிவரும் நிலை ஏற்பட்டுள்ளது. அப்புரட்சிப் படையை இலக்கு வைத்து ஈரான் மீது சர்வதேச தண்டனைத் தடைகள் விதிக்கப்பட வேண்டும்' என்றார். இதேவேளை, அமெரிக்கா தான் சர்வாதிகாரியாக இருந்து கொண்டு பிறர் மீது குற்றஞ்சாட்டுவதாக ஈரான் தெரிவித்துள்ளது. ஈராக்கிலும், ஆப்கானிலும் சண்டையிடுவதற்கு அமெரிக்காதான் வெளிநாட்டுக்கு நூற்றுக்கணக்கான படையினரை அனுப்பியது. எனினும் ஈரான் அவ்வாறு செய்யவில்லை என்று ஈரான் ஜனாதிபதி அஹ்மதிநிஜாத் கூறியுள்ளார், தமது நாட்டின் அணுத் திட்டத்துக்கு எதிரான புதிய தடைகளுக்கான அச்சுறுத்தல்களை நிராகரித்துப் பேசிய அவர், அத்தகைய நகர்வுகளினால் தமது நாடு பாதிக்கப்படாது என்றும் கூறினார்.

இதேவேளை, கூகுள் ஜிமெயில் சேவைக்கு ஈரான் அரசு திடீரென தடை விதித்துள்ளது. அதற்குப் பதில் அரசே ஒரு ஈமெயில் சேவையைத் தொடங்கப் போவதாக அறிவித்துள்ளது.

(33ம் பக்கம் பார்க்க)

தான் சூசகமாகத் தேர்தலில் போட்டியிட விரும்புவதாகத் தெரிவித்துள்ளார் என்று அரசியல் நோக்கர்கள் கூறியுள்ளனர். முஷாரப் மேலும் கூறியது, நான் எனது தேசத்தை நேசிக்கிறேன். என் தேசத்துக்காக எத்தகையத் தியாகத்தையும் செய்யத் தயாராக உள்ளேன். நான் அதிபர் தேர்தலில் மீண்டும் போட்டியிட விரும்புகிறேன். அப்போதே நாடு திரும்ப விரும்புகிறேன். அதிபர் தேர்தலில் யார் போட்டியிட விரும்பினாலும் தங்களை யார் ஆள வேண்டும் என்பதை மக்களே தீர்மானிக்க வேண்டும் என்றார் முஷாரப்.

1999ல் இராணுவ பதவியில் இருந்த போது ஆட்சியைக் கைப்பற்றியது பற்றி கேட்டதற்கு, என்னால் இப்போது எதுவும் செய்ய இயலாது. ஏனென்றால் தற்போது நான் ஒரு சாதாரண குடிமகன் என்றார். பாகிஸ்தான் நீதிமன்றங்களில் முஷாரபுக்கு எதிராக ஏராளமான வழக்குகள் நடந்து வருகின்றன. இதனால் அவர் பாகிஸ்தானுக்குத் திரும்பத் தயக்கம் காட்டி வருகிறார். இலண்டனில் தங்கியுள்ள முஷாரபுக்கு தீவிரவாதிகள் அச்சுறுத்தல் உள்ளதால் அவருக்கு கடும் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது.

இதுஇவ்வாறிருக்க, பாகிஸ்தானில் உள்ள ஐரோப்பிய நாடுகளின் தூதர்கள் அந்த நாட்டு பிரதமர் கிலானியை அவரது மாளிகையில் கடந்த வாரம் சந்தித்தனர். அப்போது அவர் அமெரிக்காவும் இந்தியாவும் சிவில் அணுசக்தி ஒப்பந்தம் செய்து கொண்டது போல, பாகிஸ்தானுடன் ஐரோப்பிய ஒன்றிய நாடுகள் ஒப்பந்தம் செய்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

*பெல்ஜியம்*

## வரலாற்றில் முதல் பெரும் தொடருந்து விபத்து – 18 பேர் பலி



பெல்ஜியத்தின் தலைநகர் பிரஸ்சல்ஸ் புறநகரில் இரு தொடருந்துகள் மோதிக் கொண்டதில் 18 பேர் பலியானதுடன், 162 பேர் படுகாயமடைந்தனர். பெல்ஜிய வரலாற்றில் அதிக சேதங்களை ஏற்படுத்திய முதல் பெரும் விபத்து இதுவெனத் தெரிவிக்கப்படுகின்றது. இதற்கு முன்னதாக 1974ம் ஆண்டு இடம்பெற்ற விபத்தில் 18 பேர் கொல்லப்பட்டதுடன், 48 பேர் காயமடைந்திருந்தனர்.



கடந்த திங்களன்று வேலை நாள் ஆரம்பித்திருந்த நிலையில், காலை 8.30 மணியளவில் இந்த சம்பவம் இடம் பெற்றுள்ளது. எதிரெதிர் திசையில் வந்த இரண்டு தொடருந்துகள் நேருக்கு நேர் மோதிக்கொண்டதில், பெட்டிகள் தூக்கியெறியப்பட்டன. இதனால், அருகிலுள்ள தண்டவாளங்களும் போக்குவரத்து செய்யமுடியாத நிலை ஏற்பட்டு, பிரஸ்சல்ஸ் - பரிஸ் மற்றும் இலண்டனுக்கான ஈரோ ஸ்டார் சேவைகளும் பாதிக்கப்பட்டன. தொடருந்துக்கான சிகப்பு விளக்கு சமிக்ஞை ஒன்றை கவனிக்காது ஒரு சாரதி தொடருந்தை தொடர்ந்து செலுத்திச் சென்றதாலேயே இந்தச் சம்பவம் இடம்பெற்றிருக்கலாம் என ஆரம்பகட்ட விசாரணைகள் தெரிவிக்கின்றன.

*கெய்ட்டி*

## அழிவுகளை அகற்ற மூன்று ஆண்டுகள் தேவை

பூகம்பத்தால் பாதிக்கப்பட்டுள்ள கெய்ட்டி தீவில் கட்டட இடிபாடுகளை அகற்ற மூன்று ஆண்டுகள் ஆகும் என அந்நாட்டு அதிபர் தெரிவித்துள்ளார். கடந்த ஜனவரி 12ம் திகதி ஏற்பட்ட பூகம்பத்தால் கட்டடங்கள் இடிந்து விழுந்ததில் இடிபாடுகளில் சிக்கி சுமார் 2 இலட்சத்து 30 ஆயிரம் பேர் உயிரிழந்திருப்பதாக தற்போது கணிப்பிடப்பட்டுள்ளது. இலட்சக் கணக்கானோர் வீடு, உணவு இன்றி தவிக்கின்றனர். பாதிக்கப்பட்டவர்களுக்கு உலக நாடுகள் உதவி வருகின்றன.



இதுதவிர, அதிபர் மாளிகை, அரசு அலுவலகங்கள் மற்றும் பிரபலமான தனியார் கட்டடங்களும் இடிந்து தரைமட்டமாகி உள்ளன. தலைநகர் போர்ட் ஒப் பிரின்சசில் குவிந்துள்ள கட்டட இடிபாடுகளை அகற்றும் பணியில் ஆயிரக் கணக்கான வாகனங்கள் ஈடுபட்டுள்ளன.

இதற்கிடையே, நில அதிர்வுகள் அப்பகுதியில் தொடர்ந்தும் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. பூகம்பத்துக்குப் பிறகு இதுவரை 54 முறை நில அதிர்வுகள் ஏற்பட்டுள்ளன. மேலும் பலமான பூகம்பம் ஏற்பட வாய்ப்பு உள்ளதாக நிபுணர்கள் எச்சரித்துள்ளனர். இதனால், பூகம்பத்தில் தப்பித்த வீடுகளிலும் வசிப்பதற்கு மக்கள் தயங்குகின்றனர். மாடி வீடுகளில் உள்ளவர்கள் கூட குடிசைகளை அமைத்து தங்கியுள்ளனர்.

அத்துடன், இடிபாடுகள் அகற்றப்பட்ட இடங்களிலும் புதிய கட்டிடங்களை கட்டுவதை தள்ளிப் போட்டுள்ளனர். பூகம்பத்தின்போது அதிபர் மாளிகையும் இடிந்து தரைமட்டமானதால், விமான நிலைய காவல் நிலையம்தான் தற்காலிக அதிபர் அலுவலகமாக இயங்கி வருகிறது. இதுகுறித்து அதிபர் ரெனே பிரவல் கூறுகையில், அடுத்த பூகம்பம் தாக்குமோ என்ற பீதி காரணமாக, சீமந்துக் கட்டடத்துக்குள் இரவில் நிம்மதியாக தூங்க முடியாமல் மக்கள் தவிக்கின்றனர். எனக்கும் அந்த பயம் உள்ளது. கட்டட இடிபாடுகளை அகற்றுவதற்கு இன்னும் மூன்று ஆண்டுகள் ஆகும் என்றார்.

*திபெத்*

## ஒபாமாவின் உதவியை கோருகிறார் தலாய்லாமா

சீனாவின் கடும் எதிர்ப்பையும் மீறி அமெரிக்க அதிபர் பராக் ஒபாமாவும், திபெத்திய மதத் தலைவர் தலாய் லாமாவும் வாஷிங்டனில் வியாழனன்று (18ம் திகதி) சந்தித்துப் பேசுகின்றனர். சீனாவின் கட்டுப்பாட்டில் உள்ள திபெத்துக்கு தன்னாட்சி அதிகாரம் கோரி போராடி வரும் தலாய் லாமா, சீனாவின் எதிர்ப்பையும் மீறி இந்த அமெரிக்கப் பயணத்தை மேற்கொண்டுள்ளார்.

திபெத் விவகாரத்தில் அமெரிக்கா தலையிடுமாறு வலியுறுத்தி அமெரிக்க அதிபர் ஒபாமாவிடம் தலாய்லாமா பேச உள்ளார். வெளியுறவு அமைச்சர் ஹிலாரி கிளின்டனுடனும் தலாய்லாமா பேச உள்ளார். லாமாவின் அமெரிக்க பயணம் குறித்து அவரின் சிறப்புத் தூதர் லோதி கியாரி கூறுகையில், `சீனா, திபெத் ஆகிய இருதரப்புக்கும் பரஸ்பரம் நன்மை ஏற்படும் வகையில் நல்ல தீர்வுக்கு வழி சொல்லுமாறு அமெரிக்க அதிபர் ஒபாமாவிடம் தலாய்லாமா பேச உள்ளார். மற்றபடி இருவரும் நோபல் பரிசு பெற்றவர்கள் என்ற வகையில் பல்வேறு உலக விடயங்களை அவர்கள் விவாதிப்பார்கள்` என்றார்.

சீனாவின் எதிர்ப்பையும் மீறி இடம்பெறும் இந்தப் பேச்சுவார்த்தை உலக நாடுகளின் கவனத்தை ஈர்த்துள்ளது. திபெத்தில் நிலவும் அமைதியற்ற சூழலுக்கு தலாய் லாமா தான் காரணம். அவர் ஒரு பயங்கரமான பிரிவினைவாதி. எனவே அவரை ஒபாமா சந்திக்க வேண்டாம்` என்று சீன வெளியுறவுத் துறை செய்தி தொடர்பாளர் மா ஷாவோவ் கேட்டுக் கொண்டிருந்தார்.

*லிபியா*

## ஐரோப்பியர்களுக்கு விசா வழங்க மறுப்பு

லிபியா நாட்டின் அதிபர் கடாபியின் மகன் ஹனிபால் சுவிட்சர்லாந்து நாட்டில் கைது செய்யப்பட்டதை தொடர்ந்து, லிபியாவுக்கு செல்ல விரும்பும் ஐரோப்பியர்களுக்கு விசா வழங்க அந்த நாட்டு அரசு மறுத்து வருகிறது. கடாபி மகன் ஹனிபால் கடாபி 2008ம் ஆண்டு சுவிட்சர்லாந்து ஜெனீவாவில் உள்ள ஒரு விடுதியில் தன் மனைவியுடன் தங்கி இருந்தபோது அவர்கள் விடுதியின் ஊழியர்களை அடித்து உதைத்ததாக கூறப்படுகிறது. இதைத்தொடர்ந்து அவர்கள் அளித்த புகாரின் அடிப்படையில் ஹனிபாலை காவல்துறையினர் கைது செய்தனர்.

அவர் 2 நாட்கள் சிறையில் இருந்தார். அடிபட்ட 2 ஊழியர்களுக்கு இழப்பீடு கொடுக்கப்பட்டதை தொடர்ந்து, அவர்கள் புகாரை திரும்பப்பெற்றனர். இதன் காரணமாக காவல்துறை ஹனிபால் மீதான வழக்கை கைவிட்டனர். இந்த சம்பவத்துக்கு பிறகு கடாபி, ஹனிபால் மற்றும் அவர்கள் குடும்பத்தினர் ஆகியோர் பெயர்களை சுவிஸ் அரசு கறுப்புப்பட்டியலில் சேர்த்து விட்டது. இதனால் கோபம் அடைந்த கடாபி, அதற்கு பதிலடி கொடுப்பதற்காக லிபியாவுக்கு வர விரும்பும் ஐரோப்பியர்களுக்கு விசா கொடுக்கவேண்டாம் என்று உத்தர விட்டு இருக்கிறார். அதிகாரிகள் ஐரோப்பியர்களுக்கு விசா கொடுக்க மறுத்து வருகிறார்கள். கிட்டத்தட்ட 25 ஐரோப்பிய நாடுகளை சேர்ந்தவர்களுக்கு விசா மறுக்கப்பட்டுள்ளது. இதனால் ஐரோப்பிய நாடுகளை சேர்ந்த அதிகாரிகளில் இருந்து சாதாரண சுற்றுலா பயணிகள் வரை யார் விசா கேட்டாலும் அனுமதி மறுக்கப்பட்டு வருகிறது. ஏற்கனவே விசா வழங்கப்பட்டு இருந்தால் அந்த விசா செல்லாது என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## அணு ஆயுத....

இந்த நடவடிக்கையை ஈரானின் தொலைத் தொடர்புத்துறை எடுத்துள்ளது. சமீப காலமாக பேஸ்புக், ட்வீட்டர், யூரியூப் ஆகியவற்றைப் பயன்படுத்தும் எதிர்க்கட்சியினரின் செயல்களை அரசு உளவு பார்ப்பதாக ஈரான் எதிர்க்கட்சிகள் குற்றம் சாட்டி வருகின்றன. இந்தப் பின்னணியில் ஜிமெயிலைத் தடை செய்ய ஈரான் அரசு முடிவு செய்துள்ளது. ஈரானில் மிகவும் பிரபலமாக உள்ள மெயில் சேவையாக ஜிமெயில் திகழ்கிறது. குறிப்பாக இளைஞர்கள் மத்தியில் ஜிமெயில்தான் உச்சத்தில் உள்ளது. அதேபோல எதிர்க்கட்சியினரும் கூட ஜிமெயிலைத்தான் பெருமளவில் பயன்படுத்துகின்றனர். இது ஈரான் அரசுக்கு எரிச்சலை ஏற்படுத்தியுள்ளதால் இந்த தடை நடவடிக்கையை அது மேற்கொண்டுள்ளதாக கூறப்படுகின்றது. தங்களது மெயில் சேவைக்கு ஈரான் அரசு தடை விதித்திருப்பது குறித்து கூகுள் நிறுவனம் இதுவரை கருத்து தெரிவிக்கவில்லை. சமீபத்தில்தான் சீனாவில் கூகுளுக்கு சிக்கல் வந்தது. இப்போது ஈரானிலும் அதற்கு தடை வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, எங்கள் நாட்டின் மீது பொருளாதார தடை கொண்டுவர எந்த நாடாவது முயன்றால், மோசமான விளைவுகள் ஏற்படும். இதற்காக அந்த நாடு வருந்தவேண்டிய நிலை ஏற்படும். ஈரானுக்கு எதிராக யாராவது செயல்பட்டால், நாங்கள் தக்க பதிலடி கொடுப்போம் என்றும் அதிபர் அகமதி நிஜாத் கூறியுள்ளார்.



ஈகை

குறள் 223

**இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே உள.**

தான்வறியன் என்ற துன்பச்சொல்லை ஒருவன் சொல்லுவதற்கு முன்பு அவனுக்கு உதவும் தன்மை நல்ல குடிப்பிறப்பு உடையவனிடமே உள்ளது.

# இளையோர் உலகம்

இளையோர்களே இது உங்களுக்கான உலகம். இங்கு உங்கள் ஆக்கங்களை, ஆரோக்கியமான விடயங்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளுங்கள். இது உங்களுக்கான களம்...

## கடைசிப் பிரார்த்தனை

காட்டு வழியே சென்ற ஒரு மனிதன் திடீரென திடுக்கிட்டு நின்றான். காரணம் அவன் எதிரே ஒரு சிங்கம் நின்று கொண்டிருந்தது. தப்பிக்க வேறு வழியில்லாத நிலையில் அவன் நடுங்கிக் கொண்டே சிங்கத்தின் முன் மண்டியிட்டான். அப்படியே கண்ணை மூடி கடவுளை நினைத்துப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தான். அவன் கண் விழித்தபோது என்ன அதிசயம், எதிரே அந்தச் சிங்கமும் பிரார்த்தனை செய்வதைப் போல உட்கார்ந்திருந்தது. அதைக் கண்டு ஆச்சரியம் அடைந்த அந்த மனிதன், பயம் நீங்கியவனாய் சிங்கத்தைப் பார்த்துக் கேட்டான்: "நான் என்னைக் காப்பாற்ற வேண்டி கடவுளை வேண்டினேன். நீ ஏன் பிரார்த்தனை செய்தாய்?" சிங்கம் பதில் சொன்னது: "நான் எப்போதும் சாப்பிடும் முன் பிரார்த்தனை செய்வது வழக்கம்."

## தவளை கதை

ஒரு பெரிய மலை. அதில், மூன்று தவளைகள் ஏற முயன்றன. மலையின் வழி நெடுக பாம்பு, தேள்கள் இருக்கிறது...போகாதே என்று பயம் காட்டினார்கள். ஒரு தவளை 100 அடி ஏறியதும் கீழே விழுந்து விட்டது. இன்னொரு தவளை 300 அடி தூரம் ஏறியதும் கீழே விழுந்து விட்டது. இன்னொரு தவளை மட்டும் மலை உச்சியை தொட்டது. அந்த தவளைக்கு காது கேட்காது.

## நிறைப் பிரச்சினை!

மருத்துவப் பரிசோதனைக் கூடம் ஒன்றுக்கு குழந்தையுடன் வந்த அந்த நபர், "குழந்தையின் நிறை பார்க்க வேண்டும்" என்றார். அங்கிருந்த ஊழியர், "குழந்தையின் நிறை பார்ப்பதற்கான இயந்திரம் பழுதடைந்துள்ளது. நீங்கள் விரும்பினால் ஒன்று செய்யலாம்... பெரியவர்களின் நிறையைக் கணிக்கும் இயந்திரத்தில் குழந்தையின் நிறையைப் பார்க்கலாம்..." என்றார்.

"எப்படி?" என்றார் அந்த நபர்.

"முதலில் குழந்தையுடன் அதன் அப்பாவை நிறை இயந்திரத்தில் ஏறி நிற்கச் சொல்வோம். பின்னர் குழந்தையில்லாமல் தனியாக அவரை ஏறி நிற்கச் சொல்வோம். பின்னலவு கிடைக்கும் நிறையின் அளவை முந்தைய அளவில் கழித்தால் குழந்தையின் நிறை கிடைத்துவிடும்!" என்றார் ஊழியர். "ஆனால் அது எனக்குச் செல்லு படியாகாது!" - சலிப்பாய்ச் சொன்னார் வந்தவர்.

"ஏன்...?"

"நான் குழந்தையோட அப்பா இல்ல... மாமா..." என்றார் வந்தவர்.

## முத்துவின் பரிதாப முடிவு

ஒரு ஊருல வணிகர் ஒருவர் நிறைய ஆடு, மாடுகளை வளர்த்து வந்தார். அதுல முத்துன்னு ஒரு மாடு பயங்கர முரடாயிருந்தது. வண்டி பூட்ட வரும் வண்டிக்காரனை முட்டுவது, வண்டியை இழுக்க மாட்டேன்னு சண்டித்தனம் செய்யறதுன்னு ரொம்ப துஷ்டத்தனமா இருந்ததால அந்த வணிகர் ஒரு கசாப்புக்கடைக்காரனுக்கு முத்துவை வித்துட்டாரு.

கடைக்காரன் கொடுவாள எடுத்து அதை வெட்டப் போனப்போ, அவனை முட்டித் தள்ளிட்டு உயிருக்குப் பயந்து வேகமா ஓட ஆரம்பிச்சுது முத்து. அப்போது கசாப்புக் காரன் ஆத்திரத்தோட எறிஞ்ச அரிவாள் அதன் காலில் பட்டதால் ரத்தம் சொட்டச் சொட்ட ஒரு காட்டுக்குள் புகுந்து மயக்கமாகிவிட்டது. மயக்கம் தெளிஞ்சதும் ஊருக்குத் திரும்பலாம்னு பார்த்தா அதுக்கு வந்த வழி தெரியலை. சரி, இனி நமக்குக் காடு தான் வசதின்னு நினைச்சு, காட்டுல இருக்கிற மூலிகை இலை தழையையெல்லாம் சாப்பிட்டுக் காலம் கழிச்சுது முத்து.

மூலிகையெல்லாம் சாப்பிட்டதால அது காலல இருந்த ரணமெல்லாம் ஆறியதோடு, உழைப்பே இல்லாது போனதால் அது சும்மா 'கொழு கொழு'ன்னு ஆயிடுச்சு.

அந்தக் காட்டுக்குள்ளே சிங்கராஜா ஒண்ணு இருந்துச்சு. அதுக்கு காட்டில ரொம்ப நல்ல பேர். அதுகூட எப்பவும் ஒரு நரி சுத்திக் கிட்டிருக்கும். ராஜா கூட இருந்தா மரியாதைன்னு நினைச்ச அது, ராஜா மிச்சம் வைக்கிற மாமிசத்துக்காகவே அதுக்கு 'ஐஸ்' வைச்சுக்கிட்டிருந்தது.

அந்த நரி ஒருநாள் முத்துவைப் பார்த்துச்சு. மாட்டைச் சாப்பிட நினைத்தாலும், அதோட உருவத்தைப் பார்த்து பயந்தது நரி.

சிங்கராஜாகிட்ட கொண்டுபோய் அந்த மாட்டை விட்டுட்டா அது மாட்டை அடிச்சுடும். நமக்கும் மாமிசம் கிடைக்கும் என்று நினைத்தது. முத்துகிட்ட போய் பல்லை இளிச்சுக்கிட்டே பேசியது ."நீங்க யாரு? பார்த்தா சாமியாட்டம் இருக்கீங்க?"

தனியா திரிஞ்சுக்கிட்டிருந்த முத்துவுக்கு, தன்னோட சினேகம் கொள்ளவந்த நரியைக் கண்டு சந்தோஷம். அதனுடன் நட்பா பழக ஆரம்பிச்சுது. ஒருநாள் சிங்கராஜா உலாத்திக் கொண்டிருந்த இடத்துக்கு முத்துவை அழைச்சிட்டுப் போனது நரி. அதைப் பார்த்து சிங்கம் அருகே வர, சிங்கத்திடம் முத்துவை அறிமுகப் படுத்தி வைத்தது நரி. சிங்கராஜாவுக்கு ஏனோ முத்துவைப் பிடித்துப் போய்விட அதை அடித்துத் தின்ன மனம் வரவில்லை.

முத்துவுடன் பழக ஆரம்பித்து, விரைவிலேயே அதன் நெருங்கிய நண்பனாகிவிட்டது சிங்கராஜா. நரியை முன்பு போல அதிகமாகக் கண்டுகொள்வதில்லை. அதனால் நரிக்குக் கோபம், எரிச்சல்.

எப்படியாவது இவங்களோடு நட்பை முறிச்சிடணும்னு முடிவு செஞ்சுது. ஒருநாள் சிங்கம் மட்டும் தனியா இருந்தப்போ நரி, "சிங்கராஜா, நீங்க தந்திருக்கிற இடத்தினால முத்துவுக்குக் கர்வம் ஏறிப் போச்சு. எப்பப் பாரு, நாந்தான் இனி உங்களுக்கெல்லாம் ராஜான்னு சொல்லிக்கிட்டுத் திரியுது. உங்களைக் கொன்னுடணும்னு கூட திட்டம் போடறதா தெரியுது" என்று சொல்ல, முதலில் அதை நம்ப மறுத்த சிங்கம், நரி திரும்பத் திரும்பச் சொல்ல யோசிக்க ஆரம்பித்தது.

"என்னை அது கொல்ல நினைக்குது என்பதை நான் எப்படித் தெரிந்துகொள்வது?" என்று கேட்டது.

முத்துவின் செயல்பாடுகளைப் பற்றி அறிந்திருந்த நரி, "உங்க கூட பேசிக் கிட்டிருக்கறப்ப அது முன்னங்கால் ரெண்டையும் மண்டி போட்டு மூச்சை ஆக்ரோஷமா இழுத்து விடும் பாருங்க... அப்போ நீங்க சுதாரிச்சிடுங்க" என்றது நரி.

"அப்படியா... அது வரட்டும். இரண்டில ஒண்ணு பார்த்துடுறேன்."

அடுத்ததாக அந்த தந்திரக்கார நரி முத்துகிட்ட போய், "முத்து... உன்னைப் பார்த்தா பாவமா இருக்கு. நீ எல்லோர்கிட்டயும் நல்லவன்னு பேர் வாங்கறதால எங்கே தன்னை விட்டுட்டு உன்னை இந்தக் காட்டுக்கு ராஜாவாக்கிடுவாங்களோன்னு சிங்கம் பயப்படுது. அதனால தகுந்த சந்தர்ப்பம் கிடைக்கிறப்போ உன்னைக் கொன்னுடப் போறதா சொல்லிச்சு. அதனால நீ ஜாக்கிரதையா இருந்துக்கோ" என்று கூற, குழப்பம் அடைந்த முத்து, "சிங்கம் என்னைக் கொல்லப் போகுதுன்னு எப்படித் தெரிஞ்சுக்கிறது?" என்று கேட்டது. அதற்கு நரி, "எப்போ சிங்கம் உன்னை உத்துப் பார்த்துக்கிட்டு கர்ஜனை செய்யுதோ, அப்போ அது உன்னைக் கொல்லப் போகுதுனு அர்த்தம்" என்றது. அன்று முத்துவும் சிங்கராஜாவும் வழக்கமான நேரத்தில் சந்திச்சபோது நரி சொன்னது சிங்கராஜாவுக்கு ஞாபகம் வர, அது கோபம் கக்கும் விழிகளால் முத்துவைப் பார்த்தவாறு காடே நடுங்குமளவு கர்ஜனை செய்தது.

'ஓ என்னைக் கொல்லத்தான் ராஜா கர்ஜிக்கிறது. நரி சொன்னது சரியாகப் போய் விட்டது. என்ன இருந்தாலும் நமக்கு அடைக்கலம் தந்த சிங்கராஜா முன்னால பணிஞ்சு போறதுதான் நல்லது' என்று மண்டி போட்டுத் தலையைக் கீழே குனிஞ்சு 'புஸ்... புஸ்' என்று மூச்சு விட்டது.

அதைப் பார்த்த சிங்கராஜா, 'ஆகா... நரி சொன்னது சரிதான். இந்த முத்து என்னைக் கொல்லத்தான் தயாராகுது' என்று கொஞ்சம்கூட யோசிக்காமல் அதன் மீது பாய்ந்து அடித்துக்கொன்றது சிங்கம். தனது திட்டம் பலிச்ச மகிழ்ச்சியோட மாமிசத்தை ருசி பார்க்க ஓடிவந்தது நரி.

**அறிவுரை: தனக்குச் சமமானவங்க கூடத்தான் நட்பா இருக்கணும். சந்தேகப் பேர் வழிகள் கூட பழகக்கூடாது.**

**– சேலம் சுபா**

## இரகசியம், அதிசயம், பிரமிப்பு

மனித வரலாற்றின் சாதனையாகிய பிரமிடுகள்!

பிரமிட்டுகள் கூம்பு வடிவில் கட்டப்பட்டன. இறந்த மன்னர்களின் உயிர்களை நேரடியாக தேவலோகத்துக்கு அனுப்பும் வகையிலேயே இவை கூம்பு வடிவில் அமைக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. சூரியக் கதிர்கள் குவிவதன் எதிர்மறை வடிவமாக பிரமிடுகளின் தோற்றம் அமைந்துள்ளதாகவும் கூறப்படுகிறது. அனைத்து பிரமிடுகளும் சொல்லிவைத்தாற்போல நைல் நதியின் மேற்குக் கரைப் பகுதியிலேயே கட்டப்பட்டுள்ளன. வெகு தொலைவில் இருந்து பார்த்தாலும் பார்வைக்குத் தெரியும் வகையில், பளபளக்கும் சுண்ணாம்புப் பாறைகளைப் பயன்படுத்தி இந்தப் பிரமிடுகள் எழுப்பப்பட்டன. இப்பணியில் ஆயிரக்கணக்கான அடிமைத் தொழிலாளர்கள் இரவும் பகலும் ஈடுபடுத்தப்பட்டனர். ஒவ்வொரு பிரமிடுக்கும் தனித்தனிப் பெயர் உண்டு. அபு ராவாஷ், கிஸா, ஜாவ்யத் எல் ஆர்யன், அபு சிர், சக்காரா, டார், மாஸ்குனா, லிஸ்ட், மெய்டம், ஹவ்ரா, எல்லாகுன் என்பவை முக்கியமான பிரமிடுகள்.

சிறிதும் பெரிதுமாக அமைந்துள்ள எகிப்திய பிரமிடுகளின் எண்ணிக்கை 81ல் இருந்து 112 ஆக இருக்கும் என்று கருதப்படுகிறது. 1842ம் ஆண்டு கார் ரிச்சர்ட் லெப்சியஸ் என்பவர் முதல் முறையாக, மொத்தம் 67 பிரமிடுகள் உள்ளன என்று கணக்கிட்டுக் கூறினார். ஆனால் அதற்குப் பின் நிறைய பிரமிடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கட்டுமானப் பணிக்கான இயந்திர வசதிகள் ஏதுமில்லாத பழங்காலத்தில் கட்டுப்பட்ட பிரம்மாண்டமான பிரமிடுகள், இன்றுவரை பொறியியல் அதிசயங்களாகவே திகழ்கின்றன.



## விடுகதை

**சென்ற இதழின் விடைகள்**

| | |
|---|---|
| 01. மெழுகுவர்த்தி | 06. மயில் |
| 02. உப்பு | 07. தேன்கூடு |
| 03. தபால் பெட்டி | 08. தராசு |
| 04. சாம்பிராணி | 09. புகை |
| 05. மத்தளம் | 10. தென்னை மரம் |

01. அரைக்கால் தண்ணீருக்குள் ஆடு நீச்சல் போடுது அது என்ன?
02. அப்பா பணத்தை எண்ணமுடியாது அம்மா புடவையை மடிக்கமுடியாது அது என்ன?
03. உருவத்தில் சிறியவன் உழைப்பில் பெரியவன் அவன் யார்?
04. ஓடும் குதிரைக்கு வால் குறைகிறது அது என்ன?
05. ஒரு பக்கப்பல்லால் ஒன்றை ஒன்பதாக்கும் அது என்ன?
06. வாலில்லாப்பறவை ஊர்ஊராய் பறக்கிறது அது என்ன?
07. வளைக்கமுடியும் ஒடிக்கமுடியாது அது என்ன?
08. நீலமேனி கொண்டவள் நிலம் சுற்றி அலைகிறாள் அவள் யார்?
09. பூமியில் வளராத மரம் கிளை உண்டு இலை இல்லை அவன் யார்?
10. பிடி உள்ள குடையை பயன்படுத்த முடியலே அது என்ன?

*விடைகள் அடுத்த இதழில்...*

# மகளை உயிருடன் புதைத்த ஒரு கொடூரத் தந்தையும் பேரனும்

துருக்கி நாட்டில் ஒரு தந்தையும், அவரது தந்தையும் சேர்ந்து இளம் பெண் ஒருவரை உயிருடன் புதைத்துக்கொன்ற சம்பவம் தற்போது வெளிச்சத்திற்கு வந்துள்ளது. கக்ரா நகரை சேர்ந்த 16 வயதான பெண் மெடின் மேமி கடந்த 40 நாட்களுக்கு முன்னர் காணாமல் போயிருந்தார். இந்த நிலையில் காவல்துறையினருக்கு கிடைத்த தகவலை தொடர்ந்து அவளது வீட்டுக்கு பின்புறத்தில் உள்ள ஒரு இடத்தை தோண்டினார்கள். 'ஆறரை அடி ஆழத்தில் தோண்டியபோது, அதற்குள் அவள் உட்கார்ந்த நிலையில் பிணமாக கண்டுபிடிக்கப்பட்டாள். அவள் கைகள் கட்டப்பட்டு இருந்தன. பிரேத பரிசோதனையில் அவள் மூச்சுத்திணறி இருந்தது தெரியவந்தது. அதோடு அவள் வயிற்றுக்குள்ளும், நுரையீரலுக்குள்ளும் நிறைய மணல் சேர்ந்த இருப்பது தெரியவந்தது.



மெடின் மேமி புதைக்கப்பட்டிருந்த வீட்டின் பின்புறம்

அவள் உயிருடன் மண்ணில் புதைக்கப்பட்டதை இது உறுதிப்படுத்தியது. அவள் உடலில் வேறு எந்த காயமும் இல்லை இதை தொடர்ந்து அவளது தந்தை அயன் மெமி (40 வயது), பேரன் பெதி மெமி (65 வயது) ஆகிய இருவரும் கைது செய்யப்பட்டனர்.

அவர்களிடம் விசாரணை மேற்கொண்டதில், மெடின் மேமிக்கு வயது 16 ஆகிறது. அவளுடன் பிறந்தவர்கள் மொத்தம் 9 பேர். அவள் ஆண்களுடன் பேசுவது வழக்கம். இதை அறிந்த அவளது தாத்தா, அவளை அடித்து உதைத்தார். இதற்கு பிறகும் அவள் ஆண் நண்பர்களுடன் பேசிக்கொண்டிருந்தாள். இதனால் கோபம் அடைந்த அவள் குடும்பத்தினர் ஆலோசனை நடத்தி தங்கள் குடும்ப கௌரவத்தை காப்பாற்றிக்கொள்வதற்காக அவளை கொலை செய்வது முடிவு எடுத்தனர். வீட்டின் பின்புறம் குழி தோண்டி அதில் அவளை உயிருடன் புதைத்தனர். துருக்கி நாட்டில் இதுபோன்ற கௌரவம் காக்கும் கொலைகள் ஆண்டுக்கு 200 நடப்பதாக கூறப்படுகின்றன. தற்போது மெடினின் தந்தை ஆயுள் தண்டனையையும் பேரன் அதற்கு சற்று குறைவான தண்டனையையும் பெறுவார்கள் என்று கூறப்படுகின்றது. எனினும், இது தொடர்பாக அவர்கள் இருவரும் எந்தக் கருத்தையும் விசாரணையின் போது வெளியிட மறுத்துவருவதாக காவல்துறை தரப்பு தெரிவித்துள்ளது.

# 2 வயது மகனை வீதியில் சங்கிலியால் கட்டிப்போடும் தந்தை!



சீனாவில் தந்தை ஒருவர் தனது இரண்டு வயதான மகனை வீதியோரத்தில் உள்ள விளக்கு கம்பத்தில் சங்கிலியால் கட்டிப்போட்டுவிட்டு வேலைக்கு சென்று வருகின்றார். தலைநகர் பீஜிங்கின் புறநகரின் தெருவோரத்தில்தான் இந்தச் சிறுவனின் வாழ்க்கை. இதனைப் பார்த்த பலரும் அதிர்ச்சியடைந்திருக்கின்றனர். மனித வலுவில் இயங்கும் முச்சக்கரவண்டிச் சாரதியான இச்சிறுவனின் தந்தை சென் சுவான்லி, தனது மகனை பத்திரமாக பாதுகாப்பதற்குத்தான், கட்டிப் போட்டதாக கூறுகின்றார். சீனாவில் குழந்தை திருட்டுகள் அதிகரித்து வருகின்றன. கடந்த மாதம் தனது 4 வயது மகள் திருடு போய் விட்டதாக அவர் கூறினார். எனவேதான், தான் வேலைக்கு (சவாரிக்கு) செல்லும்போது, தனது மகனை தெருவோர விளக்கு கம்பத்திலோ, மரத்திலோ சங்கிலியால் கட்டிப்போட்டு செல்வதாக அவர் கூறினார். தனது வருமானம் குறைவு என்பதால், தனது மகனை குழந்தைகள் காப்பகத்தில் சேர்க்க முடியாது என்றும் அவர் கூறினார். தனது மனைவி குப்பை பொறுக்கச் செல்வதால், அவராலும் மகனை கவனித்துக் கொள்ள முடியாது என்றும் அவர் கூறுகிறார். தற்போது அதிகாரிகளுக்கு புகார் சென்றதையடுத்து, இரும்புச் சங்கிலியை அகற்றுமாறு உத்தரவிட்டுள்ளனர்.



# சிவப்பாக மாறும் புளூட்டோ!

புளூட்டோ கோள் பிரகாசமாகவும், சிவப்பாகவும் மாறி வருவதாக அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி அமைப்பான நாசா தெரிவித்துள்ளது. விண்வெளியில் சுற்றி வரும் ஹப்பிள் ரெலஸ்கோப் எடுத்த படங்களின் அடிப்படையில் இக்கருத்தை நாசா வெளியிட்டுள்ளது. புளூட்டோ கோளில், சூரிய ஒளி படும் துருவத்தின் மேற்பரப்பில் உள்ள பனிக் கட்டி உருகுவதாலும், அதன் எதிர் துருவம் உறைவதாலும் இந்த மாற்றம் ஏற்பட்டுள்ளதாக நாசா கூறியுள்ளது. சூரியனை ஒன்பது கோள்கள் சுற்றி வருவதாகவும், அதில் ஒன்பதாவது கோளாக புளூட்டோ இருப்பதாகவும் 1930ம் ஆண்டு கண்டு பிடிக்கப்பட்டது. எனினும், 2006ம் ஆண்டளவில் புளூட்டோ ஒரு கோள் இல்லை எனவும் சூரியனைச் சுற்றி 8 கோள்களே வலம்வருவதாகவும் அறிவிக்கப்பட்டது. சூரியனில் இருந்து சுமார் 7.4 பில்லியன் கிலோ மீற்றருக்கு அப்பாலிருக்கும் புளூட்டோ, சூரியனை சுற்றிவர 248 ஆண்டுகள் எடுக்கின்றது.




# பிரான்சின் சிலந்தி மனிதனுக்கு அச்சப்படும் டுபாய் !



உலகின் உயர்ந்த கட்டடங்களைக் கண்டால் அதில் வெறும் கைகளால் ஏறிவிடத் துடிப்பவர் பிரான்சின் சிலந்தி மனிதர் என அழைக்கப்படும் அலான் றொபேட். உலகின் எத்தனையோ மிக உயர்ந்த கட்டடங்களிலும் எந்தவித பாதுகாப்பு இல்லாமல் ஏறியும், ஏறும்போது இடை நடுவில் இறக்கிவிடப்பட்டும் இவரது சாதனைகள் தொடர்ந்துகொண்டிருக்கின்றன. இந்நிலையில் இந்த சிலந்தி மனிதனை நினைத்து டுபாய் கலக்கமடைந்துள்ளது. அண்மையில் உலகின் மிக உயர்ந்த கட்டடத்தை திறந்து வைத்துள்ளது டுபாய். இந்தக் கட்டடத்தின் மீது சிலந்தி மனிதன் எப்படியும் கண் வைத்திருப்பார் என்று கருதும் டுபாய் அரசு, சிலந்தி மனிதன் நாட்டிற்குள் நுழைவதிலும் கட்டடத்தில் ஏற முனைவதிலும் இருந்து தடுக்க கண்ணும் கருத்துமாக இருக்குமாறு காவல்துறையினருக்கு பணித்துள்ளதாக தெரியவருகின்றது.

இதுஇவ்வாறிருக்க, உயரமான சுவர்களில் சாதாரண மனிதர்களும் நடப்பதற்கு நவீன கருவியை அமெரிக்க விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளதாகக் கூறியுள்ளனர். இதற்காக நவீன காலணியையும், கால் உறையையும் அவர்கள் உருவாக்கி இருக்கிறார்கள். இந்த காலணி சுவற்றில் ஒட்டிக்கொள்ளும். காலை எடுத்து அடுத்த அடி வைக்கும் போது மட்டுமே சுவற்றில் இருந்து காலை எடுக்கும் வகையில் இது உருவாக்கப்பட்டுள்ளது. இதனால், இனிமேல் சுவர்களில் சிலந்தி மனிதன் மட்டுமல்ல சாதாரண மனிதர்களும் ஏறலாம்தான்.

# சோதிடத்தில் மூழ்கிக்கிடக்கும் இத்தாலியர்கள்




சர்வதேச பொருளாதார மந்த நிலை காரணமாக, நிதி நெருக்கடியில் இருந்து மீள்வதற்காக சோதிடம் மற்றும் மூட நம்பிக்கைகளில் இத்தாலியர்கள் பெருமளவு ஆர்வம் காட்டுவதாக சமீபத்திய ஆய்வுகள் தெரிவிக்கின்றன. ஐரோப்பிய நுகர்வோர் சங்கத்தின் ஆய்வு அறிக்கை ஒன்றில் உள்ள தகவலின் படி, இத்தாலியர்கள் ஆண்டுக்கு பல மில்லியன் ஈரோக்களை சோதிடர்களிடமும், எதிர்கால கணிப்பு சொல்பவர்களிடமும் செலவழிப்பதாக தெரிய வந்துள்ளது.

குறிப்பாக நிதி நெருக்கடியில் இருந்து மீள்வதற்கு பரிகாரம் தேடி இத்தாலியர்கள் வங்கி மற்றும் ஆலோசகர்களிடம் செல்வதற்கு பதிலாக சோதிடர்களிடம் சென்றதே அதிகம் என இந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. இத்தாலியின் தெற்கு பகுதியில் இந்த போக்கு அதிகளவு காணப்படுவதாக தெரிகிறது.

நுகர்வோர் சங்க அறிக்கையின் படி, 30 ஆயிரத்துக்கும் மேற்பட்ட இத்தாலியர்கள் தினசரி 20 முதல் 600 ஈரோக்களை பல்வேறு வகையான சோதிடர்களிடம் செலவழிக்கின்றனர். உருளையை உருட்டி இறுதியாக உருளை ஓயும் பொழுது காட்டும் எண்ணின் அடிப்படையில் விடயங்களை முடிவு செய்வது, அட்டைகளின் அடுக்கில் இருந்து ஒன்றை உருவிப் பார்த்து முடிவுகளை சொல்வது என இவர்களின் (மூட) நம்பிக்கை ஏராளம். இதில் மூழ்கிக்கிடப்பவர்கள் 53 சதவீதம் பேர் பெண்கள். மூடநம்பிக்கையினால் ஏமாற்றப்படும் அப்பாவிகளுக்கு உதவ இயங்குகிற சேவை அமைப்பு ஒன்று சோதிடம் பற்றி வெளியிட்ட ஆய்வு அறிக்கை ஒன்றில் இந்த விவரங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறான ஒரு அமைப்பு புலம்பெயர்ந்த தமிழ் மக்களுக்கும் ஒன்று உருவானால் எத்தனை இலட்சம் ஈரோக்கள், டொலர்கள், பவுண்சுகள் மிச்சம்.

# எலியைத் தின்றதால் வந்த வினை!

பிரித்தானிய ஐரிவி குழும தொலைக்காட்சியில் நடந்த 'ரியாலிட்டி சோ'வின்போது எலியைப் பிடித்து கொன்று அதை சமைப்பது போன்ற காட்சி வந்ததற்காக அந்த தொலைக்காட்சிக்கு 1400 டொலர் அபராதம் விதிக்கப்பட்டுள்ளது. இந்த நிகழ்வில் கலந்து கொண்ட இத்தாலி நாட்டு சமையல் கலைஞரான கினோடி அக்காம்போ என்பவர் காட்டில் நடந்த நிகழ்ச்சியின்போது ஒரு காட்டு எலியைப் பிடித்து அதைக் கொன்று சமையல் செய்தார். பின்னர் அந்த எலிக் கறியை அவரும், நடிகர் ஸ்டூவர்ட் மேனிங் என்பவரும் சாப்பிட்டனர்.

இது சர்ச்சையைக் கிளப்பி விட்டுவிட்டது. ஏனெனில், இந்த நிகழ்ச்சியின் படப்பிடிப்பு அவுஸ்திரேலியாவில் நியூசவுத் வேல்ஸ் மாநிலத்தில் நடைபெற்றது. அங்கு, விலங்குகளை சித்ரவதை செய்வது குற்றம் ஆகும். எனவே, எலியைக் கொன்றதற்காக விலங்குகள் நல அமைப்பைச் சேர்ந்தவர்கள் நடவடிக்கை எடுக்கக் கோரி குரல் எழுப்பினர். இதையடுத்து தற்போது அந்த தொலைக்காட்சிக்கு அபராதம் விதிக்கப்பட்டுள்ளது. இந்த சம்பவத்திற்காக மன்னிப்பு கேட்டுக் கொள்வதாக செய்தித் தொடர்பாளர் கூறியுள்ளார். மேலும் இவ்வாறு நடந்தது தவறான செயல் என்றும் அவர்கள் கூறியுள்ளனர்.

ஈழமுரசு
EELAMURASU WEEKLY

நிர்வாகி
நிசாந்தன்
பிரதம ஆசிரியர்
ரஞ்சன்
ஆசிரியர் குழு
ஐ.சண்முகநாதன்
ஈசன்
செல்வராஜா
சிவா பரஞ்சோதி
அலுவலக நிர்வாகம்
இ.கந்தசாமி
வரைகலை
அனு கிராபிக்ஸ்

அலுவலகம்
2625 EGLINTON AVE EAST #2
SCARBOROUGH ,ON.M1K 2S2
தொலைபேசி / Telephone
416-291-7474
Cell:416•857•3941
தொலைநகல்/ Fax
416•291•7472
மின் அஞ்சல்/ Email
Eelamurasucanada@yahoo.com

அனைத்துலக அலுவலகங்கள்

பிரான்ஸ்
00 31140 05 95 15
பிரித்தானியா
0845 8687 980
சுவிஸ்
079 828 6871
ஜேர்மனி
0208 205 99 103
இத்தாலி
091 6824056
டென்மார்க்
86 336352
நோர்வே
22 425 527
நெதர்லாந்து
076 5425804
அவுஸ்திரேலியா
61 3 8802 8368



# சரத் பொன்சேகாவின் கைதுக்கு முன்னால்..!?

சிறீலங்காவின் முன்னாள் இராணுவ தளபதி சரத் பொன்சேகா கடந்த ஒக்டோபர் மாதம் 24 ஆம் திகதி அமெரிக்காவுக்கு சென்றிருந்த சமயம் அந்நாட்டு இராஜாங்க திணைக்களத்திற்கு சென்று சிறிலங்கா அரசின் போர்க்குற்றங்கள் உட்பட இறுதிக்கட்ட போரில் இடம்பெற்ற பல்வேறு சம்பவங்கள் அடங்கிய ஆவணம் ஒன்றை அமெரிக்க அதிகாரிகளிடம் சமர்ப்பித்திருந்தார் என்று அமெரிக்க இராஜாங்க திணைக்கள வட்டாரங்களை மேற்கோள்காட்டி தகவல் கசிந்துள்ளது.

கடந்த ஒக்டோபர் மாதம் 24 ஆம் திகதி சரத் பொன்சேகா தனது அமெரிக்க பிரஜா உரிமைக்கான பத்திரத்தை காலநீடிப்பு செய்வதற்காக அங்கு சென்றிருந்ததாக முன்னர் தெரிவிக்கப்பட்டிருந்தது. அவ்வாறு அவர் அங்கு சென்றிருந்தசமயம், அமெரிக்க இராஜாங்க திணைக்கள அதிகாரிகளினால் விசாரணைக்கு அழைக்கப்பட்டிருந்தபோதும் விசாரணைகள் எதற்கும் முகம்கொடுக்காமல் நாடு திரும்பியினார் என்று செய்தி வெளியாகியிருந்தது.

ஆனால், பொன்சேகா அமெரிக்காவில் தங்கியிருந்த சமயம் அமெரிக்க இராஜாங்க திணைக்கள அதிகாரிகள் மற்றும் அமெரிக்க அரச முகவர்கள் சிலருடனும் பல சுற்றுப்பேச்சுக்கள் இடம்பெற்றதாகவும் இந்த பேச்சுக்களின்போது சிறீலங்கா அரசியல் விவகாரம் மற்றும் வன்னியில் இடம்பெற்ற இறுதிக்கட்ட போர் தொடர்பாகவும் விரிவாக பொன்சேகா எடுத்துக் கூறியிருந்தார் என்றும் தற்போது தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்த சந்திப்புக்களில் ஒன்றின்போது, சிறீலங்கா படைகள் வன்னியில் மேற்கொண்ட போர்க்குற்றங்கள், சரணடைந்த விடுதலைப் புலிகளுக்கு என்ன நடந்தது? விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் மற்றும் அவரது குடும்பத்தினருக்கு என்ன நடந்தது? விடுதலைப் புலிகளின் மூத்த தலைவர்கள் பலருக்கு என்ன நடந்தது? விடுதலைப் புலிகளுக்கு எதிரான போரில் வன்னியில் நிலைகொண்டிருந்த படையணிகளின் விவரங்கள் ஆகியவை உட்பட பல விவரங்கள் அடங்கிய ஆவணம் ஒன்றை பொன்சேகா அமெரிக்க அதிகாரிகளிடம் கையளித்துள்ளார் என்று தகவல்கள் கூறுகின்றன.

இந்த சந்திப்புக்களை நிறைவுசெய்த பின்னர், கடந்த நவம்பர் 4ம் திகதி நாடு திரும்பிய பொன்சேகா, கொழும்பில் அமெரிக்க தூதுவர் பற்றிக்கா அம்மையாரை சந்தித்து இரகசிய பேச்சு நடத்தியிருந்தார். இந்த சந்திப்பு தொடர்பான விவரங்கள் எதுவும் வெளியிடப்படவில்லை என்று அரசு தரப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் இராஜாங்க திணைக்கள அதிகாரிகளுடன் நடத்திய பேச்சுக்களில் திட்டமிட்டபடியே கடந்த நவம்பர் 12ம் திகதி படைகளின் பிரதானி பதவியிலிருந்து பொன்சேகா இராஜினாமா செய்துகொண்டார் என்றும் அதன் பின்னர் அரசதலைவர் தேர்தலில் போட்டியிடப்போவதாக அறிவித்தார் என்றும் பொன்சேகாவை எதிர்க்கட்சிகளின் பொது வேட்பாளராக ஏற்றுக்கொள்ளும்படி ஐக்கிய தேசிய கட்சிக்கு அமெரிக்க தரப்பிலிருந்து அறிவுறுத்தப்பட்டதாகவும்கூட அந்த தகவல்கள் மேலும் தெரிவித்துள்ளன.



# வெளிநாட்டு வலையமைப்பை......

ஏற்படுத்தியிருந்தாகவும், இவ்வாறு தொடர்புகொள்ளப்பட்ட சிலர், தங்களுக்கு இந்தச் செயற்பாடுகளில் விருப்பமில்லையெனக்கூறி அவருடனான தொடர்புகளைத் துண்டித்து ஒதுங்கிக்கொண்டதாகவும் தெரியவருகின்றது.

தற்போது தனது முன்னைய ஆதரவாளர்கள் ஊடாக செயற்பாடுகளை தொடர்ந்து முன்னெடுத்து வரும் இவர், விடுதலைப் புலிகள் குறித்து ஆதரவான கருத்து நிலைப்பாடுகளைக் கொண்டவர்களை அச்சுறுத்தும் அல்லது அம்பலப்படுத்தும் வகையில் பிரத்தியேக இணையத் தளங்களை இயக்குமாறு வலியுறுத்தியுள்ளதாகவும் தெரியவருகின்றது. தற்போது தனிமனிதர்களை கொச்சைப்படுத்தும் இணையவலைகள் அதிகளவில் உருவாகியுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, விடுதலைப் புலிகளின் இந்த சர்வதேச வலைப் பின்னலை சிதறிடிக்கும் நடவடிக்கையில் ஒருசில சர்வதேச கரங்களும் சிறீலங்கா அரசுடன் இணைந்து இறங்கியுள்ளதாகவும் கூறப்படுகின்றது. இந்நிலையில், தற்போது கோத்தபாய ராஜபக்ச ஐந்து நாட்கள் பயணம் மேற்கொண்டு இந்தியா சென்றுள்ளார். இந்தப் பயணத்தின் போது இந்தியாவின் பாதுகாப்பு தரப்பின் முக்கியஸ்தர்களை கோத்தபாய ராஜபக்ச சந்தித்து பேசவுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. அத்துடன், இந்தியாவில் நடைபெறும் தெற்காசியாவின் மிகப் பெரிய ஆயுத தளபாட கண்காட்சியை பார்வையிடும் இவர், சிறீலங்காவின் பாதுகாப்பு கட்டமைப்புகளை நவீன மயப்படுத்தும் நோக்கில் இந்த கண்காட்சியில் ஈடுபட்டுள்ள ஆயுத உற்பத்தியாளர்களிடம் இருந்து புதிய யுத்த தளபாடங்களை கொள்வனவு செய்வதற்கான பேச்சுவார்தைகளிலும் ஈடுபடவுள்ளதாக தெரியவருகின்றது.

இதுஇவ்வாறிருக்க, இன்னொரு பக்கத்தில் சிறீலங்கா அரசின் நாச வேலைகள், படுகொலைகள், மனித உரிமை மீறல்கள் குறித்த உண்மைகளை அம்பலப்படுத்தும் இணையத் தளங்களையும் அரச எதிர்ப்புப் பிரச்சாரங்களை மேற்கொள்ளும் இணையத்தளங்களையும் சைபர் தாக்குதல் மூலம் செயலிழக்கச் செய்வதற்கு அரசாங்கம் முயன்று வருவதாக செய்திகள் வெளிவந்துள்ளன.

இதன் ஒரு கட்டமாக இந்தத் துறையில் நிபுணத்துவம் வாய்ந்த சீன நிபுணர் குழுவொன்று சிறீலங்காவிற்கு வந்திருப்பதாகக் கூறப்படுகிறது. பிரசித்தி பெற்ற 'கூகிள்' நிறுவனத்தின் மீது 'சைபர்' தாக்குதல் மேற்கொண்டு சீனாவில் அவற்றைச் செயற்படாமல் தடுத்த சீன நிபுணர்களே இவ்வாறு சிறீலங்காவிற்கு வந்துள்ளனர் எனவும் இன்னும் சில தினங்களில் செயலிழந்துபோகும் இணையத் தளங்களில் இருந்து இவர்களது நடவடிக்கை தெரியவரும் என்றும் எதிர்பார்க்கப்படுகின்றது. குறிப்பாக புலம்பெயர்ந்த நாடுகளில் உள்ள தமிழ் மக்களால் இயக்கப்படும் ஊடகங்களே பெருமளவில் பாதிக்கப்படும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

நேரடியாகச் சென்று பார்ப்பதற்கு சிறீலங்காவினால் தடை விதிக்க முடிகின்றபோதிலும் மாற்று வழிகளூடாக (தேடுதல் தளங்கள்) சென்று பார்வையிடுபவர்களை தடுக்க முடியாது இருப்பதனால், இவ்வாறான மாற்றுவழித் தேடுதல் தளங்களில் முக்கியமான ஒன்றாக கருதப்படும் 'கூகிள்' இணையத்தளம் இலங்கையில் செயற்படுவதைத் தடுக்கும் நடவடிக்கையிலும் சிறீலங்கா இறங்கியுள்ளதாகவும் இதை நடைமுறைப் படுத்துவதற்கு வேண்டிய தொழில்நுட்ப உதவிகள் சீனாவிடம் இருந்து சிறீலங்காவிற்கு கிடைத்துள்ளதாகவும் செய்திகள் தெரிவிக்கின்றன.

இதேவேளை, தமிழீழ கனவு இன்னும் அப்படியே உள்ளது என்றும் வெளிநாடுகளில் வசிக்கும் இலங்கைத் தமிழர்கள் இன்னமும் தமிழீழம் குறித்து விவாதித்து வருவதாகவும் சிறீலங்கா இராணுவத் தளபதி ஜகத் ஜெயசூர்யா எச்சரித்துள்ளார். தமிழர் தாயகத்தில் ஆக்கிரமித்து நிலைகொண்டிருக்கும் கல்லடி, தொப்பிகல, வாகரை, புனானை இராணுவ முகாம்களுக்கு பயணம் செய்து இராணுவத்தினரிடம் பேசியபோது இந்த எச்சரிக்கையை விடுத்திருந்தமை இங்கு குறிப்பிடத்தக்கது.

### மர்மப் பொருள் வெடித்ததில் மாணவர்கள் இருவர் பலி!

# கொழும்புத்துறையில் நடந்த கோரம்



பாடசாலை விட்டு வீடு திரும்பிக்கொண்டிருந்த பத்து வயதுச் சிறுவர்கள் இருவர், வீதியோரத்தின் வளவு ஒன்றுக்குள் கிடந்த மர்மப் பொருள் ஒன்றை எடுத்து வந்து வீதியில் குத்தி விளையாடினர். அப்போது அது திடீரென வெடித்ததில் அவர்கள் இருவரும் அந்த இடத்திலேயே பலியானார்கள். அதே வீதியால் பாடசாலை முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த மேலும் ஆறு பாடசாலைச் சிறார்கள் காயமடைந்தனர். இக்கோரச் சம்பவம் கொழும்புத்துறைப் பகுதியில் கடந்த திங்களன்று இடம்பெற்றது. யாழ்ப்பாணம் கொழும்புத்துறை இந்து மகாவித்தியாலயத்தில் தரம் 5 இல் படிக்கும் இவ்வாண்டு புலமைப்பரிசில் பரீட்சைக்குத் தோற்றவிருந்த இரு மாணவர்களுக்கே இந்தக் கதி நேர்ந்திருக்கின்றது.

அரியாலை ஏ.வி. வீதியைச் சேர்ந்த த. இராம்சிங் (10), கொழும்புத்துறை, இலந்தைக்குளம் வீதியைச் சேர்ந்த ஆரோக்கியநாதன் லக்ஷ்மன் (10) ஆகிய இருவருமே உயிரிழந்திருக்கின்றனர். இவர்கள் இருவரும் பிற்பகல் 2.20 மணியளவில் பாடசாலை முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த சமயம், கொழும்புத்துறைப் புங்கன்குளம் வீதியில், புளியடிச்சந்திக்கு அருகில் வீதியோரத்தில் உள்ள வெறும் வளவில் குப்பைக்குள் இருந்து மர்மப் பொருள் ஒன்றைக் கண்டெடுத்திருக்கின்றனர். நீண்ட காலம் கை விடப்பட்ட நிலையில் கிடந்த ஒரு எறிகணையாகவோ அல்லது வெடிகுண்டாகவோ அல்லது மிதிவெடியாகவோ அது இருக்கக்கூடும் எனக் கருதப்படுகின்றது.

அதனை எடுத்து விளையாடிய இச்சிறுவர்கள் அதனை நடுவீதியில் நிலத்தில் குத்திப் பார்க்க முயற்சித்த போது அது திடீரென வெடித்தது என்றும் கூறப்பட்டது. அதே வேளையில் பாடசாலை முடிந்து வீதியால் வந்து கொண்டிருந்த வேறு சில மாணவர்களும் இந்தக் குண்டுச் சிதறலால் காயமுற்றனர். அவர்கள் யாழ். போதனா வைத்தியசாலைக்குக் கொண்டு சேர்க்கப்பட்டனர். ரி.இராகுலன் (09), ரி.தனோஜன் (10), எம்.பெனிஸ்டன் (16), ஆர்.சிவாஜினி (19) உட்பட ஆறு பேரே காயமுற்றனர்.

# தமிழினப் படுகொலையை....

போர்க்குற்றங்கள் குறித்து விசாரணைகளை நடத்துவதில் சிறீலங்கா அரசு அக்கறை செலுத்தவில்லை என்பதனை எமது அலுவலகம் கண்டறிந்துள்ளது. எனினும் போர்க்குற்றங்கள் குறித்து சிறீலங்கா அரசாங்கம் தனது நாட்டிலேயே விசாரணை நடத்தும் என்று ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச ஐ.நா.செயலாளர் பான் கீ மூனுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றியே ஆகவேண்டும் என்றும் நவநீதம்பிள்ளை கூறினார்.

நவநீதம்பிள்ளை இங்கு வைத்து மேலும் தெரிவித்ததாவது, சிறீலங்காவின் மனித உரிமைகள் அமைச்சர் என்னை ஜெனீவாவில் சந்தித்துப் பேச்சு நடத்தினார். போர்க்குற்றங்கள் குறித்து விசாரணைகளை நடத்த பொதுத் தேர்தல் முடிவடைய வேண்டும் என்று அவர்கள் கருதுகிறார்கள். போர்குற்றங்கள் குறித்து மட்டுமன்றி தேர்தல் உரிமை மீறல்கள் குறித்தும் விசாரணை நடத்த வேண்டும் என்று மகிந்த சமரசிங்கவிடம் எடுத்துச் சொன்னேன். நாட்டின் மனித உரிமை அமைச்சர் என்ற வகையில் இந்த இரு விசாரணைகளை நடத்துவதற்கு தூண்டுதல் அளிக்க வேண்டும், அதனை நோக்கிச் செயற்பட வேண்டும் என்றும் அவரிடம் சுட்டிக்காட்டினேன் என்றும் கூறினார்.

ஆனால், தமது நாட்டில் போர்க்குற்றங்களை இழைக்கவில்லை என்று மறுத்துவரும் சிறீலங்கா அரசு, சர்வதேச விசாரணைகள் எதனையும் நடத்துவதற்கு தான் உடன்படப் போவதில்லை என்றும் விடாப்பிடியாக தெரிவித்து வருகின்றது. அண்மையில் அந்நாட்டின் பாதுகாப்புத்துறைச் செயலாளர் கோத்தபாய ராஜபக்ச பி.பி.சிக்கு வழங்கிய பேட்டியில், போர்க்குற்றம் குறித்து விசாரணைகளை நடத்துவதற்கு எது வித காரணமும் இல்லை என்றும் அதனை நடத்த தான் அனுமதிக்கப்போவதில்லை என்றும் மிகவும் தெனாவெட்டாக கூறியிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, ஐக்கிய நாடுகளின் மனித உரிமைகள் சபையினால் (UNHCR) வன்னிப்பகுதியில் நடைபெற்ற போர்க்குற்றங்கள் தொடர்பான விசாரணையை எதிர்வரும் மார்ச் மாதம் முதலாம் திகதி நடத்தவுள்ளதாக அறிவித்துள்ளனர். சிறீலங்காவின் தொடர்ச்சியான அழுத்தங்களை புறக்கணித்து நடைபெறவுள்ள இவ்விசாரணைகள் சிறீலங்காவுக்கு எதிர்காலத்தில் பாரிய நெருக்கடிகளை கொடுக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இவ்விசாரணைகளை தடுக்கும் நோக்குடன் சிறீலங்காவின் விசேட குழு, சிறீலங்காவின் மனித உரிமைகள் அமைச்சர் மகிந்த சமரசிங்க தலைமையில் ஜெனிவாவில் தங்கியிருந்து பல்வேறு நடவடிக்கைகளையும் மேற்கொண்டு வருகின்றது.

சனல்-4 தொலைக்காட்சியால் வெளியிடப்பட்ட காணொலி மற்றும் போரின்போது பாதிக்கப்பட்டவர்களின் நேரடி சாட்சியங்களின் அடிப்படையில் இவ்விசாரணைகள் நடைபெறவுள்ளதாக ஐநா வட்டாரங்களின் தகவல்கள் தெரிவிக்கின்றன. இவ்விசாரணைக்கு முன்னாள் இராணுவ தளபதி ஜெனரல் சரத் பொன்சேகா இணங்கியிருந்த நிலையிலேயே அவர் கைது செய்யப்பட்டு சிறைவைக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. இதனால் போரின்போது பங்குகொண்ட வேறு இராணுவ தளபதிகளை ஐக்கிய நாடுகள் சபையின் விசாரணைக்கு அழைக்கப்படலாம் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

# சிறீலங்காவில்.....

ளிகளைக் கண்டு எல்லைப் புறக்கிராமச் சிங்களவர்கள் ஓடிய காலம் போய், தமிழர்கள் ஓடவேண்டிய காலம் வந்துவிட்டது என்று கூறியவர்தான் இந்தப் பொன்சேகா. 2002 பெப்பிரவரி 22ஆம் நாள் தேசியத் தலைவர் பிரபாகரனும் சிறீலங்கா பிரதமர் ரணில் விக்கிரமசிங்கவும் நோர்வே மத்தியஸ்தத்தில் உருவான புரிந்துணர்வு உடன்படிக்கையில் கைசாத்திட்டனர். போர் நிறுத்தம் பேச்சுவார்த்தை என்பன இந்த அமைதிக்கான உடன்படிக்கை மூலம் உருவாகின. இந்த உடன்படிக்கை உடைவுக்கு முதலடி கொடுத்தவர் சரத் பொன்சேகா. புரிந்துணர்வு உடன்படிக்கை செயலிழப்பதற்கு அவரே முழுமுதற் காரணியாவார்.

அதியுயர் பாதுகாப்பு வலயம் என்ற பெயரில் 3,340 சதுர மைல்பரப்புக் கொண்ட வட மாகாணத்தின் 15 வீத நிலப்பரப்பு சிங்கள இராணுவத்தின் ஆக்கிரமிப்பில் இருக்கிறது. தமிழர்கள் தம் குடியிருப்புக்கள், விவசாய நிலங்கள், நீர் நிலைகள், மேச்சல் தரவைகள், உல்லாசப் பயணிகளுக்கான நகரப்புற விடுதிகள் என்பன இதிலடங்கும். பலாலி வசாவிளான் போன்ற செம்மண் நிலத்தில் தெற்கில் இருந்து கொண்டு வரப்பட்ட சிங்களத் தொழிலாளர்கள் இராணுவத்தின் உணவுத் தேவைக்காக விவசாயம் செய்கிறார்கள். புரிந்துணர்வு உடன்படிக்கையின் பின் இழந்த நிலத்தை மீளப் பெறலாம் என்ற நப்பாசை தமிழர்களுக்கு இருந்தது. ஒரு அங்குல நிலத்தையேனும் திருப்பித்தர முடியாது என்று அப்போது யாழ் குடாத் தளபதியாகப் பதவி வகித்த பொன்சேகா அடம் பிடித்தார். முதற் கோணல் முழுக் கோணலாக மாறியதோடு போரும் வந்தது.

இன்று சிங்கள தேசம் கொதி நிலையில் இருக்கிறது. பொருளாதார வளர்ச்சி குன்றி விட்டது. பங்குத் சந்தைச் சுட்டெண் கீழ் நோக்கிச் சரிகிறது. அந்நிய நேரடி முதலீடுகள் நின்று விட்டன. ஐரோப்பிய ஒன்றியம் இதுவரை காலமும் வழங்கிய வர்த்தகச் சலுகையை நிறுத்தி விட்டது. ராசபக்ச சகோதரர்களின் குடும்ப ஆட்சிக்கு எதிராக பேரணிகளும் எதிர்ப்பு நடவடிக்கைகளும் பரவலாக நடக்கின்றன. போருக்கென்று ஊட்டி வளர்க்கப்பட்ட இராணுவத்தில் பொன்சேகா – அணி கோத்தபாயா அணி என்ற சேனைகள் உருவாகிவிட்டன. நாடு பிரியும் கட்டத்தை நெருங்கிவிட்டது என்று ஒரு அமெரிக்க அரசறிக்கை கூறுகிறது.

இது தமிழர்கள் அஞ்சி ஓடுங்க வேண்டிய காலம். சிறீலங்காவை விட்டு வெளியேறும் தமிழர்கள் எண்ணிக்கை அண்மையில் உயர்ந்துள்ளது. 1977ஆம் ஆண்டில் ஐக்கிய தேசிய கட்சி உறுப்பினர்களும் சிறீலங்கா சுதந்திரக் கட்சி உறுப்பினர்களும் மோதிக்கொண்டனர். இறுதியில் இரு பகுதியினரும் இணைந்து தமிழர்களைத் தாக்கத் தொடங்கினர். இன்னும் ஒரு இலட்சத்திற்கும் மேறபட்ட தமிழர்கள் செட்டிக்குள தடுப்பு முகாமில் உள்ளார்கள். பெருந்தொகையினர் தெற்கில் கடின வாழ்வு நடத்துகின்றனர். சிறீலங்காவைப் பொறுத்தளவில் போருக்குப்பின் அமைதி என்ற சொற்றொடர் பொருத்தமற்றது.

# ஈழத்தமிழர் மீதான....

கணப்படி இது கலாச்சார இனஅழிப்பு ஆகும்) அதில் மிகப்பெரிய அளவிலான, 1,00,000–க்கும் மேறபட்ட புத்தகங்கள் எரிக்கப்பட்டன. அதுமட்டுமன்றி, 1983–க்கும் 1995–க்கும் இடையில் 1500 (புத்த மதத்தைத் தவிர்த்த) தமிழர்களின் வழிபாட்டுத் தலங்களான கோயில்கள் திட்டமிட்ட முறையில் நாசப்படுத்தப்பட்டன. கொள்ளையடிக்கப்பட்டன. குண்டுவீசி அழிக்கப்பட்டன. 1995 முதல் 2002 வரை நடைபெற்ற ஈழப்போர் 3ல் 899 கிறித்துவ தோலயங்களும் அழிக்கப்பட்டன. குண்டுவீசி சிதைக்கப்பட்டன. இப்படியான முறையில் பல ஆண்டுகளாக தொடர்ச்சியாக சிங்களர்களால், இலங்கைத் தீவின் தேசிய இனமான தமிழர்களின் உயிர்களும் உடமைகளும் அழிக்கப்பட்டு ஒரு இன அழிப்பிற்கு உட்படுத்தப்பட்டதைப் புரிந்துக்கொள்ளலாம்.

5. (2) போலந்து நாட்டில், யூதமக்கள் வாழ்விடங்களில், அய்ரோப்பாவின் பிறபாகங்களிலிருந்து கொணர்ந்த ஜேர்மனியர்கள் குடியேற்றப்பட்டு யூதமக்களின் விகிதாச்சாரம் குறைக்கப்பட்டதோ அதைப்போன்றே, இலங்கைத் தீவில், 1951–க்குப் பிறகு கல்லோயா, காந்தளாய், மகாவலி ஆகிய இடங்களில் அரசு ஆதரவுடன் நடைபெற்ற சிங்களக் குடியேற்றத்தினால், கிழக்கு மாகாணத்தில் இருந்த தமிழர்களின் விகிதாச்சாரம் வெகுவாகப் பாதிக்கப்பட்டதை நினைவிற்கொள்ளலாம்.

எவ்வாறு, ஜேர்மானிய மயப்படுத்தல் மூலம், யூதமக்களின் வாழ்விடங்களில் பாரம்பரியத் தெருக்களின் பெயர்கள் மாற்றப்பட்டனவோ, அவ்வாறே, தமிழ் மக்களின் நகரங்கள், கிராமங்கள், தெருக்கள் ஆகியவற்றின் பாரம்பரியப் பெயர்கள் முற்றாக அழிக்கப்பட்டு, அதற்குப் பதிலாக, அவ்விடங்களில் சிங்களப் போர் வீரர்களின் பெயர்கள் வைக்கப்பட்டன.

5.(3) நாசிசவாதிகளின் அரசு, தொடக்கக் காலத்தில், ஜேர்மன் யூதர்கள், தங்களின் உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு, வெளிநாட்டிற்குக் குடிபெயர்ந்து செல்வதை ஊக்குவித்தன. அதுபோன்றே, வட–கிழக்குப் பகுதியினில் வாழ்ந்த 30 இலட்சம் தமிழ் மக்களில் 10 இலட்சத்திற்கும் மேறபட்டோர், சிங்களர்கள் அரசு ஆதரவோடு நடத்தும் கொலைவெறி ஆட்டத்திலிருந்து தப்பிப்பதற்காக, அங்கிருந்து அகதிகளாக எண்ணற்ற வெளிநாடுகளுக்குக் குடிபெயர்ந்தனர்.

6.(1) ஜெர்மானிய நாசிச வாதிகள் கைப்பற்றப்பட்ட இடங்களில் இருந்த சுயாட்சி நிர்வாக நிலையங்கள் முற்றிலும் அழிக்கப்பட்டு யூதர்களின் உரிமைகள் ஒடுக்கப்பட்டன. இலங்கையினில், 1956–தனிச் சிங்களச் சட்டம் நடைமுறைக்கு வந்தபின், உள்ளாட்சி நிர்வாகங்கள், தமிழில் நடத்துவதற்குத் தடை செய்யப்பட்டன. தமிழ் அரசாங்க ஊழியர்களது வேலைகள் பறிக்கப்பட்டன. அதன் வாயிலாக, அரசாங்கச் சேவையில் தமிழர்களின் விகிதாச்சார எண்ணிக்கை பெருமளவில் திட்டமிட்டுக் குறைக்கப்பட்டது.

6.(2) நாசிசவாதிகள், யூதஇனத்தின்மீதான பரந்தளவிலான அளவில் தடுப்புக்காவல் சட்டங்களினால், அவர்களின் அமைதியான வாழ்க்கையை சீர்குலைத்தனர். அதற்கு இணையாக, இலங்கையில் சிங்களர்கள், தமிழினத்தை ஒடுக்கும் முறையில் உருவாக்கப்பட்ட பயங்கரவாதத் தடைச்சட்டத்தின்கீழ் (PTA) பரந்த தடுப்புக்காவலைத் திணித்தனர். அச்சட்டத்தின் துணையுடன், கைது செய்யப்படும் தமிழர்கள், குற்றம் சுமத்தப்படாமலேயே ஓராண்டு வரை, திட்டமிட்டு தடுப்புக் காவலிலேயே அழித்தொழிக்கப்பட்டனர். பின் துனு வேவா எனும் இடத்தில் இப்படியாக எண்ணற்ற தமிழகள் தடுப்புக்காலிலேயே அழிக்கப்பட்டதே மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். அதுமட்டுமன்றி தமிழர்கள் வாழும் பகுதிகளில், 30 வருடங்களுக்குத் தொடர்ந்து ஊரடங்குச் சட்டத்தின் வாயிலாக யூதர்களுக்கிணையான, கூறப்போனால், அதை விட சற்றே அதிகளவில், சிங்களர்களால் தமிழினத்திற்கெதிரான திட்டமிட்ட இனஅழிப்பு வேலை, மேற்கொள்ளப்பட்டு வருவதை நம்மால் புரிந்து கொள்ள இயலும்.

மிகுதி அடுத்த இதழில்...






**Ganesh Thangarajah**
Real Estate Broker
**416-994-9046**



Busy Greek Restaurant for sale in Guelph



Tamil grocery store in Maple



Greek Restaurant for sale In Maple



Whitby 2500 sqf
4 Bdr., Detached 2-Storey



Mavis / Derry
3 Bdr., Semi house



Bovaird/Hwy 10
3 Bdr., Twonhouse



9th line / Steeles
4 Bdr., 3 y old Detached house



Morningside /Old Finch
4 Bdr., Detached 2-Storey



In Maple
3 Bdr., Semi-Detached 2-Storey



Kennedy / Eglinton (Mississagua)
3 Bdr., 2-Storey






Kingston & Eglinton
2+1 Bdr., Condo Apt




HomeLife Today Realty Ltd., Brokerage* 31 Progress Ave., Suite 210, Toronto, ON M1P 4S6 Tel: 416-298-3200